# முகவுரை

ஸ்ரீமந்நிகமாந்தமஹா தேசிகன் அருளிச் செய்த ஸ்ரீரஹஸ்யத்ரய ஸாரத்தின் ஒவ்வொரு அதிகாரங்களின் முதலிலும் கடைசியிலும் இருக்கும் சுலோகங்களுக்கு எளிதான தமிழ் நடையில் பதவுரையும் கருத்துரையும் விசேஷார்த்தங்களும் வரிசையாய் எழுதப்பட்டிருக்கின்றன. இந்த சுலோகங்களுக்கு வ்யாக்யாநம் எழுதியிருக்கிற ஸாராஸ்வாதிநி முதலான வ்யாக்யானங்களில் வடமொழிச் சொற்களும், வடமொழி வாக்கியங்களும் அதிகங்களாயிருப்பதால் அந்த பாஷை தெரியாதவர்களுக்கு அவைகள் உபயோகப்படுகிறதில்லை. இதில் கூடியவரையில் வடமொழிச் சொற்கள் கலக்கவில்லை. வியாக்யாநங்களை அநுஸரித்து அறிய வேண்டிய விஷயங்கள் ஒன்றையும் விடாமல் இதில் எழுதியிருக்கிறது. ஸ்ரீதேசிகன் கிரந்தத்தை ஒருவன் ஆசாரியனிடம் ஸேவித்துப் பிறகு, அதைச் சிந்தனைப் பண்ணும் காலத்தில் இது அவனுக்கு உபயோகப்பட வேணுமென்று எழுதப்பட்டிருக்கிறது.

திருக்குடந்தை
பவ-ஞு தை-மீ 29௳ } V. K. ராமாநுஜதாஸன.



॥ ஸ்ரீ: ॥

# விஷய ஸூசிகை.



ஸ்ரீ: ||

# பிழை திருத்தம்.



| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 7 | 5 | ஶரா | ஶ்ரா |
| 8 | 3 | இபபோது | இப்போது |
| 21 | 35 | அதிாகரத்தின் | அதிகாரத்தின் |
| 23 | 4 | ருக்கும | ருக்கும் |
| ,, | 15 | ஜஞான | ஜ்ஞான |
| 31 | 8 | துக | துக் |
| ,, | 11 | ஆசைப்படுத்துவ | ஆசைப்படுவ |
| 35 | 17 | அதில் | அதின் |
| 37 | 3 | பகதியின் | பக்தியின் |
| 55 | 8 | ஜஞானம | ஜ்ஞானம |
| 68 | 11 | என்றும | என்றும் |
| 78 | 26 | புருஷார்க்தம் | புருஷார்த்தம் |
| 80 | 19 | பக்தியும். பிரபத்தியும், | பக்தியும், பிரபத்தியும். |
| 98 | 21 | ஜஞானமுடைய | ஜ்ஞானமுடைய |

𑌶𑍍𑌰𑍀𑌮𑌤𑍇 𑌵𑍇𑌦𑌾𑌨𑍍𑌤𑌰𑌾𑌮𑌾𑌨𑍁𑌜𑌮𑌹𑌾𑌦𑍇𑌶𑌿𑌕𑌾𑌯 𑌨𑌮𑌃 ॥
𑌶𑍍𑌰𑍀𑌮𑌤𑍇 𑌗𑍋𑌪𑌾𑌲𑌾𑌰𑍍𑌯𑌮𑌹𑌾𑌦𑍇𑌶𑌿𑌕𑌾𑌯 𑌨𑌮𑌃 ॥
𑌜𑍍𑌞𑌾𑌨𑌵𑍈𑌰𑌾𑌗𑍍𑌯𑌨𑌿𑌷𑍍𑌠𑌾𑌨𑌶𑍇𑌵𑌧𑌯𑍇 𑌶𑍍𑌰𑍀𑌮𑌤𑍇
𑌵𑍇𑌦𑌾𑌨𑍍𑌤𑌰𑌾𑌮𑌾𑌨𑍁𑌜𑌮𑌹𑌾𑌦𑍇𑌶𑌿𑌕𑌾𑌯 𑌨𑌮𑌃 ॥
𑌶𑍍𑌰𑍀𑌮𑌤𑍇 𑌨𑌿𑌗𑌮𑌾𑌨𑍍𑌤𑌮𑌹𑌾𑌦𑍇𑌶𑌿𑌕𑌾𑌯 𑌨𑌮𑌃 ॥

# அதிகாரஸங்க்ரஹ ஶ்லோகங்கள்.

𑌶𑍍𑌰𑍀𑌮𑌾𑌨𑍍𑌵𑍇𑌙𑍍𑌕𑌟𑌨𑌾𑌥𑌾𑌰𑍍𑌯𑌃 𑌕𑌵𑌿𑌤𑌾𑌰𑍍𑌕𑌿𑌕𑌕𑍇𑌸𑌰𑍀 ।
𑌵𑍇𑌦𑌾𑌨𑍍𑌤𑌾𑌚𑌾𑌰𑍍𑌯𑌵𑌰𑍍𑌯𑍋 𑌮𑍇 𑌸𑌨𑍍𑌨𑌿𑌧𑌤𑍍𑌤𑌾𑌂 𑌸𑌦𑌾 𑌹𑍃𑌦𑌿 ॥

𑌗𑍁𑌰𑍁𑌭𑍍𑌯𑌸𑍍𑌤𑌦𑍍𑌗𑍁𑌰𑍁𑌭𑍍𑌯𑌶𑍍𑌚 𑌨𑌮𑍋𑌵𑌾𑌕𑌮𑌧𑍀𑌮𑌹𑍇 ।
𑌵𑍃𑌣𑍀𑌮𑌹𑍇 𑌚 𑌤𑌤𑍍𑌰𑌾𑌦𑍍𑌯𑍌 𑌦𑌮𑍍𑌪𑌤𑍀 𑌜𑌗𑌤𑌾𑌂𑌪𑌤𑍀 ॥ ௧ ॥

(பதவுரை) 𑌗𑍁𑌰𑍁𑌭𑍍𑌯𑌃 - நம்முடைய குருவுக்கும், 𑌤𑌦𑍍𑌗𑍁𑌰𑍁𑌭𑍍𑌯𑌃 𑌚 - அவருடைய குருக்களுக்கும், 𑌨𑌮𑍋𑌵𑌾𑌕𑌮𑍍 - நம: என்கிற சொல்லை, 𑌅𑌧𑍀𑌮𑌹𑍇 - சொல்லுகிறோம். 𑌤𑌤𑍍𑌰 - அவர்களில், 𑌆𑌦𑍍𑌯𑍌 - முதல் குருக்களான, 𑌜𑌗𑌤𑌾𑌂 𑌪𑌤𑍀 - உலகங்களுக்கு ஸ்வாமிகளான. 𑌦𑌮𑍍𑌪𑌤𑍀 𑌚 - பிராட்டியையும் எம்பெருமானையும், 𑌵𑍃𑌣𑍀𑌮𑌹𑍇 - நாம் அடைய வேண்டியவர்களாகவும், அதற்கு உபாயமாகவும் வரிக்கிறோம்.

குறிப்பு:— (1) ஸ்ரீ தேசிகன் தன்னுடைய ஆசாரியனை அப்புள்ளாரை "𑌗𑍁𑌰𑍁𑌭𑍍𑌯𑌃" என்கிற பன்மைச் சொல்லால் சொன்னது அவரிடம் தனக்குள்ள கௌரவத்தைக் காண்பிப்பதற்காக.

(2) இந்த முதற் சொல்லாலேயே அவர் குருக்களையும் சொல்லக் கூடியதாயிருக்கையில், "𑌤𑌦𑍍𑌗𑍁𑌰𑍁𑌭𑍍𑌯𑌃" என்று தனித்துச் சொன்னதற்கு கருத்து-ஒருவன் தன்னுடைய குருவையும், அவருடைய குருக்களையும் வணங்கவேண்டும் என்று சொல்லுகிற பிரமாணத்தைக் காட்டவேண்டும்— என்று.

(3) '𑌚' என்கிற சொல், குருவையும் வணங்கவேண்டியது, அவர் குருக்களையும் வணங்கவேண்டியது, ஒன்றை விட்டு ஒன்

றைச் செய்யக் கூடாது—என்று காட்டுகிறது. இப்படி அர்த்தத்தைச் சொல்லும்போது வகாரமானது உதரொதாரயொமத்தைச் சொல்லுகிறது- சுலோகத்தில் பின்பாதியிலிருக்கும் 'வ' என்பதானது ஸமுச்சயம் என்கிற பொருளைச் சொல்லுகிறது. அதாவது— சொல்லப்பட்ட இரண்டு விஷயங்களில் ஒன்றைச் செய்யலாம், ஒன்றைச் செய்யாமலிருக்கலாம் என்றுகாட்டுகிறது.

(4) "நமஃ" என்கிற சொல் நமஸ்காரத்தையும், பிரபத்தியையும், பெரியோர்களிடம் இருக்கவேண்டிய வணக்கத்தையும் சொல்லுகிறது. இந்த மூன்று பொருள்களும் இங்கே வேண்டுமென்று கருத்தினால் இங்கு "நம: என்கிற சொல்" என்று சொல்லியிருக்கிறது. நமஸ்காரம் பண்ணுகிறேன் என்று சொன்னால் ஒரே பொருள் தான் கிடைக்கும்.

(5) "ஐயீசவெஹ" என்பதற்கு குருவை வணங்குவது வேதத்தைப்போல் இருக்கிறதென்று கருத்து.

(6) "ஜமதாம் உதீ" என்று இரண்டுபேர்களை உலகத்துக்குப் பதி என்று சொல்லுவதால் இரண்டுபேர்களுக்குள் கலஹம் வருமோ என்று ஸந்தேஹம் வரும். அதைத் தீர்ப்பதற்காக—"ஹம்வதீ" என்கிற சொல். பிராட்டி எம்பெருமானுக்குப் பத்தினியாய், அவன் அபிப்பிராயத்தை ஒத்து இருப்பவளாகையாலே கலஹம் வராதென்று கருத்து.

(7) இந்த சுலோகத்தில் குருவை வணங்கினதைச் சொன்னபடியாலே, ஒருவன் ஆசாரியனை யடையவேண்டுமென்றும், "தஜ்ஞாறுஹோ" என்பதால், தன் ஆசாரியனை வணங்கும் போது அவர் ஆசாரியர்களையும் வணங்கவேண்டும் என்றும், "தத்ராஜ்ஞள" என்பதால், இதை எம்பெருமான் உள்படச் செய்யவேண்டுமென்றும் காட்டப்படுகிறது. இது இதில் சொல்லப்போகிற முதலாவது இரண்டாவது விஷயங்கள்.

---

அவ- ஒருவன் குருவினிடத்தில் மிகுந்த பக்தியுள்ளவனாயிருக்கவேண்டுமென்று சொல்லப்பட்டது. ஸம்ஸாரத்திலிருக்கும் போது, அந்த பக்தி வருவதற்கு அநேகம் தடைகளிருக்கின்றன; அவைகள் போய் பக்தி உண்டாகவேண்டுமென்று ஒவ்வொரு

நாளும் பிரார்த்திப்பதற்காக ஒரு சுலோகத்தை யருளிச் செய்கிருர்:—

ஏதே மஹ்யமபோடமந்மதஶரோந்மாதாய நாதாதய
த்ரய்யந்தப்ரதிநந்தநீயவிவிதாசாரா: ரோசந்தாமிஹ ।
ஶ்ரத்தாதவ்யஶரண்யதம்பதிதயாதிவ்யாபகாப்ராபகா:
ஸ்மயோத்ராவிப்லவவிப்ரலம்பவஸதிப்ரேஷிகா தேஶிகா: ॥

(பதவுரை) ஏதே - இந்த, நாதாதய: - நாதமுனிகள் முதலான, தேஶிகா: - ஆசாரியர்கள், இஹ - இந்த ஸம்ஸாரத்திலிருக்கும்போதே, அபோடமந்மதஶரோந்மாதாய - மந்மதனுடைய பாணங்களாலுண்டான கலக்கங்கள் நீங்குவதற்காக, மஹ்யம் - எனக்கு, ரோசந்தாம் - ருசிக்கவேண்டும். அவர்கள் எப்படி யிருந்தார்கள் என்ருல், த்ரய்யந்த - உபநிஷத்துக்களால், ப்ரதிநந்தநீய - ஸந்தோஷத்துடன் கொண்டாடும்படியான, விவித - அநேகவிதங்களான, ஆசாரா: - சரித்திரங்களை யுடையவர்கள், ஶ்ரத்தாதவ்ய - விச்வாஸம் பண்ணத்தகுந்த, ஶரண்ய - சரண்யர்களாகிய, தம்பதி - பிராட்டியினுடையவும் எம்பெருமானுடையவும், தயாதிவ்யாபகா - தயையாகிய கங்கையை, ப்ராபகா: - நம்மிடத்தில் வரும்படி செய்தவர்கள், ஸ்மயோத்ரா - தாம் படித்தவர்கள் என்கிற கர்வத்தாலே மற்றவர்களை அவமானப்படுத்துவதில் விருப்பம், விப்லவ - முன்ேனார்களால் ஏற்படுத்தப்பட்ட நல்ல மார்க்கத்தையழிப்பது, விப்ரலம்ப - வஞ்சனை, வஸதிப்ரேஷிகா: - இவைகளிருக்கிறவிடத்தில் இல்லாதவர்கள்.

(கருத்து) எனக்கு விஷயங்களிலிருக்கிற ஆசை போய், இந்த ஆசாரியர்களிடம் பக்தி யுண்டாகவேண்டும். அவர்களுடைய ஜ்ஞாநமானது உபநிஷத்துக்களும் கொண்டாடும்படியாயிருக்கிறது. அவர்கள் மிகுந்த தாழ்ந்த என்னிடத்திலும், எம்பெருமானுடைய கிருபை வரும்படி செய்தார்கள். அவர்களிடத்தில் உரையில் சொன்ன குற்றங்கள் ஒன்றுமில்லை.

குறிப்பு:— (1) மந்மதனுடைய பாணத்தினுலுண்டான கலக்கம் என்று சொல்லியபோதிலும், எல்லாவிஷயங்களிலுமுள்ள ஆசை போகவேண்டுமென்பது கருத்து.

(2) இவர்களுடைய அநுஷ்டாநத்தையும், இவர்கள் வாதிகளைக் கண்டிக்கும் போது சொன்ன ஸூக்திகளையும் பார்த்து, "ஆ! இவர்கள் வேதத்தின் அர்த்தத்தை நன்றாய் அறிந்திருக்கிறார்கள்" என்று உபநிஷத்துக்களே ஸந்தோஷப்பட்டுக் கொண்டாடும்படியாயிருந்தது.

(3) பகீரதன் கங்கையைப் பாதாளலோகம் கொண்டுபோய் தன் பாட்டனார்களின் சாம்பலை நனைத்தது போல், ஆசாரியர்கள் எம்பெருமானுடைய கிருபைக்கு நம்மை விஷயமாகப் பண்ணினார்கள். இதனால் அவர்களுடைய கருணை காட்டப்படுகிறது.

(4) ஒருவன் குணமுள்ளவனும், குற்றமில்லாதவனுமிருந்தால்தான் அவனிடத்தில் பக்தியுண்டாகும். சுலோகத்தில் பக்தி வேண்டப்படுவதால், குணமுடைமையும், தோஷமில்லாமையும் சொல்லவேண்டியது. இதைச் சுலோகம் சொல்லுகிறது. சிஷியனுக்கு வேண்டிய ஆசாரியனுடைய குணம்— ஜ்ஞாநமும் கருணையும். அந்த இரண்டும் இங்கே காட்டப்பட்டன.

---

அவ:— குருவைப் பிரகாசிப்பிக்கவேண்டுமென்று சொல்லப்பட்டது. அப்படிப் பிரகாசம் பண்ணும்விதத்தைக் காண்பிக்கிறார்—

ஹ்ருத்யா ஹ்ருத்பத்மஸிம்ஹாஸநரஸிகஹயக்ரீவஹேஷோ
ர்மிகோஷக்ஷிப்தப்ரத்யர்த்தித்ருப்திர்ஜயதி பஹுகுணா
பங்க்திரஸ்மத்குரூணாம் | திக்தந்த்யாவாஸஜைத்ரத்வஜபடபவந
ஸ்பாதி நிர்தூததத்த்வஸித்தாந்தஸ்தோமதூலஸ்தபகவிகமநவ்ய
க்தஸத்வர்த்தநீகா || ௧ ||

(ப-ரை) பஹுகுணா - அநேககுணங்களை யுடையதும், ஹ்ருத்யா - மனதிற்குப் பிடித்ததுமான, அஸ்மத்குரூணாம் பங்க்திः - நம்முடைய ஆசாரியர்களுடைய வரிசை, ஜயதி - நன்றாய் விளங்குகிறது. அந்த குருக்களின் வரிசை எவ்விதமிருந்ததென்றால், ஹ்ருத்பத்ம - ஹிருதயகமலமாகிற, ஸிம்ஹாஸநரஸிக - ஸிம்ஹாஸநத்தில் ஆசையுடன் எழுந்தருளியிருந்த, ஹயக்ரீவ - ஹயக்ரீவனுடைய, ஹேஷோர்மி - அலைகள் போல் வரும் கனைப்புகளுடைய, கோஷ - சப்தத்தாலே, க்ஷிப்த -

போக்கடிக்கப்பட்ட, ப்ரத்யர்த்யுத்ருப்தி: - வாதிகளின் கர்வத்தையுடையது, திக்ஷு - திக்குகளாகிற மாடிகளில், பத்த - கட்டப்பட்ட, ஜைத்ர - ஜயத்தைத் காட்டும், த்வஜபட - கொடிகளின் துணிகளுடைய, வாத - காற்றினுடைய, ஸாதி- விருத்தியினாலே, நிர்தூத - பறக்கடிக்கப்பட்ட, தத்தத்ஸித்தாந்தஸங்காத - அந்தந்த ஸித்தாந்தங்களுடைய கூட்டமாகிற, தூலௌக - பஞ்சுக்கொத்துக்களுடைய, விகம - போனமையாலே, வ்யக்த - நன்றாய்த் தோன்றுகிற, ஸத்பதா - நல்லமார்க்கத்தை யுடையது.

(கருத்து) ஆசாரியர்கள் வாதஞ்செய்து, எதிரிகளினுடைய கர்வத்தைப் போக்கினார்கள். வாதிகள் அந்தந்த மதத்தை ஸ்தாபித்து, மோக்ஷமார்க்கத்தைத் தெரியாதபடி பண்ணியிருந்தார்கள். ஆசாரியர்கள் கிரந்தங்களை எழுதி அந்தந்த மதங்களைக் கண்டித்து, மறைந்து போன நல்ல மார்க்கத்தை எல்லாரும் அறியும்படி செய்தார்கள்.

குறிப்பு:— (1) மூலத்தில் எம்பெருமானே ஆசாரியரூபமாக அவதரிக்கிறானென்று சொல்லியிருக்கிறது. இந்த ச்லோகத்தில் ஹயக்ரீவனைச் சொன்னதினால் அது காட்டப்படுகிறது.

(2) ஒரு ஊரில் மாடிகளில் கட்டப்பட்ட கொடிகளுடைய காற்றானது தெருவை மறைத்துக் கொண்டிருக்கும் பஞ்சைப் பறக்கடித்து, தெருவை தெரியும்படி செய்வது போல, ஆசாரியர்கள் கிரந்தமெழுதி துர்வாதிகளின் மதங்களைக் கண்டித்து, அவைகளால் தெரியாதிருந்த மோக்ஷமார்க்கத்தை நன்றாய் அறியும்படி செய்தார்கள்.

(3) மதங்களைப் பஞ்சுக் கொத்தாகச் சொன்னதாலே, அவைகளைக் கண்டிப்பதில் வருத்தமில்லை என்று காட்டப்படுகிறது.

# श्रीरहस्यत्रयसारः ।

## 1-வது உபோத்காதாதிகாரம்.

आभगवत्तः प्रथितामनवद्यामाचार्यसन्ततिं वन्दे ।
मनसि मम यत्प्रसादात् वसति रहस्यत्रयस्य सारोऽयम् ॥

(ப-ரை) अनवद्याम् - ஒருவிததோஷமுமில்லாத, प्रथिताम् - பிரஸித்தமான, आचार्यसन्ततिम् - ஆசாரியர்களின் வரிசையை, आभगवत्तः - எம்பெருமானுள்பட, वन्दे - நமஸ்காரஞ்செய்கிறேன். यत्प्रसादात् - எவர்களுடைய அநுக்ரஹத்தால், मम - என்னுடைய, मनसि - மனதில், अयं रहस्यत्रयस्य सारः - இந்த ரஹஸ்யத்ரயத்தின் ஸாரமான அர்த்தம், वसति - நிலையாயிருக்கிறதோ.

குறிப்பு:— "अयम्" என்பதால் எழுதப்போகிற கிரந்தத்தின் அர்த்தமானது ஸ்ரீ தேசிகன் முன்னாலேயே இருந்தது என்று காட்டப்படுகிறது.

---

कर्मब्रह्मात्मके शास्त्रे कौतस्कुतनिवर्तकान् ॥
वन्दे हस्तिगिरीशस्य वीथीशोधककिङ्करान् ॥ २ ॥

(ப-ரை) कर्मब्रह्मात्मके - கர்மவிசாரம் பிரும்மவிசாரம் என்கிற இரண்டு பாகத்தையுடைய, शास्त्रे - சாஸ்திரத்தில், कौतस्कुतनिवर्तकान् - ஹைதுகர்களைக் கண்டித்தவர்களும், हस्तिगिरीशस्य - ஹஸ்திகிரியில் எழுந்தருளியிருக்கும் நியந்தாவான எம்பெருமானுடைய, वीथीशोधककिङ्करान् - வீதிகளிலிருக்கும் குப்பைகளைப் போக்கி சுத்தஞ்செய்வதாகிய கைங்கரியம் செய்தவர்களுமான அப்புள்ளாரை, वन्दे - நமஸ்காரம் செய்கிறேன்.

குறிப்பு:— (1) வாதிகளைக் கண்டித்ததையும், தெருக்களை சுத்திசெய்ததையும் சேர்த்துச் சொன்னதினாலே, குப்பையைப் பெருக்குவதுபோல் வாதிகளைக் கண்டித்தது அவருக்கு லகுவாயிருந்தது என்று காட்டப்படுகிறது.

# உபோத்காதாதிகாரம்

*இந்த அதிகாரத்தின் முதல் சுலோகம்.*

*கௌஸ்துப இவ ஶௌரேர் நித்யஹ்ருத்யோऽபி ஜீவ:*
*கலுஷமதிரவிந்தந் கிங்கரைஶ்வர்யராஜ்யம் ।*
*விதிவஶநியதிஹேதோர்வீக்ஷிதஸ்தேந காலே*
*குருபரிஷதுபஜ்ஞம் ஸமாவேத்ய கோபாயதி ஸ்வம் ॥*

*(ப-ரை) ஶௌரே: - சூரன் என்கிறவருடைய குலத்தில் கிருஷ்ணனாய் அவதரித்த எம்பெருமானுக்கு, கௌஸ்துப இவ - கௌஸ்துபம் என்கிற சிலாக்கியமான ரத்தினம்போல, ஜீவ: - ஜீவன், நித்யஹ்ருத்ய: அபி - எப்போதும் வேண்டியவனாயிருந்தபோதிலும், கலுஷமதி: - கலங்கின புத்தியை யுடையவனாய், அதினால், கிங்கரைஶ்வர்யராஜ்யம் - எம்பெருமானுக்குக் கைங்கரியம் செய்வதாகிய பெரியபாக்யத்தை, அவிந்தந் - அடையாதவனாய், விதிவஶநியதிஹேதோ: - ஒரு புண்ணியம் பலனைக் கொடுக்கும்போது, காலே - ஒரு காலத்தில், தேந - அந்த எம்பெருமானாலே, வீக்ஷித: - பார்க்கப்பட்டவனாய், குருபரிஷதுபஜ்ஞம் - குருக்களின் கூட்டத்தை அடைவது முதலாக, ஸ்வம் - தன் ஸ்வரூபத்தை, ஸமாவேத்ய - தெரிந்து, கோபாயதி - அதை ரக்ஷிக்கிறான்.*

*(கருத்து) எம்பெருமானுக்கு ஜீவன் எப்போதும் வேண்டியவன். ஆகையால் அவனிருக்கும் பரமபதத்தில் போய் அவனும் பிராட்டியுமிருப்பதை அநுபவித்து, அவர்களுக்குக் கைங்கரியம் செய்யத் தகுந்தவன். ஆனால், அவன் அதை இப்போது அடையவில்லை. இதற்குக் காரணம், அவன் தன்னை உடம்பாகவும், உடம்பைச் சேர்ந்தவர்களை தன்னுடையவர்களென்றும் எண்ணி, அவர்களுக்காகப் பாடுபட்டு, அவன் மனது கலங்கியிருக்கிறது. எம்பெருமான், ஸஹஜமான கருணையினாலே அவனை ரக்ஷிப்பதற்கு எப்போது இடம் அகப்படப்போகிறது என்று பார்த்துக் கொண்டிருப்பதால், ஜீவன், அறியாமல் செய்த ஒரு நல்ல வேலையைப் புண்ணியமாகக் கணக்கிட்டு, அதை வியாஜமாகக் கொண்டு அவன் பிறக்கும் போது எம்பெருமான் அவனைப் பார்க்கிறான். இதைக் காரணமாகக் கொண்டு படிப்படியாக ஜீவன் ஆசாரியர்களை அடைந்து, அவர்களிடமிருந்து தன் ஸ்வரூபத்தை அறிந்து பிரபத்தியைச் செய்து, கைங்கரியமாகிற ஸம்பத்தை அடைந்து தன்னை ரக்ஷித்துக் கொள்ளுகிறான்.*

குறிப்பு:— (1) சுலோகத்தின் முதல் பாதத்தால், ஜீவன் இருக்கவேண்டிய இருப்பும், இரண்டாவது பாதத்தால் அவன் இப்போது இருப்பதும், பாக்கி சுலோகத்தால், எப்படி அவன் நல்ல கதி யடையலாம் என்பதும் சொல்லப்படுகின்றன.

(2) "ஸ்வஸ்த" என்கிற சொல்லானது, மூலமந்திரத்தின் அர்த்தத்தையும், "போவாயதி" என்பதால் பிரபத்தியைச் சொல்லுகிற த்வயமந்திரத்தின் பொருளும், "கிம்கரஸ்வ" என்பதால் புருஷார்த்தத்தைச் சொல்லுகிற சரமச்லோகத்தின் பொருளும் காட்டப்படுகின்றன. ஆகையால் இந்த மூன்று ரஹஸ்யங்களும் இந்த கிரந்தத்திற்கு விஷயமென்றும் ஸ்வரூபத்தை அறிவதும், பிரபத்தி பண்ணுவதும், கைங்கரியத்தைப் பெறுவதும் இந்த கிரந்தத்தின் பிரயோஜநங்கள் என்றும் காட்டப்படுகின்றன.

(3) கௌஸ்துப உதாஹரணத்தால், ஜீவன் ஸ்யபாவத்தில் குற்றமில்லாதவன் (நிர்தோஷன்) என்றும், அவனுடைய ஸ்வரூபம் ஆநந்தமென்றும், அவன் எம்பெருமானுக்கு அதிசயத்தை அதாவது — ப்ரீதியைச் செய்யத் தகுந்தவன் என்றும் காட்டப்படுகிறது.

(4) கிம்கரஸ்வாயிராஜ்யஸ்த— எம்பெருமானுடைய கைங்கரியமானது ஒரு பெரிய பாக்கியம். இப்போது கர்மத்தினால் அது அப்படித் தோன்றவில்லை.

(5) எம்பெருமான் ஜீவனைப் பார்ப்பதற்குக் காரணமும், அதின் பலனும், அடியில் வரும் சுலோகத்தால் தெரியவரும்.

ஈச்வரஸ்ய ச ஸௌஹார்தம் யத்ருச்சாஸுக்ருதம் ததா ।
விஷ்ணோ: கடாக்ஷமத்வேஷ ஆபிமுக்யம் ச ஸாத்விகை: ॥ ஸம்பாஷணம் ஷடேதானி ஹ்யாசார்யப்ராப்திஹேதவ: । நியந்தாவான எம்பெருமான் எல்லா ஜீவன்களும் நன்றாயிருக்கவேணும் என்று எண்ணுவது, அறியாமலும் எண்ணமில்லாமலும் செய்யப்பட்ட ஒரு புண்ணியம், எம்பெருமான் அவன் பிறக்கும்போது அவனைக் கடைக் கண்ணால் பார்ப்பது, ஸாத்துவிகர்களிடத்தில் இருந்த த்வேஷம் போவது, அவர்களுக்கு முகங்கொடுப்பது, அவர்களுடன் பேசுவது—ஆகிய இந்த ஆறும் ஒருவன் ஆசாரியனை அடைவதற்குக் காரணங்கள்.

அவ:— முன் ச்லோகத்தில் "விபிவரிணதிஹேஷாஸ" என்கிற பாகத்தை கடைசி ச்லோகத்தால் விரிவாய்ச் சொல்லுகிறார்:—

கர்மாவித்யாதிசக்ரே ப்ரதிபுருஷமிஹாநாதிசித்ரப்ரவாஹே தத்தத்காலே விபக்வம் பவதி ஹி விவிதம் ஸர்வஸித்தாந்தஸித்தம் । தஸ்மிந் ஸ்வாவகாசப்ரதமகுருதயாக்ருஹீதஃ கஶ்சிதித்தம் முக்தைச்வர்யாந்தஸம்பந்நியதேஃ பதம் பவிதா கஶ்சித் விபஶ்சித் ॥ ௭ ॥

(ப-ரை) அநாதிசித்ரப்ரவாஹே - அநாதியாயும் வெவ்வேருயும் பிரவஹித்துக்கொண்டிருக்கிற, இஹ - இந்த, கர்மாவித்யாதிசக்ரே - கர்மம் அவித்யை இவை முதலான சக்ரத்தில், ப்ரதிபுருஷம் - ஒவ்வொருவனுக்கும், தத்தத்காலே - அந்த அந்த காலத்தில், விபக்வம் - பலன் கொடுப்பதானது, விவிதம் - வெவ்வேருக, பவதி - வருகிறது; ஹி - இது பிரஸித்தமான விஷயம். ஸர்வஸித்தாந்தஸித்தம் - (இது)எல்லா ஸித்தாந்திகளாலும் ஒப்புக்கொள்ளப்பட்டது. தஸ்மிந் - இதிலே அடையப்பட்ட, ஸ்வாவகாச - தன்னுடைய இடத்தையுடைய, ப்ரதமகுருதயா - முதல் குருவான எம்பெருமானுடைய கருணையாலே, க்ருஹீதஃ - பிடிக்கப்பட்டவனாய், கஶ்சித் விபஶ்சித் - ஜ்ஞாநமுள்ள ஒருவன், இத்தம் - இப்படி, (முதல் ச்லோகத்தில் சொன்னபடி) முக்தைச்வர்யாந்த - முக்தனுடைய ஐச்வரியம் வரையிலுள்ள, ஸம்பந்நியதேஃ பதம் - பாக்கியத்திற்கு இருப்பிடமாகவும், பவிதா - ஆவன்.

(கருத்து) ஒருவனுடைய கர்மங்கள் ஒன்றின் பின் ஒன்ருக ஆறுபோல் பெருகிக்கொண்டிருக்கின்றன. ஒருவனுடைய கர்மப்ரவாஹம்மற்றவர்களின்கர்மப்ரவாஹங்களைக்காட்டிலும் வேருயிருக்கும். அது இப்போது ஆரம்பித்ததென்று சொல்லமுடியாது. இந்தக் கர்மப்ரவாஹங்கள் வெவ்வேருயிருப்பதால், கர்மங்கள் பலன்கள் கொடுக்கும் காலங்களும் வெவ்வேருக இருக்கும். ஆகையால் ஒருவனுக்கு ஒரு புண்ணியம் பலன் கொடுக்க ஆரம்பித்தும் எம்பெருமானுல் அவன் பார்க்கப்படுகிருன். ஆதலால், ஏன் இது

முன் உண்டாகவில்லை, இப்போது என்னேர்ந்தது என்று கேட்கக் கூடாது. எம்பெருமானுடைய கருணை ஒரு ஜீவனை ரக்ஷிப்பதற்கு எப்போது இடம் அகப்படப் போகிறதென்று பார்த்துக்கொண்டிருக்கிறது. ஒரு புண்ணியம் பலன் கொடுக்கும்போது, அதற்கு இடம் அகப்பட்டு அந்த ஜீவனை ஆசாரியனிடம் கொண்டு போய் சேர்த்து, பிரபத்தியைப் பண்ணுவித்து, முக்தனாக்கி, எம்பெருமானுடைய கைங்கரியத்தைப் பெறும்படி செய்கிறது.

குறிப்பு:— (1) அவித்யை என்பது—உடம்பை ஆத்மாவாக எண்ணுவது. சுலோகத்தில் "சூழி" என்கிற சொல்லால், வாஸனையும், ருசியும், உடம்போடு சேர்க்கையும் சொல்லப் படுகின்றன.

(2) கர்மத்தினுல் ஒரு வாஸனை உண்டாகிறது. அதனுல் மறுபடியும் அவ்விதகர்மத்தில் ருசி உண்டாகிறது. மறுபடியும் கர்மம் செய்கிறுன்; அதனுல் உடம்புடன் சேர்க்கைஉண்டாகிறது. இவை எல்லாவற்றுக்கும் அவித்யை காரணம். இவைகள் வண்டிச்சக்ரம்போல் சுழன்று சுழன்று வருகின்றன.

(3) இந்த விஷயத்தைச் சார்வாகன் தவிர, மற்றவர்கள் ஒப்புக்கொள்ளுகிறுர்கள். சார்வாகனுக்கு பிரத்யக்ஷமொன்றே பிரமாணம். உடம்பே ஆத்மா.

(4) இப்படி எவனுவது ஒருவன் முக்தனுகக் கூடுமென்று சொன்னதினுல், எழுதப்போகிற கிரந்தம் பிரயோஜநமில்லாமல் போகாதென்று காட்டப்படுகிறது.

(5) "விபக்திः" என்கிற சொல்லாலே, ஒருவனுக்கு இந்திரப் பட்டம் வருவதற்கும், ஒருவனுக்கு ப்ரம்மபட்டம் வருவதற்கும், ஒருவனுக்கு மோக்ஷம் வருவதற்கும் தகுந்தபடி கர்மங்கள் வெவ்வேருகப் பலனைக் கொடுக்கின்றன என்று காட்டப்படுகிறது. (7)

## 2-வது ஸாரநிஷ்கர்ஷாதிகாரம்.

அவ:— புஸ்தகங்கள் அநேகமாக இருக்க, இந்த மூன்று ரஹஸ்யங்களை மாத்திரம் இந்த க்ரந்தத்திற்கு விஷயமாகப் பண்ணுவதற்குக் காரணத்தை அதிகாரத்தின் முதல் சுலோகத்தால் சொல்லுகிறுர்—

ஶ்ருதிவ்யதிவஶீதம் க்ஷ்வேலவத் ஶ்ருதஸ் ஸ
ப்ரக்ருதிபுருஷபோகப்ராபகாம்ஶா ந பத்யா: ।
ததிஹ விபுதகுப்தம் ம்ருத்யுபீதா விசிந்
வ்யுபநிஷதுததாவ்யுத்ருதம் ஸாரமார்யா: ॥அ॥

(ப-ரை) ஶ்ருதிவ்யதிவஶீதம் - வேத மார்க்கத்திற்கு விருத்தமானது, க்ஷ்வேலவத் - விஷத்திற்கு ஸமானமானது. ஶ்ருதஸ் ஸ - வேதத்திலும், ப்ரக்ருதிபுருஷபோக - பிரகிருதியினுடையவும், ஜீவனுடையவும் போகத்தை அடைவதற்கு, ப்ராபகாம்ஶா: - உபாயமானவைகளைச் சொல்லுகிற இடங்கள், ந பத்யா: - ஜீவனுக்கு அநுகூலங்களன்று. தத் - ஆகையினாலே, ம்ருத்யுபீதா: ஆர்யா: - ஸம்ஸாரத்தைக் கண்டு பயப்படுகிற நல்ல விவேகமுள்ள பெரியோர்கள், இஹ - இந்த வேதத்தில், உபநிஷதுததாவ்யுள - உபநிஷத்துக்களாகிற திருப்பாற்கடலில், விபுதகுப்தம் - முன்னிருந்த ஆசாரியர்களால் ரக்ஷிக்கப்பட்டுவந்த, உத்ருதம் ஸாரம் - மிகவும் ஸாரமானதை, விசிந்வந்தி - தேடுகிறார்கள்.

குறிப்பு:— (1) பிரகிருதியினுடைய போகமாவது— இந்த உலகத்தில் அநுபவிக்கக்கூடிய விஷயங்களால் வரும் போகமும், ஸ்வர்க்கம் முதலான இடங்களில் கிடைக்ககூடிய போகமும். புருஷனுடைய போகமாவது-உடம்பைக்காட்டிலும் வேறான ஆத்மாவை யோகம்செய்து, அதை அநுபவிப்பதனால் வரும்போகம்.

(2) "விபுத" என்கிற சொல்லுக்கு தேவர்கள் என்றும் பொருள். அந்தச் சொல்லாலும், "உததாவ்யுள" என்கிற சொல்லாலும், "ம்ருத்யுபீதா:" என்கிற சொல்லாலும், தேவர்கள் அஸுரர்களோடு சண்டையில் மரணம் அடைவதைக் கண்டு பயப்பட்டு, திருப்பாற்கடலைக் கடைந்து, அதிலிருந்துண்டானவைகளில் மற்றவைகளைத் தள்ளி, அமிருதத்தை எடுத்துக்கொண்டு, அதைச் சாப்பிட்டு மரணமில்லாமலிருக்கிறார்கள் என்கிற புராண கதை சொல்லப்படுகிறது. இந்த மூன்று ரஹஸ்யம் சொல்லும் பொருளானது அமிருதம் போலிருக்கிறது. அதை அறிகிறவனுக்கு ஸம்ஸாரம் போய், கிழத்தனம், மரணமுமில்லாத நல்ல இருப்புண்டாகும்.

(3) மீதியிருந்த அமிருதத்தைத் தேவர்கள் இரக்ஷிப்பது போல் இந்த மூன்று ரஹஸ்யங்களை முன்னிருந்த ஆசாரியர்கள் தகாதவர்களுக்கு உபதேசம் செய்யாமல் ரக்ஷித்து வந்தார்கள்.

(4) உபநிஷத்துக்களை "சாகா" என்று சொன்னதினால், அவைகளுக்கு அளவில்லை என்றும், வேதங்களின் முன்பாகம் போலில்லாமல், நமக்கு அவசியம் வேண்டுமதைச் சொல்லுகிறபடியாலே போக்கியமாயிருக்கும் என்று காட்டப்படுகிறது.

(5) "விசின்வந்தி" என்று நிகழ்காலச் சொல்லாலே, இப்போதும் தேடிக்கொண்டிருக்கிறார்கள் என்றுகாட்டப்படுகிறது.

---

அவ:— இந்த மூன்று ரஹஸ்யங்களால் ஒருவன் அடைய வேண்டிய பிரயோஜநங்களைச் சொல்லி அவைகளை அடைகிறவனைக் கொண்டாடுகிறார்—

ஶாகாநாமுபரி ஸ்திதேந மநுநா மூலேந லப்³தா⁴த்மக:
ஸத்தாதா⁴யகஸக்ருஜ்ஜபேந ஸகலம் காலம் த்³வயேந க்ஷிபந்।
வேதோத்தம்ஸவிஹாரஸாரதி²த³யா கு³ம்பே²ந விஸ்ரம்
பி⁴தஸ்ஸாரஜ்ஞோ யதி³ கஶ்சித³ஸ்தி ஹ்வவநே நாத²ஸ்ய யத்³யஸ்
ஸ்யந:॥ ॥ க ॥

(ப-ரை) ஶாகாநாமுபரி-வேதங்களின் சாகைகளுக்குமேல் (உபநிஷத்துக்களில்), ஸ்திதேந-இருக்கிற, மூலேந மநுநா-மூலமந்திரத்தாலே, லப்³தா⁴த்மக:-தன் ஸ்வரூபத்தைத்தெரிந்தவனாய், ஸத்தா - தன் ஸ்வரூபத்துக்குப் பொருந்தின கைங்கரியத்திற்கு, ஆதா⁴யகஸக்ருஜ்ஜபேந - காரணமான ஒருதடவை சொல்லுவதையுடைய, த்³வயேந - த்வயம் என்கிற மந்திரத்தினால், ஸகலம் காலம் க்ஷிபந் - பிரபத்திக்குமேல்பட்ட எல்லா காலத்தையும் போக்கிக்கொண்டு, வேதோத்தம்ஸ - வேதத்திற்கு தலைஆபரணம்போலிருக்கிற, விஹாரஸாரதி² - லீலைக்காக அர்ஜுநனுக்கு ஸாரதியாயிருந்த எம்பெருமானுடைய, த³யாகு³ம்பே²ந - தயையால் தொடுக்கப்பட்ட சரமச்லோகத்தாலே, விஸ்ரம்பி⁴த: - மஹாவிச்வாஸமுள்ளவனுகச் செய்யப்பட்டவ

னாய், இப்படி, ஸாரஜ்ஞ: - ஸாரங்களான அர்த்தங்களையறிந்த, கஶ்சித் - ஒருவன், பு⁴வநே யதி கஶ்சித் - இந்த உலகத்திலிருந்தால், ஸ: - அவன், ந: குலஸ்ய நாயக: - நம்முடைய கூட்டத்திற்குத் தலைவனாவன்.

(கருத்து) மூலமந்திரத்திற்குப் பிரயோஜநம்—ஒருவன் தன் ஸ்வரூபத்தை அறிவது. த்வயமந்திரத்திற்குப் பிரயோஜநம்—அதைச் சொல்லி பிரபத்திசெய்வதும், அது போக்கியமாயிருப்பதால், அதை எப்பொழுதும் சொல்லிக்கொண்டு காலத்தைப் போக்குவதும். சரமச்லோகத்தின் பிரயோஜநம்—தான் செய்த பிரபத்தியாலே பிரீதியடைந்த எம்பெருமான் தன்னைக் கட்டாயம் இரக்ஷிப்பன் என்று மஹாவிச்வாஸமுள்ளவனாய்ச் செய்யப்படுவது. இப்படி ஒருவன் தன் ஸ்வரூபத்தைத் தெரிந்து, பிரபத்தி பண்ணி, மஹாவிச்வாஸத்துடன் பின் காலம் எல்லாம் போக்குகிறவனாயிருந்தால், அவனே நம்முடைய ஸம்பிரதாயத்தை பிரவர்த்தநம் பண்ணத்தகுந்தவன்.

குறிப்பு:— (1) "விஹாரஸாரதி" என்பதால், நம்மைப் போல கர்மத்துக்கு உட்பட்டு, அர்ஜுநனுக்கு வண்டியோட்டவில்லை. லீலையாக அந்த வேலை செய்தான் என்று காட்டப்படுகிறது. ஏனென்றால், அவனை வேதமானது தலையாபரணம்போல் பிரீதியுடனே காட்டுகிறது.

(2) "தயாமஹிம்நே" என்பதால், எம்பெருமான் சரமச்லோகத்தாலே பிரபத்திமார்க்கத்தை தன் தயையினாலேயே வெளியிட்டான் என்று காட்டப்படுகிறது.

---

## 3-வது பிரதாநபிரதிதந்திராதிகாரம்.

அவ— இப்படிக் கிரந்தத்திற்கு விஷயத்தையும் பிரயோஜநத்தையும் சொல்லி, மேல் நான்கு அதிகாரங்களால் தத்துவநிரூபணம் செய்கிறார். தத்துவங்கள் மூன்று—எம்பெருமான், ஜீவன்கள், பிரகிருதி-என்று. அவைகளுள் முதல் அதிகாரத்தால் எம்பெருமானுக்கும் மற்றவர்களுக்கும் உள்ள உறவைச் சொல்லுகிறார்—

ஆதேயத்வப்ரப்ருதிநியமைராதிகர்த்து: ஶரீரம்
ஸத்தாஸ்தேமப்ரயதநபலேஷ்வேததாயத்தமேதத் |
விஶ்வம் பஶ்யந்நிதி பகவதி வ்யாபகாதர்ஶத்ருஷ்டே
கம்பீராணாமக்ருதககிராம் ஜாநதே அபிஸந்திம் ||

(ப-ரை) பகவதி - எம்பெருமான், வ்யாபகாதர்ஶத்ருஷ்டே - மூலமந்திரமாகிய கண்ணாடியிலே பார்க்கப்படும்பொழுது, ஏதத்விஶ்வம் - இந்த உலகமானது, ஸத்தா - ஒரு வஸ்துவாக உண்டாவது, ஸ்தேம - உண்டானது அப்படியே இருப்பது; ப்ரயதந - ஒரு வேலை செய்வது, பலேஷு - எம்பெருமானுக்குப் பிரீதி உண்டாக்குவதான பலன்—இந்த விஷயங்களில், ஏததாயத்தம் - இவனுக்கு உட்பட்டிருக்கிறது. ஆகையால், ஆதேயத்வப்ரப்ருதி - அவனால் தாங்கப்படுவது முதலானவைகளுடைய, நியமை: - எப்போதுமிருப்பதாலே, ஆதிகர்த்து: ஶரீரம் - அதற்கு முதல்காரணமான எம்பெருமானுக்கு உடம்பு, இதி - என்று, பஶ்யந்-பார்க்கிறவன், கம்பீராணாம்- ஆழமான, அக்ருதககிராம் - ஒருவனும் செய்யப்படாத சொற்களாகிய வேதத்தினுடைய, அபிஸந்திம் - உட்கருத்தை, ஜாநதே - உள்ளபடி அறிகிறான்.

(கருத்து) உலகத்தை எம்பெருமான் ஒரு வஸ்துவாகப் பண்ணி, அது அப்படியே யிருக்கும்படி தன் ஸ்வரூபத்தாலும் ஸங்கல்பத்தாலும் தாங்குகிறான். ஆகையால் அது தாங்கப்பட்டது. அது ஒரு வேலையைச் செய்யும்படி அதை ஏவுகிறான். அது ஏவப்பட்டது. அது செய்யும் வேலையின் பலனாகிய பிரீதியை அவன் அடைகிறான். ஆகையால் அவன் சேஷி, அது சேஷம். இந்த மூன்றுவிதமான உறவு எப்போதும் இருக்கும். ஒருபோதும் அதை விட்டு நீங்காது. ஆகையால் உலகம் அவனுக்கு உடம்பு. இந்த விஷயங்களை மூலமந்திரத்தைக் கொண்டு ஒருவன் அறியவேண்டியது. இப்படி அறிந்தவன்தான் வேதத்தினுடைய உட்கருத்தை அறிந்தவன். இப்படி அறியாதவனுக்கு வேதத்தின் உட்கருத்து தெரியாது.

குறிப்பு:— (1) "ஶ்ரீராணாம்" என்கிற சொல்லாலே, வேதத்தின் பொருளை அறிவது கஷ்டமென்றும், அது மூலமந்திரத்தினால் ஏற்படும் சரீரம் ஆத்மா என்கிற உறவாலேயே கண்டு பிடிக்கவேண்டியதென்றும் சொல்லப்படுகிறது. வேதத்தில் உலகமும் எம்பெருமானும் ஒன்று என்றும், வேறு தத்துவங்கள் என்றும் சொல்லுவதால் ஸந்தேஹம் உண்டாகிறது ஆகையால் அதன் உட்கருத்தை அறிவது கஷ்டம்.

(2) உடம்பு என்பது ஒரு அறிவுள்ளவனாலே தூக்கப்பட்டு, அவனால் ஏவப்பட்டு, அவனுக்காகவே இருப்பது. இந்த அறிவுள்ளவன் அதற்கு ஆத்மா. ஆகையால் எம்பெருமான் உலகத்திற்கு ஆத்மா. அது அவனுக்கு உடம்பு.

(3) சேஷன் என்பவன் ஒருவனுக்கு அதிசயத்தைப் பண்ணுவதற்காகவே இருக்கிறவன். அதைப் பெற்றுக்கொள்ளுகிறவன் சேஷி. அதிசயமென்பது முன்னுவில்லாமல் பிறகு உண்டாகிற ஒரு விஷயம். எம்பெருமானுக்குச் செய்யும் கைங்கரியத்தாலே யுண்டாகும் அதிசயம் அவனுக்குப் பிரீதி.

(4) ஶ்ருதக—என்கிற சொல்லாலே, கண்ணாலே பார்க்கிற இந்த உலகம் என்று காட்டப்படுகிறது. இதனால் அது ஒருவனுக்கு உட்படாதது என்கிற எண்ணம் பிசகு என்றும், எப்பொழுதும் எம்பெருமானுக்கு உட்பட்டே யிருக்குமென்றும் காட்டப்பட்டது. (10)

---

அவ— முதல் சுலோகத்தில் சொன்ன விஷயமானது, எல்லா வாதிகளை ஜயிப்பதற்கு உதவுகிறபடியால் அது பிரதாநம் என்று கடைசி சுலோகத்தால் அருளிச்செய்கிறார்—

யத்ப்ரஹ்மம் யதிஸார்வபௌமகதிதம் வித்யாதவித்யாதம:
ப்ரத்யூஷம் ப்ரதிதந்த்ரமேதஹக ஸுவிதவஸ்த்த: ।
தத்ரைகத்ர ஸமிதபெதி விஷயம் தத்தந்தவாதாநா
மேவாகப்யமாநமேதகஸ்யாகமோகோமாஹம: ॥

(ப-ரை) யதிஸார்வபௌமகதிதம் - ஸ்ரீ பாஷ்யகாரராலே சொல்லப்பட்டதும், அவித்யாதமப்ரத்யூஷம்-அவித்யையாகிற இருட்டுக்கு விடியற்காலம்போல் இருக்கிறதுமான, ஶ்ருதம்

இந்த, ப்ரதிதந்த்ரம் - பிரதிதந்திரத்தை, ஸுக்ருதி விபஶ்சித் - நல்ல அறிவை உடைய ஒருவன், அந்த்யயுகே - இந்த கடைசி யுகத்தில், யதி வேத்தா - அறிவானே யானால், தத்ர ஏகத்ர - அவன் ஒருவனிடத்தில், தத்தத்தந்த்ரஸ்தாபநா - அந்தந்த மதத்தை ஸ்தாபிப்பதில், ஹேவாக - குதூஹலத்தால், ப்ரஸரந் - பரவுகிற, ஹைதுகாநாம் - ஹைதுகர்களுடைய வாதமாகிற, கல்லோல - அலைகளுடைய, கோலாஹலஃ - இரைச்சலானது, ஸபதி - சீக்கிரத்தில், விலயம் உபைதி - இருந்தவிடம் தெரியாமல் போகிறது.

(கருத்து) ஸ்ரீ பாஷியகாரர் அருளிச்செய்த இந்த பிரதிதந்ரத்தை ஒருபுண்ணியத்தாலே அறிந்தவனிருக்கிற விடத்தில் வாதிகளுடைய வாதங்கள் இருந்தவிடம் தெரியாமல் போய்விடும்.

குறிப்பு:— (1) பிரதிதந்திரம்— ஒரு ஸித்தாந்தத்திலேயே உள்ளதாய், வேறு ஸித்தாந்தங்களிலில்லாததான ஒரு விஷயம்.

(2) விடியற்காலம் வந்தவுடன் இராத்திரியின் இருட்டுப் போவதுபோல், இந்தப் பிரதிதந்திரத்தாலே எம்பெருமானை அடைவதற்கு விரோதியான பாபங்கள் போய், அவனை அடைவதற்கு வேண்டிய உபாயங்களைச் செய்ய அதிகாரமுண்டாகும். இருட்டுப்போல் பாபங்கள், விடியற்காலம்போல் இந்த பிரதிதந்திரம். மேல் வரும் பகல்போல், உபாயத்தைச் செய்வதும், எம்பெருமானை அடைவதும்.

(3) கடைசி யுகத்தில் என்பதால், மற்ற யுகங்களில் அதை எல்லாரும் ஒப்புக்கொண்டவர்களென்றும்,இந்த யுகத்தில் அதை ஒப்புக்கொள்பவர்கள் கர்மத்தினால் குறைந்திருக்கிறார்களென்றும் காட்டப்படுகிறது.

(4) யதிஸார்வபௌமகதிதம்— என்பதால், இது ஸம்பிரதாயத்தால் நமக்கு வந்திருக்கிறதென்று காட்டப்படுகிறது. கதிதம்- என்கிற சொல்லாலே இதை ஸ்ரீ பாஷியகாரரும் தாம் சொல்லவில்லை என்றும், இது ஸூத்திரகாரரின் அபிப்பிராயமென்றும், அதையே வெளிப்படுத்தினார் என்றும் காட்டப்படுகிறது.

"விபஶ்சித:" என்பதின் கருத்து— விபஶ்சித் - (இதை அறிந்தவன்) எம்பெருமானை அடைவதற்கு விரோதியான பாபங்களிலிருந்து விடுபடுவன், விபஶ்சித: - (இதை மிகவும் நன்றாய் அறிந்தவன்) வாதிகளை ஜயிப்பன்—என்று.

## 4-வது அர்த்தபஞ்சகாதிகாரம்.

அவ:— இதில் கீழ் அதிகாரத்தில் சொன்ன உறவோடுகூட, ஐந்து விஷயங்களை அறியவேண்டியதென்றும், அவைகளை மூல மந்திரம் எந்த எந்த விடங்களில் சொல்லுகிறதென்றும் முதல் சுலோகத்தால் அருளிச்செய்கிறார்.—

ஆதௌ ப்ராப்யம் பரமமநகம் ப்ராப்த்ருரூபம் ச மாதௌ
இஷ்டோபாயம் அயநநமஸோரீப்ஸிதார்த்தம் சதுர்த்யாம் ।
தத்ப்ரவாதம் மமக்ருதிகிரி வ்யஞ்ஜயந்தம் மந்த்ரம் தம்
தத்ப்ராயம் ச த்வயசரமௌ விதந் ஸம்மதஸ்ஸர்வவேதீ ॥ ॥ ௧௨ ॥

(ப-ரை) ஆதௌ - 'அ' என்பதை முதலாக உடைய சொற்களில், (அகாரத்திலும், நாராயண என்கிற சொல்லிலும்) அநகம் - தோஷமில்லாததாயும், பரமம் - மிகவும் உயர்ந்ததாயிருக்கிற, ப்ராப்யம் - அடையவேண்டிய வஸ்துவையும், மாதௌ - ம என்கிற எழுத்துக்களிலும், நர என்கிற சொல்லிலும், ப்ராப்த்ருரூபம் - அடையவேண்டியவனுடைய ஸ்வரூபத்தையும், அயநநமஸோ: - அயநம் நமஸ் என்கிற சொற்களில், இஷ்டோபாயம் - ஜீவனுக்கு இஷ்டமான உபாயத்தையும், சதுர்த்யாம் - நாராயண என்கிற சொல்லிலிருக்கிற நான்காம் வேற்றுமையில், ஈப்ஸிதார்த்தம் - அடையவேண்டுமென்று ஆசைப்படுகிற பொருளையும், மமக்ருதிகிரி - மமகாரத்தைச்(என்னுடையது)சொல்லுகிற சொல்லில், தத்ப்ரவாதம் - அதற்கு விரோதியையும், வ்யஞ்ஜயந்தம் - காட்டுகிற, தம் மந்த்ரம் - அந்த மூலமந்திரத்தையும், தத்ப்ராயம் ச - அது போலிருக்கிற, த்வயம் - த்வயத்தையும், சரமம் - என்பதால் சரம சுலோகத்தையும், விதந் - அறிகிறவன் ஸர்வவேதீ - எல்லாவற்றையும் அறிந்தவனாக, ஸம்மத:- ஒப்புக்கொள்ளப்பட்டவன்.

(கருத்து) ஒருவன் அறியவேண்டிய விஷயங்கள் ஐந்து— அடையவேண்டியவன் எம்பெருமான்; அடைகிறவன் ஜீவன், அடைவதற்கு உபாயம் எம்பெருமானும், ஜீவன் செய்யும் பிரபத்தியும்; அவன் அடையவேண்டிய பொருள் எம்பெருமானுடைய கைங்கரியம்; அதை இதுவரையில் அடையாததற்குக் காரணம் அவனுடைய 'என்னுடையது' என்கிற எண்ணம். இவைகளைக் காட்டுகிற மூன்று ரஹஸ்யங்களையும் அறிந்தவனே அறியவேண்டிய எல்லாம் தெரிந்தவன்.

குறிப்பு— சுலோகத்தில் மமகாரத்தைச் சொன்னபோதிலும், அதற்குக் காரணமான அஹங்காரமும் சொல்லப்படுகிறது. அஹங்காரம் என்றால், உடம்பை ஆத்மாவாக எண்ணுவது. மமகாரம் என்பது—உடம்பைச் சேர்ந்தவைகளைத் தன்னுடையவைகளென்று எண்ணுவது.

(2) தழ - பிரஸித்திமான, இதை ஒன்றை அறிவதினாலேயே, அறியவேண்டியவைகள் எல்லாம் அறியப்படுகிறது என்கிற பிரஸித்தியை உடையது என்று கருத்து.

---

அவ— மோக்ஷம் வேண்டும் என்று ஆசைப்படுகிறவன், தான் கீழ்ச் சொல்லிய ஐந்து அர்த்தங்களை அறியவேண்டியவைகளாக நினைத்து, பிரபத்தியைச் செய்யவேண்டுமென்றுதீர்மானம் பண்ணுவது அந்த அறிவுக்கு பிரயோஜநம் என்று காட்டி, அவைகளை நினைக்கவேண்டிய விதத்தை அதிகாரத்தின் கடைசி சுலோகத்தால் அருளிச்செய்கிறார்:—

ப்ராப்யம் ப்ரஹ்ம ஸகலஶேஷி பரமம் ப்ராப்தாஹ
மஸ்யோசிதஃ ப்ராப்த்யுபாயஸ்தத்க்ருபாமிஹ மம ப்ராப்தா
ஸ்வதஸ்ய ஶ்ரீவஶ: | ஸம்ஸேநாதிவ்ருத்தாநஹமஹஜ் தத்ரா
விமத்யாஶ்ரயஸ்ஸ்தா: ஸம்ப்ராதி ஶேஷிஷம்பந்திஹாநோ
ஸஸ்த்ர மேஸிஷ்யதே || || ௧௯ ||

(ப-ரை) ப்ராப்யம் - (நான்)அடையவேண்டியதோ, பரமம்-மிகவும் உயர்ந்ததாயும், ஸகலஶேஷி - எல்லாருக்கும் சேஷியாயும், இருக்கிற, ப்ரஹ்ம - எம்பெருமான்; ப்ராப்தா அஹம் - அடைய வேண்டியவனை நான், தஸ்ய உசிதஃ - அடைய

வேண்டிய எம்பெருமானுக்குத் தகுந்தவன். ப்ராப்தி: - அடைவதானது, பித்ர்யம் தநம் இவ - தகப்பனுடைய சொத்தானது உறவினாலேயே பிள்ளைக்கு வருவதுபோலவும், ஸூரிவத் - நித்தியஸூரிகளுக்கு அவனுடைய கைங்கரியம் கிடைத்திருப்பதுபோலவும், மே - எனக்கு, இஹ -(பிரயாஸப்பட்டு கிடைக்கும் ஸ்வர்க்கம்போல் இல்லாமலிருக்கிற) ப்ராப்யத்தில், ஸ்வத:- என் ஸ்வரூபத்தோடு சேர்ந்ததாய் தானாகவே, ப்ராப்தா - கிடைக்கவேண்டியது, ஹந்த - ஐயோ! அஹங்க்ருத்யா - அஹங்காரத்தாலே (உண்டான) விஹத்யாச்ரய: - தப்பெண்ணத்திற்கு இருப்பிடமாய்க் கொண்டு, அஹம் -நான், ஏநாம் - இதை, அதிவ்ருத்தவாந் - இழந்திருக்கிறேன். ஸம்ப்ரதி - இப்பொழுது, மே- எனக்கு, சேஷிதம்பதி - சேஷிகளான தம்பதிகளிடத்தில் செய்யவேண்டிய, ந்யாஸ: - பிரபத்தியாகிற, ஸேது: - உபாயமானது, சிஷ்யதே - பாக்கியிருக்கிறது

(கருத்து) நான் இதுவரையில் எம்பெருமானிடம் போகாததற்கு என்ன காரணம் என்று விசாரிக்கையில், அது எம்பெருமானுடைய குற்றமன்று; ஏனென்றால், அவன் மிகவும் உயர்ந்தவன், அவன் எனக்கு சேஷி, என்னை ரக்ஷிப்பதற்கு ஸித்தமாய் இருக்கிறான். என்னுடைய குற்றமும் அன்று; ஏனென்றால், நான் அவனுடைய சேஷனானதாலேயும், ஸ்வபாவத்தாலே நான் தோஷமில்லாதவனானதாலும், நான் அவனிடம் போகத்தகுந்தவன். அவனை அடைவது கஷ்டப்பட்டு கிடைக்கவேண்டுமோ என்றால், அதுவுமில்லை. அது தானாகவே வரவேண்டியது. ஆகையாலிதுவரையில் அதை இழந்ததற்குக் காரணம் என்னுடைய தப்பெண்ணமே. ஆகையால் நான் இப்போது செய்யவேண்டியது அவன் திருவடிகளில் விழுந்து என்பிழைகளைப் பொறுக்கவேண்டுமென்று வேண்டுவதாகிய பிரபத்திதான் பாக்கியிருக்கிறது.

குறிப்பு— (1) எம்பெருமான் தோஷமுள்ளவனாயும் குணமில்லாதவனாயும் நம்மோடு ஸம்பந்தமுமில்லாதவனாயுமிருந்தால், அப்போது அவனை அடையவேண்டியதில்லை; அவன் அப்படி இல்லை என்று காட்டுவதற்காக "வராஹே" என்றும், "ஸஹஜ சேஷி" என்றும் சொல்லப்பட்டது.

(2) ஊயய ந உதாஹரணமான்து உலகவழக்கம்; இது பர லோகவிஷயங்களில் வரக்கூடுமோ என்கிற ஸந்தேஹத்தைத் தீர்ப் பதற்காக நித்யஸூரி உதாஹரணம் சேர்க்கப்பட்டிருக்கிறது.

(3) ஶேஷிஃஂவதிஹாரந்யாஸஃ- என்பதால் பிராட்டியும் எம்பெருமானுமாகிய இருவரிடத்திலேயே பிரபத்தி செய்ய வேண்டுமென்று காட்டப்படுகிறது.

(4) ஸேது என்பது ஒரு ஆற்றில் இக்கரையிலிருந்து அக் கரைக்குப் போவதற்கு உபாயமான பாலத்தைச் சொல்லுகிறது. இங்கு ஸம்ஸாரமாகிய இக்கரையிலிருந்து மோக்ஷமாகிய அக்க ரைக்குப் போவதற்குப் பிரபத்தி உபாயமாயிருப்பதால், அது ஸேது என்று சொல்லப்படுகிறது. (13)

## 5-வது தத்துவத்ரயாதிகாரம்.

அவ:— கீழ் இரண்டு அதிகாரங்களில் சொன்ன விஷயங்க ளில் அடங்கிய மூன்று தத்துவங்களைப் பற்றிச்சில தப்பு எண்ணங் கள் போவதற்காக மறுபடியும் விசாரிக்கப்படுகிறது:—

> ப்ரக்ருத்யாத்மப்ராந்திர்கலதி விதவிலக்ஷணதியா
> ததா ஜீவேஶைக்யப்ரப்ருதிகலஹஸ்தத்விஹஜநாத் ।
> அதோ ஹேதோ ஹேயம் த்ரயமிதி நிகமே
> விம்ருஶ்யம் நஸ்தத்த்வத்ரயவிஶேஷலக்ஷயதியஃ ॥கச॥

(ப-ரை) ப்ரக்ருதி - உடம்பாயும் இந்திரியங்களாயும் மாறியிருக்கிற பிரகிருதியில், ஆத்மப்ராந்திஃ - ஆத்மா என்கிற மயக்கம்; விதவிலக்ஷணதியா - அறிவுள்ளவர்களுடையவும் அறி வில்லாதவைகளுடையவும் லக்ஷணங்களுடைய அறிவினால், கலதி - தானாகவே போய்விடும். ததா - அப்படியே, ஜீவே ஶைக்யப்ரப்ருதிகலஹஃ - ஜீவனும் ஈஶ்வரனும் ஒன்று என் பது முதலான விஷயங்களில் உண்டாகும் கலஹமும், தத்விஹ ஜநாத் - ஜீவனையும் ஈஶ்வரனையும் பிரித்துச் சொல்லுவதினால், கலதி - போய்விடும். (அதஃ - ஆகையினாலே) இந்த எண்ணங்

கள் போவதற்காக, ஹொக்தா - போகத்தை அடைகிறவன், (அறிவுள்ளவன்) ஹொம்யம் - போகத்தைக்கொடுப்பது, (அறிவில்லாதது) தது³ஹயநியந்தா - இவையிரண்டையும் நியமனம் பண்ணுகிறவன், (எம்பெருமான்) ஊதி - என்று, நிமெ: - வேதங்களால், விஹிதம் - பிரிக்கப்பட்டிருக்கிற, தத்த்வத்ரயம் - மூன்று தத்துவங்களை, அக்ஷுப்³த⁴தி⁴ய: - ஒன்றாலும் கலங்காத அறிவை உடைய நம்முடைய ஆசாரியர்கள், ந: - நமக்கு, உபதி³ஶந்தி - உபதேசம் செய்கிறார்கள்.

(கருத்து) உலகத்தில் சில தப்பெண்ணங்கள் இருக்கின்றன—உடம்பே நான், எம்பெருமானென்று ஒருவன் கிடையாதென்றும், நானும் எம்பெருமானும் ஒன்று என்றும், நான் ஒருவனுக்கும் உட்படாதவன் என்றும். பிரகிருதி, ஜீவன், எம்பெருமான் ஆகிய இவர்களைப் பிரித்து இவைகளின் லக்ஷணங்களைச் சொல்லுவதால், இந்தத் தப்பெண்ணங்கள் போய்விடுகின்றன. வேதமே அவைகளைப் பிரித்துச் சொல்லுகிறது. இவைகளை நம்முடைய ஆசாரியர்கள் நமக்குச் சொல்லிக் கொடுத்திருக்கிறார்கள்.

குறிப்பு— உடம்பே ஆத்மா என்கிற எண்ணம் படிக்காதவர்களுக்கு வருகிறது. ஜீவனும் எம்பெருமானும் ஒன்று என்கிற எண்ணம் படித்தவர்களுக்கு வருகிறது. அது போவது வருத்தமென்று காட்டுவதற்காக ஒன்றை ஸூக்ஷ்மம் என்றும், மற்றொன்றை ஸ்தூலம் என்றும் சொல்லியிருக்கிறது.

---

அவ- இந்த மூன்று தத்துவவிஷயமான விசாரம் பண்ணினது போதுமா? ஸ்ரீபாஷ்யத்திற்குப் பின்னால் உண்டாகும் மதங்களால் கலக்கங்கள் வருமே, அவைகள் எப்படிப் போகுமென்பதற்கு, அதிகாரத்தின் கடைசி சுலோகத்தால் பதில் சொல்லுகிறார்:—

ஸ்வாபொ⁴ஜாவ த்ஸ்ய: கதி கதி கவியீவித்ருவத்
தத்த்வெஷ்வாந்த்யாத்விநாவெஸ்யாரநவயிகா ஹா நா
யாக்திகாஜ்ஞா: க்ருதாஜ்ஞா: | தத்²தாவொகஸ்த ஹொவந்தம்
வ்ருஹவதி ஸஹஸா நிஸ்ஸஸாது ஸஸாது வம்வெஸ்த²
தத்²நத்ரூஷெ வாநாவி ந வமா வ்ராணிதா ஸூா
ணாதாஷீ: | || கஞ ||

(ப-ரை) ஆவாப - ஒன்றைக்கொண்டுவந்து சேர்ப்பது, உத்வாப: - இருக்கிற ஒன்றை எடுத்துவிடுவது, ஆகிய இவைகளால், தத்ததுக்ஷ்ட அந்தந்த அர்த்தங்களில், ஸதஸத் வ்யாஹாரை: - இது இருக்கிறது இது இல்லை என்று பிரயோகம் பண்ணுவதற்கு, அநந்த்யாத் - முடிவில்லாமையாலே, அநவதி - எல்லையில்லாத, கூடயுக்தி - கபடமான யுக்திகளால், ஸாதவ: - நல்லதுபோல் தோன்றுகிற, கதி கதி - சில சில, ஸித்தாந்தா: - ஸித்தாந்தங்கள், கவிபுத்தி பேதவத் - கவிகளுடையபுத்தியினுடைய வேறுபாட்டால் உண்டான காவியங்கள்போல், ஸ்யு: - உண்டாகின்றன. (ஆனபோதிலும்) நிஸ்ஸம: - ஒப்பில்லாத, தத்த்வபோத: - தத்துவங்களுடைய அறிவானது, தாந் ஸர்வாந் - அவைகள் எல்லாவற்றையும், ஸஹஸா - உடனே தோரோதாநம் - இருந்தவிடம் தெரியாதபடி போக்குவதற்கு, ப்ரபவதி - சக்தியுள்ளதாயிருக்கிறது. பூர்வம் - (முன்பிருக்கிற வஸ்துவில்) 'இது கட்டையோ? புருஷனோ' என்கிற ஸந்தேஹமுண்டானபோது) புருஷத்தன்மையானது, ததேதந - உள்ளபடி, த்ருஷ்டே - பார்க்கப்பட்டபோது, புநரபி - மறுமறுபடியும், ஸ்தாணுதாதி: - இது கட்டை முதலானவைகள் என்கிற எண்ணம், ந ப்ராணிதா - உயிருடன் இருப்பதில்லை.

(கருத்து) ஒரு ஸித்தாந்தத்தில் இருக்கிறவைகளில், ஒன்றை எடுத்துவிடுவதாலும், வேறு ஸித்தாந்தத்திலிருந்து ஒன்றைக் கொண்டுவந்து சேர்ப்பதாலும், அதுவே வெவ்வேறு ஸித்தாந்தமாக ஆகிறது. ஒரே தத்துவத்தின் விஷயத்தில் இந்த குணமிருக்கிறது, இது இல்லையென்று சொல்லக்கூடிய விஷயங்களுக்குக் [illegible]லாமையால் பல பல ஸித்தாந்தங்கள் உண்டாகின்றன. எப்படி ஸ்ரீமத்ராமாயணகதை ஒன்றாயிருக்க, ஒரு கவி ஒன்றை அதில் சேர்ப்பதாலும், வேறொரு கவி அதிலிருந்து ஒன்றை எடுப்பதாலும் அது வெவ்வேறு காவியமாக ஆகிறதோ, அப்படியே இந்த ஸித்தாந்தங்களும் உண்டாகின்றன. இவைகளை நல்லதுபோல் தோன்றுகிற யுக்திகளைக்கொண்டு ஸ்தாபிக்கையால் இவைகள் நல்ல ஸித்தாந்தங்கள்போல் தோன்றுகின்றன. இப்படி

இருந்தபோதிலும் தத்துவங்கள் இத்தனையென்றும், அவைகளுடைய குணங்கள் இன்னவையென்றும் உள்ளபடி அறிவதால் இந்த மதங்கள் உடனே மறைந்துவிடும். கட்டையைப் போலிருக்கும் ஒரு வஸ்துவைப்பார்த்து 'இது கட்டையோ, புருஷனோ' என்று ஸந்தேஹமுண்டானபோது அது புருஷன் என்பதாகத் தெரிந்தால், அது கட்டையோ என்கிற ஸந்தேஹமானது மறுபடியும் உயிருடன் இருக்காது.

குறிப்பு— (1) தத்துவங்கள் மூன்றாயிருக்க, அவைகளில் எம்பெருமானை தத்துவத்தை ஸாங்கியனும் பௌத்தனும் ஜைநனும் எடுத்துவிடுகிறார்கள். ஸாங்கியன் ஜீவனை ஒப்புக்கொள்ளுகிறான். பௌத்தன் ஜீவனை ஒப்புக்கொள்ளுகிறதில்லை. ஜ்ஞாநமொன்றையே சங்கரனும், யோகாசாரனென்கிற பௌத்தனும், தத்துவமென்று சொன்னபோதிலும், சங்கரன் அது நித்தியம் என்றும், ஒன்றென்றும் சொல்லுகிறான். யோகாசாரன் அதை ஒரு க்ஷணம்தான் இருக்கிறதென்றும், ஜ்ஞானப்பிரவாஹங்கள் வெவ்வேறு என்றும் சொல்லுகிறான். இப்படி சுலோகத்தில் சொன்னபடி வெவ்வேறு மதங்கள் உண்டாகின்றன.

(2) கடைசி பாதத்திற்கு வேறு விதமாயும் அர்த்தம் காட்டப்பட்டதாகவும் ஆகிறது. வாஂஸெ - பரதேவதையானது, புருஷோத்தமனை ஸ்ரீமந்நாராயணன் என்று, தத்வத: - உள்ள படி, த்ருஷ்டே - பார்க்கப்பட்டபோது, ஸாணுதாஜி: - அது ருத்திரனோ, பிரம்மாவோ என்கிற ஸந்தேஹமானது, வாந ஈவி ந வமா ஹாணிதா - மறுபடியுமிருக்கிறதில்லை.

(3) நிஸஃ: - என்பதற்கு ஸமமில்லை யென்று பொருள். இதனால் மேற்பட்டதுமில்லை என்று காட்டப்படுகிறது. இந்த ஜ்ஞாநத்துக்கு எதிரான ஜ்ஞாநமும், அதைப்போக்கும்படியான ஜ்ஞாநமும் இல்லை என்று கருத்து.

---

## 6-வது பரதேவதாபாரமார்த்யாதிகாரம்.

---

அவ— இதுவரையில் எம்பெருமானை தத்துவம் பொதுவான சொற்களாலே சொல்லப்பட்டது. அது இன்னதென்று முதல் சுலோகத்தில் காட்டப்படுகிறது:—

ஜீவைக்யம் தைவதைக்யம் த்ரிகஸமயிமதா தா-
ஸாம்யதைக்யம் த்ரயாணாமந்யைச்வர்யமித்யாத்யவிஜ்ஞ-
பணிதீர் ஸத்யயந்தே ந ஸந்த: । த்ரய்யந்தைரேகக-
ண்டைஸ்தத்அநுகுணமநுவ்யாஸமுக்யோக்திபிஶ்ச ஸ்ரீமா-
ந்நாராயணோ ந: பதிரகிலதநுர்முக்திதோ முக்த-
போக்ய: ॥ ॥ ௧௫ ॥

(ப-ரை) ஜீவைக்யம் - ஆத்மாக்கள் எல்லாம் ஒன்று, தைவதைக்யம் - தேவதைகளெல்லாம் ஒன்று, த்ரிகஸமயிமதா தாஸாம்யதா - பிரம்மா, விஷ்ணு, ருத்திரன் ஆகிய த்ரிமூர்த்திகள் ஸமர்கள், த்ரயாணாமைக்யம் - த்ரிமூர்த்திகளும் ஒன்று, அந்யைச்வர்யம் - இவர்களைக் காட்டிலும் வேறான ஒருவன் ஈச்வரன், இத்யாதி - என்று சொல்லுவது முதலிய, அவிஜ்ஞபணிதீ: - அறிவில்லாதவர்கள் சொல்லுகிற வார்த்தைகளை, ஸந்த: - (இது ஸாரம், இது ஸாரமல்ல என்று இவைகளைப் பிரித்து அறியக்கூடிய) பெரியோர்கள், ந ஸத்யயந்தே - ஸரியானவை என்று ஒப்புக்கொள்ளுகிறதில்லை. ஏககண்டை: - ஒரே விதமாய்ச்சொல்லுகிற, த்ரய்யந்தை: - உபநிஷத்துக்களாலும், தத்அநுகுண - அவைகளோடொத்திருக்கிற, மநுவ்யாஸமுக்யோக்திபி: - மநு, வியாஸர் முதலானவர்களுடைய ஸூக்திகளாலும், அகிலதநு: - எல்லாவற்றையும் தனக்கு உடம்பாக உடையவனாகவும், முக்தித: - மோக்ஷத்தைக்கொடுக்கிறவனாகவும், முக்தபோக்ய: - முக்தர்களால் அநுபவிக்கக் கூடியவனுமிருக்கிற, ஸ்ரீமாந் நாராயண: - லக்ஷ்மியுடன் சேர்ந்திருக்கிற நாராயணனே, ந: - நமக்கு, பதி: - சேஷி.

(கருத்து) பரதேவதையைத் தெரியாதவர்கள் வெவ்வேறாகச் சொல்லுகிறார்கள். அதைப் பெரியோர்கள் ஒப்புக்கொள்ளுவதில்லை. வேதம் முதலான பிரமாணங்களைக்கொண்டு லக்ஷ்மியோடு கூடிய நாராயணனே பரதேவதை என்று பெரியோர்கள் தீர்மானம் செய்கிறார்கள்.

குறிப்பு:— (1) ஆத்மா என்கிற தத்துவம் ஒன்று என்பது யாதவப்பிரகாசன் மதம். சேதநம் என்றும், அசேதநம் என்றும்

ஈசுவரன் என்றும் பிரிவுகள் இல்லை. ஒரு அவஸ்தையில் ஸத்து என்கிற ஒரே திரவியமாயிருக்கிறது. இன்னொரு அவஸ்தையில் அதுவே மூன்றாகக் காணப்படுகிறது. இது அவன் மதம். இதைக் கண்டிப்பதாலேயே பிரம்மம் ஒன்றேயிருக்கிறது என்கிற சங்கரமதமும், பிரம்மாவும் ஆத்மாவும் ஒன்று என்கிற பாஸ்கரமதமும் கண்டிக்கப்பட்டதாக ஆகின்றன. ஔபதேசிகம்—என்பது பிரம்மா, ருத்திரன், இந்திரன், அக்கினி முதலானவர்களுக்கு ஒரே ஆத்மா உடம்புகள் மாத்திரம் வேறு என்கிற மதம். தேவதைகளுக்கு வெவ்வேறு ஆத்மாக்களிருந்தாலும், பிரம்மாவும், ருத்திரனும் விஷ்ணுவும் ஜ்ஞானத்தாலும், சக்தியாலும், மற்ற குணங்களாலும் ஸமம் என்று ஒரு மதமுண்டு. இந்த மூன்று பேர்களுடைய ஸ்வரூபம் ஒன்று; ஒருவனே மூன்று விதமாய்த் தோன்றுகிறான் என்று ஒரு மதம். இந்த மூன்று பேர்களுக்கும் மேற்பட்டவனாய் பரமசிவன் என்று ஒரு தேவதையிருப்பதாக ஒரு மதம்; இது சைவர்களின் மதம். சுலோகத்தில் “ஆதி” என்கிற சொல்லால் வேறு மதங்களும் இருப்பதாகக் காட்டப்படுகிறது. அவைகளாவன— த்ரிமூர்த்திகளில் ப்ரம்மாவே பரதேவதை என்றும், ருத்திரனே பரதேவதை என்றும், பிராட்டியை விட்டு நாராயணனே பரதேவதை என்றும்.

(2) “ஈஷிதநாம்” என்பதால், வேதத்தில் ஜகத்காரணத்தையும், உபாஸநங்களையும் சொல்லுகிற இடங்களில் ருத்திரன் முதலானவர்களைச் சொன்னபோதிலும், அவர்கள் நாராயணனுக்கு உடம்புகளாயிருப்பதால், அவர்கள் பரதேவதை அன்று, அவர்களுக்கு ஆத்மாவான நாராயணனே பரதேவதை என்று காட்டப்படுகிறது.

(3) தேவதை என்பது ஒரு ஜீவனால் ஆராதிக்கப்பட்டு, அவன் வேண்டுவதைக் கொடுக்குமவன். தேவதைகளுக்குள்ளே மோக்ஷத்தைக் கொடுக்கிறவன் நாராயணனேயாகையால் அவனே பர - எல்லாருக்கும் மேலான, தேவதை.

(4) “அநிபுணை” என்கிற சொல்லுக்கு, நல்ல யுக்திகளைக் கொண்டு விசாரிக்காதவர்கள் என்று பொருள். இதனால் கீழே சொன்ன மதங்கள், அப்படி விசாரிக்கப்பட்டவைகள் அன்று என்று கருத்து.

(5) உம்முடைய மதம் இப்படி விசாரிக்கப்பட்டதோ என்கிற கேள்விக்கு 'ஸந்த:' என்கிற சொல் பதில் சொல்லுகிறது. இது ஸாரம், இதில் ஸாரமில்லை என்று பிரித்து அறிய சக்தியுள்ளவர்கள் தம்முடைய மதத்தை ஒப்புக்கொண்டிருக்கிறார்கள் என்று கருத்து.

(6) நீர் சொல்லுவதற்கு என்ன பிரமாணம் என்கிற கேள்விக்கு "த்ரய்யந்தைரேககண்டை:" என்கிற சொற்கள் பதில் சொல்லுகின்றன. இதற்குப் பிரமாணங்கள் வேதாந்தங்கள் என்றும், பன்மைச் சொல்லாலே எல்லா உபநிஷத்துக்களும் இதையே சொல்லுகின்றன என்றும், அவைகளுக்குள்ளே இந்த விஷயத்தால் ஒரு விரோதமில்லை என்றும் காட்டப்படுகிறது.

(7) லிங்கம் முதலான புராணங்கள் வேறு விதமாய்ச் சொல்லவில்லையா என்பதற்கு 'ததந்யந்ந மாநம்' என்கிற சொல் பதில் சொல்லுகிறது. வேதமொன்றே பிரமாணமாகையால், அதற்கு விருத்தமானவைகள் பிரமாணங்கள் அன்று என்றும், லிங்கம் முதலானவைகள் வேதத்துக்கு விருத்தங்களாய் இருப்பதால், அவைகள் பிரமாணங்கள் அன்று என்றும் கருத்து. உபநிஷத்துக்களுக்கு ஒத்து இருப்பதால் மநுஸ்மிருதியும், மஹாபாரதமும் பிரமாணங்கள். "ஸ்வோக்த்யாக்ஷிபி:" என்பதால், ஸ்ரீமத்ராமாயணமும், விஷ்ணுபுராணமும், ஸ்ரீபாகவதமும், சௌநகஸ்மிருதியும் பிரமாணங்கள் என்று காட்டப்படுகிறது.

---

அவ— நாராயணனே பரதேவதையாகையாலே அவனைத் தவிர, வேறொருவனையும் எந்த விஷயத்திலும் நமக்கு ரக்ஷகன் என்று எண்ணக்கூடாதென்று காட்டுவதற்காக அதிகாரத்தின் கடைசி சுலோகம்—

ஜநபதபுவநாதிஸ்தாநஜைத்ராஸநேஷு
ஸ்வநுபதநிஜவ்ராதம் நஶ்வரேஷீஶ்வரேஷு ।
ஸமிதிதநிமஹோக்ஷ: ஸம்ப்ரதி ஸ்ரீஸஹாயம்
ஜகதி மதிவிசிஷ்ட்ராதஜேரே ஜஹேரேக: ॥ ॥ கஎ ॥

(பதவுரை) ஜநபத - தேசங்கள், புவந - உலகங்கள், ஆதி - இவைமுதலான, ஸ்தாந - இடங்களில், ஜைத்ராஸநேஷு - அவைகளில் உள்ளவர்களை ஆளுவதற்குத் தகுந்த ஸிம்ஹாஸநங்

களிலிருந்த, ஈஶ்வரேஷு - ஈசுவரர்கள், ஸ்வகதநிஜவாதம் - தங்களுடைய கதைகளும் தங்களுடன் போகும்படி நஶ்வரேஷு - நாசத்தையடையும் போது, அவித்யாவ்ருதே - அவித்யை நிறைந்திருக்கிற, ஜகதி - இந்த உலகத்தில், வஶிவிதநிகமாந்தஃ - வேதாந்தங்களை அடிக்கடி படிக்கிற, ஏகஃ ஜந்துஃ - ஒரு ஜந்துவானவன், ஶ்ரீஸஹாயம் - ஸ்ரீமந்நாராயணனை, பதிம் - ரக்ஷகனாக, பஶ்யதி - பார்க்கிறான்.

(கருத்து) உலகத்தில், தங்களுக்கு ரக்ஷகராக வெவ்வேறு ஜீவன்களை அறிவில்லாதவர்கள் தேடுகிறார்கள், அவர்களில் சிலர் தேசத்திற்கு அதிபதியான ராஜாவை; சிலர் மூன்று உலகங்களுக்கும் அதிபதியான இந்திரனை; சிலர் அண்டத்திற்கு அதிபதியான பிரம்மாவை. இந்த அதிபதிகள் எல்லாரும் தங்களுடைய காலங்கள் முடிந்தவுடன் போய்விடுகிறார்கள். அவர்களுடைய கதைகளும் அவர்களுடன் பின்னாலே போய்விடுகிறது. ஆகையால் அவர்களைத் தங்களுக்கு ரக்ஷகராக எண்ணுவது பிசகு. உபநிஷத்துக்களை நன்றாய்ப் படித்தவன் ஸ்ரீமந்நாராயணனையே ரக்ஷகனாகத் தேடுவன். உலகத்தில் அவித்யையினால் வெகு ஜநங்கள் மயங்கி இருந்தபோதிலும் இதைத் தெரிந்தவன் ஒருவனாவது இருப்பன்.

குறிப்பு — (1) ஜநபத என்றும், லோக என்றும் பிரித்துச்சொன்னதாலே, ஒரு தேசத்தின் அதிபதிக்கு வேறு தேசத்திலும், ஒரு லோகத்தின் அதிபதிக்கு வேறு உலகத்திலும், ஒரு அண்டத்தின் அதிபதிக்கு வேறு அண்டத்திலும் அதிகாரமில்லை என்று காட்டப்படுகிறது.

(2) "ஜைத்ராஸநஸ்தேஷு" என்று சொன்னதால், அந்த அந்த அதிபதிகளுக்குத் தங்களுக்குத் தகுந்த அதிகாரத்தைச் செலுத்துவதற்காகவே அவர்களுக்கு ஸிம்மாஸநம் கிடைத்திருக்கிறது, அவர்களுடைய ஸ்வபாவத்தினால் அவைகள் வந்ததன்று என்று காட்டப்படுகிறது.

(3) இந்த உலகத்து ராஜாவோடும், இந்திரனோடும் சேர்த்து பிரம்மாவைச் சொன்னதினால், குறித்த காலம் போனவுடன் மற்றவர்களைப்போல அவனும் போய்விடுகிறானென்று காட்டப்படுகிறது. ஆகையால் அவன் பரதேவதை அன்று என்று ஏற்படுகிறது.

(4) இங்கு அவித்யை என்பது ஒருவன் முன் செய்த கர்மம்- அதனால் ஒருவன் வேதாந்தங்களைப் படிக்காமலும், ரக்ஷிக்கத் தகுதியில்லாதவனை ரக்ஷகனாக எண்ணிக் கொண்டுமிருக்கிறான்.

(5) 'வஹதி' என்று நிகழ்காலச் சொல்லாலே நாராயணனையே ரக்ஷகனாக எண்ணுகிறவனை நாம் இப்போதும் பார்க்கிறோம். முன் காலத்திலும் அப்படிப்பட்டவன் இருந்தான். இனி மேலும் இருப்பன் என்று காட்டப்படுகிறது.

(6) ஒருதடவை வேதாந்தங்களைப் படிப்பது போதாது என்றும், அதை அடிக்கடி படிக்கவேண்டியதென்றும், அப்படிச் செய்கிறவனுக்குத்தான் உண்மையான அர்த்தம் தெரியுமென்றும் "பரிசித" என்கிற சொல்லால் காட்டப்படுகிறது.

## 7-வது முமுக்ஷுத்வாதிகாரம்.

அவ— இப்படி நான்கு அதிகாரங்களால், தத்துவங்களைச் சொல்லி மேல் ஆறு அதிகாரங்களால் உபாயங்களை விசாரிக்கிறார். அவைகளில் இந்த அதிகாரத்தில் முமுக்ஷுவின் லக்ஷணத்தைச் சொல்லுகிறார்:—

காலாவர்த்தாந் ப்ரக்ருதிவிக்ருதீ꞉ காமபோகேஷு தோஷாந்
ஜ்வாலாவர்த்தப்ரதிமதுரிதோதர்க்கது꞉காநுபூதீ꞉ ।
யாதாத்ம்யம் ஸ்வபரநியதம் யச்ச திவ்யம் பதம் தத்
காருண்யம் ச ஸ்வபரவிதுந் ஸமீக்ஷேத ஸாது꞉ ॥ ௧௮ ॥

(ப-ரை) காலாவர்த்தாந் - சுழல்கள்போல் திரும்பித் திரும்பி வருகிற காலங்களையும், ப்ரக்ருதிவிக்ருதீ꞉ - பிரகிருதியையும், அதிலிருந்து உண்டான மஹத் முதலானவைகளையும், காமபோகேஷு தோஷாந் - இந்த லோகத்திலும், பரலோகத்திலும் இருக்கும் போகங்களில் தோஷங்களையும், ஜ்வாலாவர்த்தப்ரதிம - நெருப்பு நிறைந்த குழிபோலிருக்கும், துரித - பாபங்களுக்கு, உதர்க்க - பலன்களான, து꞉காநுபூதீ꞉ - துக்கத்தின் அநுபவத்தையும், ஸ்வபரநியதம் - தன்னிடத்திலும் எம்பெருமானிடத்திலும் எப்போதும் சேர்ந்திருக்கும், யாதாத்ம்யம் - உண்மையான ஸ்வபாவத்தையும், யத் தத் - பிரஸித்தமான, திவ்யம் பதம் ச - பரமபதத்தையும், காருண்யம் -

ஜெயில்போலிருக்கும், ஸ்வரூபவஹி - உடம்பையும், விஞ்ஞ - அறிகிற, யஃ - எவன், பந்தம் - கர்மத்தினுல் கட்டுப்பட்டிருப்பதை, நிக்ஷிப்த - பொறுப்பன்.

குறிப்பு:— (1) சுலோகத்தில் சொன்னவைகளை உள்ளபடி தெரிந்த எவன் தான் கர்மபந்தத்தைப் பொறுப்பன், ஒருவனும் பொறுக்கமாட்டானென்று கருத்து.

(2) காலத்தைச் சுழலாகச் சொன்னதால், அதில் அகப்பட்டவன் அடிக்கடி பிறந்து, கிழத்தனத்தைஅடைந்து இறந்துபோகிருன் என்றும், வருஷரூபமான காலமானது வெயிற்காலமாயும், மழைகாலமாயும், குளிர்காலமாயும் இருந்து வருத்தத்தை உண்டு பண்ணுவதுபோல், பிறப்பு முதலானவைகளால் அவனுக்குத் துன்பத்தை உண்டுபண்ணுகிறதென்றும், இதற்கு ஓய்வு கிடையாதென்றும், அதிலிருந்து தன் இச்சையால் வெளிக்கு வரமுடியாதென்றும் காட்டப்படுகிறது.

(3) பிரகிருதியானது பிரளயகாலத்தில், ஜீவனுடைய குணமான ஜ்ஞாநத்தை மிகவும் சுருங்கும்படி செய்து அவனை அறிவில்லாததைப்போல் செய்கிறது.

(4) 'விக்ருதீஃ' என்பதால், பிரகிருதியிலிருந்து உண்டான மஹத் முதலானவைகள் ஜீவனுக்கு உடம்பு முதலானவைகளாயிருந்து, அவனுடைய அறிவைக் குறைத்துப் பலவிதங்களான தொந்திரவுகளைச் செய்கின்றன என்று காட்டப்படுகிறது.

(5) விஷயபோகங்களின் தோஷங்கள் மூலத்தில் சொல்லப்பட்டிருக்கின்றன.

(6) "யாயாதய்ரம்" என்பதால், தனக்கும், எம்பெருமானுக்கும் இருக்கும் உறவும், அதனுல் அவனுக்குக் கைங்கரியம் செய்வதாகிய பாக்கியத்தை அடையக்கூடியதான தனக்கு இயற்கையான இருப்பும் காட்டப்படுகிறது.

(7) "யத்ர" என்பதால், முன் சொன்ன குற்றங்கள் பரமபதத்தில் ஒன்றுமில்லை யென்றும், எல்லா நல்ல விஷயங்களுமிருக்கின்றன என்றும் சாஸ்திரங்களில் சொல்லுகிற பிரஸித்தி காட்டப்படுகிறது.

(8) உடம்பைச் சிறையாகச் (ஜயிலாக)சொன்னதால், ராஜாவின் பிள்ளை சிறையில் இருப்பதுபோல், நித்தியஸூரிகளோடு கூட

இருக்கத்தகுந்த தான் இந்த உடம்பிலிருக்கிறுனென்றும், அதி ஞல், அவனுக்குக் கிடைக்கக் கூடிய கைங்கரியத்திற்குத் தடை உண்டாயிருக்கிறதென்றும், மோக்ஷதசையில் ஒரு சரீரமோ, பல சரீரங்களோ எடுத்துக்கொண்டு இஷ்டப்படி ஸஞ்சரிப்பது இப்பொழுது முடியாதிருக்கிறது என்றும், சேஷியான எம்பெருமானுடைய விருத்தாந்தங்களை இப்போது அறியமுடியாதென்றும், இருக்கிற இடத்தினுடைய பலவிதக்குற்றங்களினுல் அதிக அருவருப்பாயும் பொறுக்கமுடியாததாயும் இருக்கிறதென்றும் காட்டப்படுகிறது.

(9) இதனுல் முமுக்ஷு என்பவன் தன் ஸ்வரூபத்தைத் தெரிந்து பாபங்களைச் செய்யாமல் காம்ய கர்மங்களில் வெறுப்புள்ளவனுய், பரமபதத்திற்குப் போவதில் மிகுந்த ஆவலுள்ளவனுய் அவ்விடம் போவதற்கு உபாயத்தைச் செய்யத் துடிப்பன் என்று ஏற்படுகிறது.

---

அவ:— ஒருவன் கீழ்ச் சொல்லியபடி முமுக்ஷுவாக ஆவதற்கு முக்கியமான காரணம் எம்பெருமானுடைய ஸஹஜகாருண்யமென்று கடைசி சுலோகத்தால் அருளிச்செய்கிறுர்.—

விஷயே ப₃ஹிஷ்க்ருத்ய யீரோ ப₃ஹிவித்₄யாத்₃மகம்
வரிமிதரஸஹாத்₃ருஹவிக்₃ருயாஸவராஜ₃வ: ।
நிரவயி₃ஹாநந்த₃ஹஹாநநிகதஹஹீ
ஜகதி ஹவிதா தெ₃வாக₄ கஶ்ஜி ஹாவிதஸம்ஸ்ருதி: ॥

(பதவுரை) ஜகதி - உலகத்தில், கஶ்சீஷ் யீர: - கலக்கமுடியாத மனதைஉடைய ஒருவன், ப₃ஹிவித்₄யாத்₃மகம் - ஆத்மாவைக் காட்டிலும் வேருயிருக்கிற விஷயங்களாகிய, விஷயே - விஷத்தோடுகலந்த தேனை, ப₃ஹிஷ்க்ருத்ய - தள்ளிவிட்டு, வரிமிதரஸ - கொஞ்சமான ஸுகத்தை உடைய, ஹாத்₃ருஹவி - தன்னை அறிந்து ஸுகப்படுவதில், அதாவது— கைவல்யமென்கிற அநுபவத்தை அடைவதில், க்₃ருயாஸவராஜ₃வ: - பிரயாஸத்தை விட்டவனுய், நிரவயி - அளவில்லாத, ₃ஹாநந்த₃ - மிகுந்த ஆநந்தத்தைக்கொடுக்கக் கூடிய, ஹஹா

நுபூதி - எம்பெருமானுடைய அநுபவத்தில், குதூஹலீ - மிகுந்த ஆவலுள்ளவனாய், தைவாத் - எம்பெருமானுடைய அநுக்கிரஹத்தினால், ஜிஹாஸிதஸம்ஸ்ருதி: - ஸம்ஸாரத்தை விடவேண்டுமென்று ஆசையுள்ளவனாய், பவிதா - ஆவன்.

(கருத்து) துக்கத்தோடு கலந்த விஷயஸுகங்களையும், இப்படித் துக்கத்துடன் கலக்காமல் ஆத்மாநுபவம் முழுவதும் ஸுகமாயிருந்தாலும், அது கொஞ்சமாயிருப்பதால் அதையும் தள்ளிவிட்டு, இவைகளுக்கு எதிர்த் தட்டாயிருக்கிற, அதாவது— துக்கத்துடன் கலப்பில்லாமலும், அளவில்லாததாயும் இருக்கிற எம்பெருமானுடைய அநுபவத்தில் மிகுந்த ஆவலுள்ளவனாய் ஸம்ஸாரத்தை விட்டு வெளிக்கிளம்ப ஒருவன் ஆசைப்படுத்துவதற்கு பிரதாந காரணம் எம்பெருமானுடைய அநுக்கிரஹமே.

குறிப்பு:— ஒரு மலையைக் கல்லி எலியைப் பிடிப்பதுபோலாகும் ஆத்மாநுபவத்திற்குப் பிரயாஸப்படுவது.

---

## 8-வது அதிகாரிவிபாகாதிகாரம்.

---

அவ:- இதில் முமுக்ஷுவான அதிகாரிகள் இருவர்களென்று காட்டுகிறார்:—

முமுக்ஷுத்வே துல்யே ஸதி ச மதுவித்யாதிஷு யதா
வ்யவஸ்தா ஸம்ஸித்த்யதிக்ருதிவிசேஷேண விதுஷாம் ।
விகல்ப்யேத ந்யாஸே ஸ்திதிரிதரவித்யாஸு ச ததா
நியத்யா வையாத்யம் நியமயிதுமேவம் ப்ரபவதி ॥ ௧௧ ॥

(பதவுரை) விதுஷாம் - பிரம்மவித்யையைச் செய்யும் அதிகாரிகளுக்கு, முமுக்ஷுத்வே - மோக்ஷம்வேண்டுமென்கிற ஆசையானது, துல்யே ஸதி ச - ஒரேவிதமாயிருக்க, அதிக்ருதிவிசேஷேண - அதிகாரபேதத்தாலே, மதுவித்யாதிஷு - மதுவித்யை முதலானவைகளில், யதா - எப்படி, வ்யவஸ்தா இவன் இதைச் செய்யவேண்டியது, இன்னொருவன் வேறொன்றைச் செய்யவேண்டியது என்கிற ஏற்பாடு, ஸம்ஸித்த்யதி - கிடைக்கிறதோ, ததா - அப்படியே, ந்யாஸே - பிரபத்தியிலும், இத

ரவித்யாஸு ச - வேறு வித்தைகளிலும், ஸ்திதி:- இருப்பானது, விகல்ப்யதே - அதிகாரத்துக்குத் தகுந்தபடி வேறுபடுகிறது. நியந்து: - அதிருஷ்டத்தினுடைய, வைபாத்யம் - இஷ்டப்படி நடக்கும் ஸ்வபாவமானது, ஏவம் நியமயிதும் - இப்படி வியவஸ்தை பண்ணுவதற்கு, ப்ரபவதி - சக்தியுள்ளதாக இருக்கிறது.

(கருத்து) பிரம்மவித்யைகளில் சிலவற்றால் ஒருவன் வஸு முதலான தேவக் கூட்டங்களில் சேர்ந்து ஸுகத்தை அநுபவித்து, பிறகு மோக்ஷம் அடைகிறான். சிலவற்றால் நேராகவே மோக்ஷம் பெறுகிறான். இரண்டு பேர்களுக்கும் மோக்ஷம் வேண்டுமென்கிற ஆசை ஒன்றாயிருக்கிறது. ஆனபோதிலும், அவர்களுடைய ஆசைக்குத் தகுந்தபடி இந்த பேதம் ஏற்படுகிறது. ஆகையால் மோக்ஷத்தை மாத்திரம் வேண்டுகிறவன் தகரவித்யை முதலானவைகளைச் செய்யவேண்டியது. மோக்ஷத்தோடு வேறொன்றை ஆசைப்படுகிறவன் மதுவித்யை முதலானவைகளைச் செய்ய வேண்டியது. இப்படியே ஒரு முமுக்ஷு பிரபத்தியைச் செய்து அதினால் பக்தி செய்வதற்கு விரோதிகளைப் போக்கி பக்தி வழியாக மோக்ஷத்தை அடைகிறான். மற்றொருவன் பக்தி யில்லாமலே மோக்ஷத்தை அடைகிறான். இருவருக்கும் மோக்ஷத்தில் ஆசை ஸமம். ஆனபோதிலும் ஒருவன் ப்ராரப்தம் என்கிற கர்மம் முழுவதும் போனபிறகு மோக்ஷத்தை ஆசைப்படுகிறான். மற்றொருவன் அவைகளும் போய் உடனேயோ அல்லது, இருக்கும் உடம்பு போனபோதோ மோக்ஷத்தை வேண்டுகிறான். ஆகையால் அவர்கள் செய்யவேண்டிய உபாயங்கள் வெவ்வேறாக இருக்கின்றன. இப்படி வெவ்வேறான ஆசையிருப்பதையும், மற்றொருவனுக்கு அப்படி இல்லாமையையும் செய்கிறது அவரவர்களுடைய அதிருஷ்டம். அதை ஏன் இப்படி செய்கிறாய் என்று கேட்க ஒருவனுக்கும் அதிகாரமில்லை.

அவ:— கீழ்ச் சொன்ன இரண்டு அதிகாரிகளுக்கு எந்த விஷயத்தில் ஸாம்யமும், எந்த விஷயத்தில் வேறுபாடும் இருக்கிறதென்று கடைசி சுலோகத்தால் அருளிச்செய்கிறார்:—

𑌪𑍍𑌰𑌪𑌨𑍍𑌨𑌾𑌦𑌨𑍍𑌯𑍇𑌷𑌾𑌂 𑌨 𑌦𑌿𑌶𑌤𑌿 𑌮𑍁𑌕𑍁𑌨𑍍𑌦𑍋 𑌨𑌿𑌜𑌪𑌦𑌂
𑌪𑍍𑌰𑌪𑌨𑍍𑌨𑌾𑌶𑍍𑌚 𑌦𑍍𑌵𑍇𑌧𑌾 𑌸𑍁𑌕𑍃𑌤𑌪𑌰𑌿𑌪𑌾𑌕𑍈𑌕𑌵𑌶𑌯𑌾 ।
𑌵𑌿𑌲𑌮𑍍𑌬𑍇𑌨 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌿𑌰𑍍𑌭𑌜𑌨𑌸𑍁𑌖𑌮𑍇𑌕𑌸𑍍𑌯 𑌵𑌿𑌪𑍁𑌲𑌂
𑌪𑌰𑌸𑍍𑌯𑌾𑌰𑌾𑌤𑍍𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌿𑌃 𑌪𑌰𑌿𑌮𑌿𑌤𑌰𑌸𑌾 𑌜𑍀𑌵𑌿𑌤𑌦𑌶𑌾 ॥

(ப-ரை) 𑌮𑍁𑌕𑍁𑌨𑍍𑌦𑌃 - மோக்ஷங்கொடுக்கிற எம்பெருமான், 𑌪𑍍𑌰𑌪𑌨𑍍𑌨𑌾𑌤𑍍 𑌅𑌨𑍍𑌯𑍇𑌷𑌾𑌂 - பிரபத்தி பண்ணினவனைக் காட்டிலும் வேறானவர்களுக்கு, 𑌨𑌿𑌜𑌪𑌦𑌂 - தன்னுடைய இடத்தை, 𑌨 𑌦𑌿𑌶𑌤𑌿 - கொடுக்கிறதில்லை. 𑌪𑍍𑌰𑌪𑌨𑍍𑌨𑌾𑌃 - பிரபந்நர்களோ, 𑌸𑍁𑌕𑍃𑌤𑌪𑌰𑌿𑌪𑌾𑌕𑍈𑌕𑌵𑌶𑌯𑌾 - அவர்கள் செய்த புண்ணியங்களின் பலன்களின் வேறுபாட்டாலே, 𑌦𑍍𑌵𑍇𑌧𑌾 - இரண்டு வகைப்படுவர்கள், 𑌏𑌕𑌸𑍍𑌯 - அவர்களுள் ஒருவனுக்கு, 𑌵𑌿𑌲𑌮𑍍𑌬𑍇𑌨 - தாமதித்து, 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌿𑌃 - அடையவேண்டியது வரும். 𑌭𑌜𑌨𑌸𑍁𑌖𑌂 - எம்பெருமானைத் தியானம் பண்ணுகிற ஸுகமானது, 𑌵𑌿𑌪𑍁𑌲𑌂 - அதிகம். 𑌪𑌰𑌸𑍍𑌯 - மற்றொருவனுக்கு, 𑌆𑌰𑌾𑌤𑍍𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌿𑌃 - சீக்கிரம் பலன் கிடைக்கிறது. ஆனால், 𑌜𑍀𑌵𑌿𑌤𑌦𑌶𑌾 - இங்கே இருக்கும் காலமானது, 𑌪𑌰𑌿𑌮𑌿𑌤𑌰𑌸𑌾 - குறைந்த ஸுகத்தை உடைத்தாயிருக்கும்.

(கருத்து) பக்தன் பிரபந்நன் என்கிறஇரண்டு அதிகாரிகளும் பிரபத்தி செய்தே மோக்ஷத்தை அடையவேண்டியது. இந்த விஷயம் இருவருக்கும் ஸமம். பிரபந்நனைத் தவிர, வேறொருவனுக்கும் எம்பெருமான் மோக்ஷத்தைக்கொடுக்கிறதில்லை. ஒருவன் பக்தனாகவும், மற்றொருவன் பிரபந்நனாகவும் ஆவதற்குக் காரணம் அவனவன் செய்த புண்ணியத்தின் பலன். ஆனால், மோக்ஷம் அடைவதில் பக்தனுக்குத் தாமதம் உண்டு, பிரபந்நனுக்கு அது கிடையாது. பிரபந்நன் உடனே இந்த சரீரத்தைவிட வேண்டும் என்று ஆசைப்பட்டால், எம்பெருமானுடைய கைங்கரியம் உடனே கிடைக்கும். இங்கே கொஞ்ச காலம் இருக்கவேண்டும் என்று ஆசைப்படுகிற பிரபந்நனுக்குக் கைங்கரியம் உடனே ஆரம்பித்தபோதிலும், அதினாலுண்டாகும் ஆநந்தமானது கொஞ்சமாயிருக்கும். பக்தனுக்கோ எம்பெருமானைத் தியானம் பண்ணுவதில் மிகுந்த ஸுகமுண்டு.

## 9-வது உபாயவிபாகாதிகாரம்.

அவ:— உபாயமானது இருவகைப்படுமென்றும், அவைகளும் பலனைக் கொடுப்பதாலே, எம்பெருமானும் அநுக்கிரஹம் பண்ணவேண்டும் என்கிற எண்ணத்தை எம்பெருமானுக்கு உண்டுபண்ணுவதால்- பக்தியும் பிரபத்தியும்- உபாயங்களென்றும், எம்பெருமானே முக்கியமான உபாயமென்றும் முதல் சுலோகத்தாலே அருளிச்செய்கிறார்:—

உபாய: ஸ்வப்ராப்தேருபநிஷததீதஸ்ஸ பகவாந்
ப்ரஸத்த்யை தஸ்யோக்தே ப்ரபதநநிதித்யாஸநகதீ ।
ததாரோஹ: பும்ஸஸ்ஸுக்ருதபரிபாகேந மஹதா
நிதாநம் தத்ராபி ஸ்வயமகிலநிர்வாணநிபுண: ॥ ௨௨ ॥

(ப-ரை) ஸ: பகவாந் - அந்த பகவான், ஸ்வப்ராப்தே: - தன்னை ஒருவன் அடைவதற்கு, உபாய: - உபாயமாக, உபநிஷததீத: - உபநிஷத்துக்களால் சொல்லப்பட்டிருக்கிறான். ப்ரபதநநிதித்யாஸநகதீ - பிரபத்தி பக்தி என்கிற ஜ்ஞானங்கள், தஸ்ய - அந்த எம்பெருமானுடைய, ப்ரஸத்த்யை - பிரஸாதமுண்டாவதற்காக, உக்தே - உபநிஷத்துக்களில் சொல்லப்பட்டிருக்கின்றன. பும்ஸ: - ஒருவனுடைய, (ஒருவன்) ததாரோஹ:- அந்த பக்தி பிரபத்திகளைச் செய்வதானது, மஹதா - பெரியதான, ஸுக்ருதபரிபாகேந - புண்ணியத்தின் பலத்தினாலே, உண்டாகிறது. தத்ராபி - அந்த உபாயங்களைச்செய்வதிலும், அகிலநிர்வாணநிபுண: - எல்லாவற்றையும் செய்ய ஸமர்த்தனான எம்பெருமான், ஸ்வயம் - தானே, நிதாநம் - காரணம்.

(கருத்து) முமுக்ஷுவுக்குக் கேட்கும் பலனைக் கொடுப்பதாலே எம்பெருமானை உபநிஷத்துக்கள் உபாயம் என்று சொல்லுகின்றன. முமுக்ஷு அநாதிகாலமாக எம்பெருமான் சொன்னவைகளைச் செய்யாமலும், செய்ய வேண்டாமென்பவைகளைச் செய்ததாலும், அவனைத் தண்டிக்கவேண்டும் என்கிறஎண்ணம் எம்பெருமானுக்கு உண்டாயிருக்கிறது. அந்த எண்ணத்தை மாற்றி, முமுக்ஷு

வுக்கு அநுக்கிரஹஞ் செய்யவேண்டும் என்கிற எண்ணமுண்டாவதற்காக பக்தியையோ, பிரபத்தியையோ முமுக்ஷு செய்யவேண்டுமென்று உபநிஷத்துக்கள் சொல்லுகின்றன. ஆகையால் அவைகளும் உபாயங்கள். அவைகளிரண்டும் ஜ்ஞாநவிசேஷங்கள். இவன் முன்னால் எண்ணமில்லாமல் செய்த ஒரு புண்ணியத்தினால் சொன்ன உபாயங்களைச் செய்கிறான். அப்படி அவனைச் செய்யும் படி பண்ணுவதும் எம்பெருமான் தான்.

குறிப்பு:— (1) 'ஸ:' என்பதால், எம்பெருமான் மிகுந்த கருணையுள்ளவனென்றும், அவன் எல்லாருக்கும் சேஷி என்றும், அவன் ஒருவனை ரக்ஷிக்கவேண்டுமென்று எண்ணினால், அவனை ஒருவனும் தடுக்கமுடியாதென்றும் உபநிஷத்துக்களில் சொல்லுகிற பொருள் காட்டப்படுகிறது. கருணையினாலேயே ஒருவனை ரக்ஷிக்கிறான்; சேஷியானதாலே ரக்ஷிக்கவேண்டியவன்; ஸ்வதந்திரனானதாலே ரக்ஷிக்க சக்தன்.

(2) உபநிஷத்துக்களில் ஜ்ஞாநத்தாலேயே மோக்ஷம் வரும் என்று சொல்லுகிறபடியினாலேயும், பக்தி ஜ்ஞாநமாயிருப்பதாலேயும், அதில் ஸ்தாநத்தில் விதிக்கப்பட்ட பிரபத்தியும் ஜ்ஞாநமாகவே இருக்கவேண்டியது. இதைக் காட்டுவதற்கு, 'மதீ' என்கிற சொல்லைச் சுலோகத்தில் சேர்த்திருக்கிறது. இந்தச் சொல்லின் பகுதி (யாதுவு)க்கு ஜ்ஞாநம் என்கிற அர்த்தமுண்டு.

(3) இங்கு புண்ணியமென்று சொன்னது ஒருவன் அறியாமலும் புண்ணியம் செய்யவேண்டுமென்கிற எண்ணமில்லாமலும் செய்கிற ஒரு வேலை. கீரைப்பாத்தியில் ஒரு துளஸிச் செடி இருப்பதை ஒருவன் அறியாமலும், அதுக்கு ஜலம் பாய்ச்ச வேண்டுமென்கிற எண்ணமில்லாமலும் கீரைப்பாத்திக்கு ஜலம் பாய்ச்சுகிறான். அது துளஸிக்கும் பாய்கிறது. இதை எம்பெருமான் ஒரு புண்ணியமாகக் கணக்கிடுகிறான். இது யாதிருச்சிக ஸுக்ருதம் என்று சொல்லப்படுகிறது.

(4) ஒருவன் பக்தியையோ, பிரபத்தியையோ செய்தபோதிலும் அதை எம்பெருமானே செய்விக்கிறான். யாதிருச்சிகமான புண்ணியம் பலன் கொடுக்கும்போது, அவனைக் கடாக்ஷித்து, படிப்படியாக ஒரு ஆசாரியனிடம் கொண்டுவந்து விட்டு, அவனிடம் ஸ்வரூபஜ்ஞாநம் முதலியவைகளைத் தெரிந்து கொண்டு பக்தி

பிரபத்திகளைச் செய்யும்படி செய்கிறான். அந்தக் காரணத்தினாலேயும், பலன் கொடுக்கிறவன் எம்பெருமானேயாகையாலேயும் அவனே முக்கியமான உபாயம்.

(5) பக்தி பிரபத்திகள் செய்வதற்கு முன்பே எம்பெருமான் இருப்பதாலே அவன் ஸித்தமான உபாயம். பக்தியும் பிரபத்தியும் செய்யப்படுவதால் ஸாத்யங்களான உபாயங்கள்.

---

அவ'— ஸாத்யங்களான உபாயங்களில் சிலவற்றுக்கு ஒரே ஆகாரமிருக்கிறது என்றும், பிரபத்திக்கு இரண்டு ஆகாரங்களிருக்கின்றன என்றும், அதையே புத்திமான் எடுத்துக்கொள்ள வேண்டும் என்றும் கடைசி ச்லோகத்தால் அருளிச்செய்கிறார்:—

கர்ம ஜ்ஞாநோபாஸநம் ச ஶரணவ்ரஜ்யேதி சாவ-
ஸ்திதாந் ஸந்மார்காந் அபவர்க்கோபாயநவிதயௌ ஸமத்யகா-
அமத்யகாந் । ஏகத்வ்யாக்ருதியோகஸம்ப்ருதவ்யூஹா-
நநர்காநிமாந் ஸம்யக் வீக்ஷ்ய ஶரண்யஸாரதி-
ர்சரமே ரமந்தே விபஶ்சித: ॥ ॥ ௨௫ ॥

(பதவுரை) கர்ம - கர்மயோகம், ஜ்ஞாநம் - ஜ்ஞாநயோகம், உபாஸநம் ச - பக்தி என்றும், ஶரணவ்ரஜ்யா இதி ச - பிரபத்தி என்றும், அபவர்க்கோபாயநவிதயௌ - மோக்ஷத்துக்கு உபாயமாக விதிப்பதில், அவஸ்திதாந் - விஷயங்களாய் இருப்பவைகளும், ஸமத்யகா - ஒன்றை நடுவில் வைத்துக்கொண்டும், அமத்யகாந் - ஒன்றை நடுவில் வைத்துக் கொள்ளாமலிருப்பவைகளும், ஏகத்வ்யாக்ருதியோக - ஒரு ஆகாரமுள்ளதாயும், இரண்டு ஆகாரமுள்ளதாயுமிருப்பதால், ஸம்ப்ருத - உண்டுபண்ணப்பட்ட, வ்யூஹா - வேறுபாட்டை உடையதென்கிற, அநர்காந் - பெருமையை உடையவைகளுமான, இமாந் ஸந்மார்காந் - இந்த நல்ல உபாயங்களை, விபஶ்சித: - ஸாராஸாரத்தை அறியக்கூடியவர்கள், ஸம்யக் வீக்ஷ்ய - நன்றாகப் பார்த்து, ஶரண்யஸாரதி - சரண்யனை அர்ஜுநனுக்கு ஸாரத்யம் பண்ணின எம்பெருமானுடைய, சரமே - உபதேசவார்த்தைகளில் கடைசியான சரமஶ்லோகத்தில், (அதில் சொல்லியிருக்கிற பிரபத்தியில்) ரமந்தே - பிரீதியுள்ளவர்களாக இருக்கிறார்கள்.

(கருத்து) கர்மயோகம் முதலானவைகளும், பிரபத்தியும், மோக்ஷத்தை உண்டுபண்ணுவதற்கு உபாயங்கள். அவைகளில் கர்மயோகமும், ஜ்ஞாநயோகமும் பக்தியின் வழியாகப் பலனைக் கொடுக்கும். பிரபத்தியானது பக்திவழியாகவும், பக்தி இல்லாமலும் பலனைக் கொடுக்கும். ஆகையாலே கர்மயோகத்திற்கும் ஜ்ஞாநயோகத்திற்கும் ஒரே ஆகாரமுண்டு. பக்திக்கும் அப்படியே. அது பலனை நேராகக் கொடுத்தபோதிலும், அது வேறொன்றுக்கு ஸாதநமாக இருப்பதில்லை. பிரபத்திக்கோ கீழ்ச் சொன்ன இரண்டு ஆகாரங்களுமுண்டு. இதினுடைய இந்தப் பெருமையைக் கண்டு தெரிந்தவர்கள் பிரபித்தியையே கொண்டாடுகிறார்கள்.

குறிப்பு:— (1) "உபாஸநம் ச" என்கிற சகாரத்தினால் கர்மயோகம், ஜ்ஞாநயோகம், பக்தியோகம் ஒரு கூறு என்றும், 'ஶரணவ்ரஜ்யா இதி ச' என்பதால், அது வேறு கூறு என்றும், காட்டப்படுகிறது.

(2) "ஸநாதநா" என்பதால், பக்தியும், பிரபத்தியும் ஸ்வரூபவிருத்தங்களென்று சிலர் சொல்லுவது துர்வாதங்கள் என்று காட்டப்படுகிறது.

(3) பிரபத்தி என்று சொல்லாமல், "ஶரணம் வ்ரஜ' என்று சரமசுலோகத்தைச் சொல்லுவதால், பிரபத்திக்கு இரண்டு ஆகாரங்களிருக்கின்றன என்பதற்கு, சரமசுலோகமே பிரமாணம் என்று காட்டப்படுகிறது. அதின் பாஷ்யத்தில் இரண்டாவது யோஜனையில் அது பக்திக்கு அங்கமாயிருப்பது சொல்லப்படுகிறது. அது நேராகவே உபாயமென்பது பிரஸித்தமானது. கத்யத்திலும் காட்டப்பட்டிருக்கிறது.

(4) கர்மயோகத்தையும் ஜ்ஞாநயோகத்தையும் பண்ணுகிறவர்களுக்கு மேலே பக்தியோகம் வேண்டும். பக்தியோகம் பண்ணுகிறவனுக்கு அது உண்டாவதற்கு கர்மயோகமும், ஜ்ஞாநயோகமும் வேண்டும். பிரபத்திக்கு நேராகவும் பலன் கிடைக்கும். தனக்கு உதவியாக வேறொன்றையும் வேண்டுகிறதில்லை. இது மற்றவைகளுக்கு இல்லாமல் பிரபத்திக்கு மாத்திரமுள்ள பெருமை. ஆகையால்தான் தெரிந்தவர்கள் பிரபத்தியைக் கொண்டாடுகிறார்கள், பக்திஸ்வரூபத்துக்கு விருத்தமென்று எண்ணி அன்று.

## 10-வது பிரபத்தியோக்யாதிகாரம்.

---

அவ:— அதிகாரத்தின் லக்ஷணத்தைச் சொல்லி, பிரபத்தியில் எல்லாருக்கும் அதிகாரம் இருக்கிறதென்று முதல் சுலோகத்தால் அருளிச்செய்கிறார்—

அர்த்தித்வேந ஸமர்த்ததா த்ரிகதநாஸம்வலிதா
அதிக்ருதா ஸாஸாஷ்டாங்கஷடங்கயோகநியதாவஸ்தா வ்யவ
ஸ்தாபிதா | ஸ்ருதீ ஸர்வசரண்யதா பகவத: ஸ்ம்ரு
த்யாபி ஸத்யாபிதா ஸத்யாதிஷ்வ வைதிகேஷ்வதிக்ரு
திஸ்ஸர்வாஸ்பதே ஸத்பதே || || ௨௪ ||

(ப-ரை) அர்த்தித்வேந - ஒரு பலனில் ஆசையுள்ளவனாய் இருப்பதுடன், ஸம்வலிதா - ஒன்றாகச் சேர்ந்திருக்கிற, த்ரிகதந: - மூன்றுவிதமான ஸ்வரூபத்தை வைத்துக்கொண்டிருக்கிற, ஸமர்த்ததா - ஸாமர்த்தியம், அதிக்ருதா - அந்தந்தப் பலனுக்கு வேண்டிய உபாயத்தைச் செய்ய அதிகாரம். ஸா ச - அதுவும், அஷ்டாங்க - ஏழுஅங்கங்களோடுகூடிய பக்திக்கும், ஷடங்கயோக - ஐந்து அங்கங்களோடு கூடினபிரபத்திக்கும், நியதாவஸ்தா - அததற்கே உள்ள அவஸ்தையை உடையதாய், வ்யவஸ்தாபிதா- இதற்கு இது அதிகாரம், இதற்கு இது அதிகாரமென்று பிரித்து சொல்லப்பட்டிருக்கிறது. பகவத: - எம்பெருமானுடைய, ஸர்வசரண்யதா - எல்லாராலும் பிரபத்தி செய்யத் தகுந்தவனாயிருப்பதானது, ஸ்ருதீ - வேதத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. ஸ்ம்ருத்யாபி - ஸ்மிருதிகளாலேயும், ஸத்யாபிதா - உறுதி செய்யப்படுகிறது. ஸத்யாதிஷு - உண்மையைப்பேசு என்பதுமுதலான, வைதிகேஷ்வ - வேதத்தில் சொல்லப்பட்ட தர்மங்களில்போல, ஸர்வாஸ்பதே - எல்லாருக்கும் தகுதியான, ஸத்பதே - நல்ல மார்க்கத்தில், அதாவது—பிரபத்தியில், அதிக்ருதி: - அதிகாரம் உண்டு.

(கருத்து) ஒரு பலனுக்கு உபாயமாக ஒரு வேலையைச் செய்வதற்கு அதிகாரம்- பலனில் ஆசையும், அந்த உபாயத்தைச் செய்வதில் மூன்று பிரகாரங்களை உடைய ஸாமர்த்தியமும். மூன்று

பிரகாரங்களாவன— அந்த உபாயத்தை இன்னபடி செய்கிறது என்று உள்ளபடி அறிவதும், அதைச் செய்யத்திறமையும், அதைச் செய்வதற்கு சாஸ்திரம் இடம் கொடுப்பதும். இவ்வித மான அதிகாரம் பக்திக்கு வேறு, பிரபத்திக்கு வேறு. பக்தி செய்ய பிராம்மணன் முதலான மூன்று வர்ணத்தாருக்குத் தான் சாஸ்திரம் இடங்கொடுக்கிறது. மற்றவர்களுக்கு அதில் இட மில்லை. பிரபத்தியை எல்லாரும் செய்வதற்கு சாஸ்திரம் அநு மதி கொடுக்கிறது. வேதமானது, எம்பெருமான் எல்லாருக்கும் உபாயம்; பிரபத்தியால் அடையத் தகுந்தவன் என்று சொல்லுகி றது. அப்படியே எல்லா உலகங்களுக்கும் எம்பெருமான் சரண் யன் என்று ராமாயணம் முதலான ஸ்மிருதிகளாலும் உறுதி செய்யப்படுகிறது. பிரபத்தியானது ந்யாஸவித்யைஎன்று வேதம் அதை விதித்தபோதிலும் சொன்ன பிரமாணங்களால் அது எல்லாருக்கும் பொதுவென்று ஒப்புக்கொள்ளவேண்டியது. உதா ரணம்- உண்மையைப் பேசு, தானம் செய் என்று வேதம் விதித்த போதிலும், அந்த தர்மத்தை எல்லாரும் அநுஷ்டிக்க வேண்டி யது. அதுபோல இங்கும்.

குறிப்பு—(1) பிரம்மஸூத்திரத்தில் பக்தியானது பிராம்ம ணன் முதலான மூன்று வர்ணத்தார் தவிர, வேறு ஒருவராலும் செய்யத் தகுந்தது அன்று என்று தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. அவ்விதமான தீர்மானம் பிரபத்திவிஷயத்திலில்லை.

(2) ஸாமர்த்தியத்தின் மூன்று பிரகாரங்களும் சேர்ந்தே இருக்கவேண்டியது. அவைகளில் ஏதாவதொன்று இல்லாமல் போனால் பக்தி செய்ய அதிகாரமில்லை.

(3) "ஸர்வ" என்று பொதுவாய்ச் சொன்னதால், எம்பெருமானுடைய திருநாமங்களைச் சொல்லுவதும், அர்ச்சிப் பதும், நமஸ்காரம் பண்ணுவதும் எல்லாருக்கும் தகுந்தவைகள் என்று காட்டப்படுகிறது.

---

அவ:—முதல் சுலோகத்தில் பிரபத்திக்கு அதிகாரம் வேறு என்று பொதுவாய்ச் சொன்னதைக் கடைசி சுலோகத்தில் விரி வாய் அருளிச்செய்கிறார்:—

ஶக்த்யாத்மா ஶக்த்யபாவ: ப்ரமிதிரஹிததா ஶாஸ்த்ர
தஃ பர்யுதாஸ: காலக்ஷேபாக்ஷமத்வம் த்விதி நியதவஶா
தாபதத்பிஶ்சதுர்பி: | ஏகத்வ்யாதியோகவ்யதிஹரண
நிஜாயிக்யாஶ்ரயந்தே ஸந்த: ஶ்ரீஶம் ஸ்வதந்த்ரப்ர
பத்திநோ மோக்ஷாய நிர்விஶங்கா: ॥ ॥ ௨௫ ॥

(பதவுரை) ஶக்த்யாத்மா - பக்தியிலும், அதற்கு உதவியான கர்மயோகத்திலும், ஜ்ஞாநயோகத்திலும், ஶக்த்யபாவ: - சக்தி இல்லாமை, ப்ரமிதிரஹிததா - அவைகளைச் செய்யும்வழி அறியாமை, ஶாஸ்த்ரத: பர்யுதாஸ: - அவைகளைச் செய்யத் தகாதவன் என்று சாஸ்திரத்தினுல் விலக்கப்படுவது, காலக்ஷேபாக்ஷமத்வம் - அவைகளைச் செய்வதில் ஏற்படும் காலதாமதத்தைப் பொறுக்காமை, இதி - இப்படி, நியதிவஶாத் - அதிருஷ்டவசத்தினுல், ஆபதத்பி: - வருகிற, சதுர்பி: - நான்கினுலும், ஏகத்வ்யாதியோக - அவைகளில் ஒன்றிருப்பதாலும், இரண்டிருப்பதாலும், மூன்றிருப்பதாலும், நாலுமிருப்பதாலும், வ்யதிஹரண - அநேகவிதமாய் நன்ருய் பிரிந்திருக்கிற, நிஜாதிக்யா: - தங்களுக்கே உள்ள; அதிகாரங்களை உடையவர்களான, ஸந்த: - பெரியோர்கள், ஶ்ரீஶம் - லக்ஷ்மீபதியை, ஸ்வதந்த்ரப்ரபத்திநா - பக்தியை எதிர்பார்க்காத பிரபத்தி செய்வதால், மோக்ஷாய - மோக்ஷத்தைப் பெறுவதற்காக, நிர்விஶங்கா: - ஸந்தேஹமில்லாமல், ஆஶ்ரயந்தே - அடைகிருர்கள்.

(கருத்து) பக்தியைச் செய்யத்தகாமையே பிரபத்திக்கு அதிகாரம். அந்தத் தகாமையானது அதைச் செய்யச் சக்தி இல்லாமையாலும், அதைச் செய்யும் வழியை அறியாமையாலும், அதைச் செய்யத்தகுந்தவன் என்று சாஸ்திரம் ஒப்புக்கொள்ளாமையாலும், பலன் சீக்கிரம் கிடைக்கவேண்டுமென்கிற ஆசையாலும் வரும். இவைகளில் ஒன்றிருந்தாலும், இரண்டிருந்தாலும், மூன்றிருந்தாலும், நாலுமிருந்தாலும், பிரபத்தியைச் செய்ய அதிகாரமுண்டு. இப்படித் தங்களுடைய அதிகாரத்தைத் தெரிந்த பெரியோர்கள் பிரபத்தியையே செய்து எம்பெருமானை அடைகிருர்கள்.

குறிப்பு:— (1) கீழ்ச்சொன்ன நான்கில், ஒன்றே இருக்கிறவர் நாலு பேர்கள்; இரண்டு இருப்பவர்கள் ஆறு பேர்கள்; மூன்று இருப்பவர்கள் நாலுபேர்கள்; நாலுமிருப்பவர் ஒருவர். ஆகப் பதினைந்து அதிகாரிகள்.

(2) "நிவிசஂகாஃ" என்பதற்கு பிரபத்தியில் நமக்கு அதிகாரமிருக்கிறதோ இல்லையோ என்கிற ஸந்தேஹமில்லாதவர்கள் என்று பொருள்.

(3) இப்படி பக்தியில் அதிகாரமில்லாதவனை 'அகிஞ்சநன்' என்று சொல்லுகிறது. அகிஞ்சநன் என்றால், ஒன்றுமில்லாத ஏழை. பக்தியோகமே மோக்ஷத்திற்குக் காரணமென்று சொல்லி இருப்பதாலே, அதைச் செய்யத் தகாதவன் ஒரு உபாயமுமில்லாத ஏழைதான். இதனால் பக்தியோகத்திற்கும் அதிகாரம் இன்னதென்று காட்டப்பட்டதாயிற்று.

(4) "ஸஞ்ஸஂஶ்ரயஞெ" என்று நிகழ்காலமாகச்சொன்னதாலே இது யுக்தியைக் கொண்டே சொல்லப்பட்டதன்று; பெரியோர்களும் இதை இப்படியே அநுஷ்டித்து வருகிறார்கள் என்று காட்டப்படுகிறது.

## 11-வது பரிகரவிபாகாதிகாரம்.

அவ:— பக்தியைப்போல பிரபத்திக்கும் அங்கங்களுண்டு என்றும், அவைகள் பக்தியின் அங்கங்களைக் காட்டிலும் வேறு என்றும் காட்டுவதற்காக அங்கங்கள் விஷயமாக முதல் சுலோகத்தை அருளிச்செய்கிறார்:—

ஐயாநிஸஂஹ-ஷி தஸ்கூ௱ஜுயவெஶ௱ஂ ஹவநவாநு
ஊயாஶிவ௱ாஹொயள ஜஹஊவிஶஜெயஹஸதி ।
ஸவஸஂவொஊ௱ாெகூ ஸஹவதி ஹாந௱ாஸவவ-ஷஃ
ஷுவதைூஶாஷிஷஃ வாிகுவிஶெஷஶஂ-திஃ-வெஃ॥

(ப-ரை) ஊயாஶிவ௱ாஹொயள - தயைக்கு பெரிய ஸமுத்திரமாகவும், ஊவிஶஂ ஜஹஃ - எல்லா உலகத்தையும், ஊஜெயஹஸதி - ஆத்மாவாக உள்ளிருந்து ஏவுகிறவனாகவும், ஸவஸஂவொஊ௱ாெகூ - ஸம்ஸாரத்தை நாசஞ்செய்வதற்கு ஸித்தனாகவுமி

ருக்கிற, ஸ்ரீமதி - எம்பெருமானிடத்தில், ந்யஸ்தபரஸ்வபா வஷ: - பரத்தைக் கொடுப்பதையே ஸ்வரூபமாக உடைய, ப்ரபத்தே: - பிரபத்தியினுடைய, பரிகரவிஶேஷா: - அங்கங்கள், த்ரயம் - இவைகள் என்றும், இயந்து - இத்தனை என்றும், ஈத்ருஶா: - இன்னபடி இருக்கின்றன என்றும், ஸக்ருத் - ஒரு தடவை, (பிரபத்தி பண்ணுகிற காலத்தில் மாத்திரம்) இருக்க வேண்டும் என்றும், ஸாவஶ்யம் ஸ்வநவாநு - பிரபத்தியில் கட்டாயம் இருக்கவேண்டுமென்றும், ஶ்ருதிமுகை: - வேதம் முதலானவைகளாலே, ஶிஷ்டா: - விதிக்கப்பட்டிருக்கின்றன.

குறிப்பு: –(1) அநாதிகாலமாய் குற்றம் பண்ணினவன் எம்பெருமானிடம் போகமுடியுமோ ? கிட்டப்போனாலும், இவன் பரத்தை எம்பெருமான் ஒப்புக்கொள்ளுவனே? ஆகையால் பிரபத்திக்கே இடமில்லையே; ஆகையால், அதன் அங்கங்களைப் பற்றி விசாரம் பண்ணுவானேன் என்கிற கேள்விக்குப் பதிலாக பிரபந்நனுடைய பரத்தை ஒப்புக்கொள்ள எம்பெருமான் ஸித்தமாயிருக்கிறான் என்று காட்டுவதற்காக 'ஸ்வயம்ஸொதாத்ருகே' என்கிற விசேஷணம். எம்பெருமான் ஜீவனை இரக்ஷிப்பதற்காக எப்போது இடம் அகப்படப்போகிறது என்று பார்த்துக்கொண்டிருக்கிறான். அவனுடைய யாதிருச்சிகஸுகிருதத்தை வியாஜமாகக்கொண்டு அவன் ஸம்ஸாரத்தைப் போக்கி அவனை ரக்ஷிக்கிறான். ஆகையால் பிரபத்தியைச் செய்யலாம். அதின் அங்கங்களையும் பற்றி விசாரம்செய்யலாம்.

(2) எதற்காக எம்பெருமான் ஜீவனை ரக்ஷிக்க இப்படி இடம் பார்த்துக் கொண்டிருக்கிறான் என்பதற்குக் காரணத்தை “தயாதிவ்யாஹிஸிந்தோ” என்பது சொல்லுகிறது. அவன் ஸ்வபாவமாய் கருணை உள்ளவன். அதற்குக் கடல்போல் எல்லை இல்லை; ஒருபோதும் குறைவதுமில்லை; வற்றுகிறதுமில்லை.

(3) எம்பெருமான் ஒருவியாஜத்தினால் நேரே ஜீவனை ரக்ஷிப்பதில்லை. அவனை ஆசாரியனிடம் கொண்டுசேர்த்து ஸ்வரூபத்தைத் தெரிவித்து, வைராக்கியத்தையும், மோக்ஷத்தில் ஆசையையும் உண்டுபண்ணி, கடைசியில் பிரபத்தியைச் செய்வித்து இரக்ஷிக்கிறான். இவை எல்லாவற்றையும் அந்தர்யாமியாக இருந்து செய்கிறான்.

(4) பிரபத்திக்கு அங்கங்கள் வேண்டியதில்லை என்று சில இடங்களில் சொல்லுவதற்கு, விதிக்கப்பட்ட அங்கங்களைக் காட்டிலும் வேறு அங்கங்கள் வேண்டியதில்லை என்று கருத்து. இதைக் காண்பிப்பதற்காக " ஸபரிகரவிஶேஷ꞉ " என்று சொல்லியிருக்கிறது.

---

அவ:— பிரபத்தியின் அங்கங்கள் இன்னவைகள் என்பதையும், அவைகளின் உபயோகங்களையும் விரிவாய்க் கடைசி ச்லோகத்தால் அருளிச்செய்கிறார்:—

ப்ரோக்த꞉ பஞ்சாங்கஷடங்கஸக்ருதிதி ஸம்ஹிதாஸ்வநே
ஏஷ யோகஸ்தத்ர ஆநுகூல்யஸங்கல்பப்ராதிகூல்யவர்ஜநாப்யாம் அசக்தி꞉ அந்யோபாயவிராம꞉ ...
நிஜபரவிஷயே த்யாஜ்யதேச்சா தத்ஸாத்ய
ஸ்யாத்ஸா ஸஹிதோ ஸபரிகரே தாத்ருசீ ந்யாஸவித்யா꞉ ॥

(பதவுரை) ஏஷ யோக꞉ - இந்த பிரபத்தி என்கிற உபாயமானது, பஞ்சாங்க꞉ - ஐந்து அங்கங்களுள்ளதென்றும், ஆறு அங்கங்களுள்ளது என்றும், ஸக்ருதிதி - அது ஒரே தடவை செய்யப்படவேண்டியது என்றும், ஸம்ஹிதாஸ்வநே꞉ - பாஞ்சராத்திரங்களால், ப்ரோக்த꞉ - நன்றாய் சொல்லப்பட்டிருக்கிறது. தத்ர - அவைகளில், ஆநுகூல்ய - (எம்பெருமானுக்கு அநுகூலனாயிருக்கிறேன் என்கிற ஸங்கல்பமும், பிரதிகூலனாயிருப்பதை விடுவதும்— ஆகிய) இரண்டால், அபாயாத் விரதி꞉ - எம்பெருமானுடைய ஆஜ்ஞையை மீறிநடப்பதிலிருந்து ஒழிவதும், ஏகேந - ஒன்றாலே, அநந்யோபாயதா - மோக்ஷத்திற்கு வேறு உபாயமில்லாமலிருப்பதும், ஏகேந - வேறொன்றாலே, ப்ராஞ்ஜலித்வம் - தன் மனது உறுதியாயிருப்பதும், அந்யேந - வேறொன்றாலே, நிஜபரவிஷயே - தன்னுடைய பரத்தை உத்தேசித்து, த்யாஜ்யதேச்சா - ஜீவன் வேண்டும் பலனை நான் கொடுக்கவேண்டுமென்கிற எம்பெருமானுடைய இச்சையும், போத்யா - காட்டப்படுகின்றன. ஸபரிகரே ஹ - அங்கங்களோடு கூடிய இந்தப் பிரபத்தியில், தாத்ருசீ

ந்யாஸிவை॰ஷி: - இது எம்பெருமானுலே செய்யப்படுகிறது என்பது முதலான எண்ணமோ, தத்தஜ்ஞாநவ்யாகதா - தத்துவங்களை அறிவதால் வருவது.

(கருத்து) பிரபத்திக்கு அங்கங்கள்ஐந்து. மோக்ஷத்திற்காகச் செய்யும்போது ஸாத்துவிகத்தியாகத்தையும் சேர்த்து அங்கங்கள் ஆறு ஆகின்றன. இவைகள் பிரபத்தியைச் செய்யும்போது மாத்திரம் இருக்கவேண்டியது. அவைகளாவன:— (1) எம்பெருமானுக்கு அநுகூலனுயிருப்பேன் என்று எண்ணுவது; (2) பிரதிகூலனுயிருப்பதை விடுவது; (3) வேறு உபாயமில்லாமல் தான் வருத்தப்படுவதைத் தெரிவிப்பது; (4)தன்னை எம்பெருமான் கட்டாயம் இரக்ஷிப்பன் என்று திருடமான நம்பிக்கை; (5) இரக்ஷிக்கவேண்டும் என்று எம்பெருமானைக் கேட்பது. இவைகளின் பிரயோஜநங்கள்— முதலிரண்டு அங்கங்களால் எம்பெருமானுடைய ஆஜ்ஞையை மீறுமலிருப்பது. மூன்ருவதால் தன்னுடைய வருத்தப்படுகிற இருப்பைப் பார்த்து எம்பெருமானுக்கு இரக்கம் மேலிடுவது. பிறகு வேறு உபாயத்தைச் செய்யாமை. நான்காவதால் எம்பெருமானிடம் கூசாமல் தன் பாத்தை ஒப்புவிப்பதும், பிறகு அதைப் பற்றி விசாரப்படாமலிருப்பதும். ஐந்தாவதால்- எம்பெருமானுக்கு இவனை இரக்ஷிக்கும்படியாக எண்ணம் உண்டாவது. செய்யும் பிரபத்தியானது எம்பெருமானுலேயே செய்யப்படுகிறதென்றும், அதில் பலன் அவனுடையதென்றும், அதுவும் அவனுடைய வேலை என்றும், அதுவும் உபாயமன்று, எம்பெருமானே பிரதாநமான உபாயம் என்றும் முமுக்ஷு எண்ணவேண்டியது. இந்த எண்ணத்துக்கு ஸாத்துவிகத்தியாகம் என்று பெயர். இது ஒருவன் தன் ஸ்வரூபத்தை அறிவதால் ஏற்படும்.

குறிப்பு:— (1) ஸாத்துவிகத்தியாகமானது சாஸ்திரத்திஞல் சொல்லப்பட்ட எந்த கர்மத்துக்கும் வேண்டியது. ஆகையால் அது மோக்ஷத்திற்காகச் செய்யும் பிரபத்தியில் வரும். மற்ற பிரபத்திகளில் வராது. இதைக் காட்டுவதற்காக "தூ" என்கிற சொல் சுலோகத்தில் சேர்த்திருக்கிறது.

(2) அங்கியான பிரபத்தியைச் செய்யும்போது அது எப்படி வேண்டியதோ அப்படியே அங்கங்களைச் செய்யும்போதும் அது வேண்டியது.

---

## 12-வது ஸாங்கப்பிரபத்நாதிகாரம்.

அவ:— பிரபத்தி இன்னதென்று முதல் சுலோகத்தால் அருளிச்செய்கிறார்:—

ஸ்வேஷ்டே து:ஸாத்யே ஸ்வத: பரதோ வா க்வசந தஸ்ய
பாரந்யாஸம் யாச்ஞாயுதமபிவதந்தி ப்ரபதநம் ।
இத: பரம் மத்ப்ரயத்நாநபேக்ஷேண பவதா
ஸாத்யோऽஸ்மத்ஸ்வார்த்த இதி புத்திவிசேஷம் தம் விது: ॥

(ப-ரை) ஸ்வேஷ்டே - இஷ்டமான பலனானது, ஸ்வத: பரத: வா - தன்னாலும் வேறு உபாயத்தாலும், து:ஸாத்யே - ஸம்பாதிக்க முடியாதிருக்கையில், க்வசந - ஒருவனிடத்தில், யாச்ஞாயுதம் - கேட்டுக்கொள்ளுவதோடு கூடின, தஸ்ய பாரந்யாஸம் - அதின் பரத்தைக் கொடுப்பதை, ப்ரபதநம் - பிரபத்தி என்று, அபிவதந்தி - சொல்லுகிறார்கள். இத: பரம் - இந்த க்ஷணத்திற்குமேலே, பவதா - தேவரீராலே, மத்ப்ரயத்நாநபேக்ஷேண - என்னுடைய பிரயத்நத்தை எதிர்பார்க்காதவராய், அஸ்மத் ஸ்வார்த்த: - நான் வேண்டும் இந்தப் பிரயோஜநமானது, ஸாத்ய: - வேலைசெய்து முடித்துவைக்கத் தகுந்தது, இதி - என்கிற, புத்திவிசேஷம் - புத்திவிசேஷமென்று, தம் - அதை, (பரத்தைக் கொடுப்பதை) விது: - அறிகிறார்கள்.

(கருத்து) ஒரு பலனை ஆசைப்பட்டு அது தன்னாலும் அடைய முடியாதது, வேறொரு உபாயத்தைக் கொண்டும் அடையமுடியாதது என்று தெரிந்து, ஸமர்த்தனும், இரக்கம் உள்ளவனுமிருக்கிற ஒருவனிடத்தில் அந்தபலனை ஸாதிக்கவேண்டிய வேலையை நீயே செய்து இதை முடித்துவைக்க வேண்டும் என்று சொல்லி பாரத்தை ஒப்புவிப்பதே தான்—பிரபத்தி. ஒப்புவிப்பதாவது— இது என்னால் முடியாது, தேவரீர் என்னை எதிர்பார்க்கக்கூடாது. தேவரீரே இதை முடித்துக் கொடுக்க வேண்டுமென்று எண்ணுவது.

குறிப்பு:- (1) 'புத்திவிசேஷம் தம்' என்பதற்கு எண்ணமே என்று பொருள். ஆகையால் கேட்டுக்கொள்ளுவது மாத்திரமே பிரபத்தி அன்று. அதோடு கூடின பரத்தைக் கொடுப்பதே பிரபத்தி.

(2) 'ஸா' என்பதற்கு வ என்று பொருள்.

(3) ஆசாரியர்கள் சிஷ்யர்களுக்கு இதை அபிநிவேசத்துடன் உபதேசம் செய்கிறார்கள் என்று "சுஷிவக்ஷி" என்பதில் "சுஷி" என்பதின் கருத்து.

---

அவ:— பிரபத்தி விஷயத்தில் சிலர் சொல்லுவது அதிவாதமென்று காட்டிக்கொண்டு, பாரத்தை எம்பெருமானிடம் ஒப்புவிப்பதாலேயே முமுக்ஷு நிர்பரனுவான் என்று கடைசி ச்லோகத்தாலே அருளிச்செய்கிறார்:—

> யந்தா ஸ்யந்தநஸாரதிக்ரமவசாத் த்ரய்யந்தஸந்தர்சிதே
> தத்த்வாநாம் த்ரிதயே யதார்ஹவிவிதவ்யாபாரஸந்நாஹிநி। ஹைதுக்யம் த்ரிஷு கர்த்ருதோபயோஸ்ஸ்வா
> யீநமேகத்ர தஸ் ஸ்வாமிஸ்வீக்ருதயத்பரோऽயம் ஸௌம்ய
> ஸ்தத்ர ஸ்வயம் நிர்பர: ॥ ௨௧ ॥

(ப-ரை) யந்தா - குதிரைகள், ஸ்யந்தந - ரதம், ஸாரதி - வண்டிஓட்டுகிறவன், க்ரமவசாத் - இந்தக்கிரமத்தை உடையதாக, த்ரய்யந்தஸந்தர்சிதே - வேதாந்தங்களால் காட்டப்படுகிற, யதார்ஹ - அவரவர்களுக்குத் தகுந்தபடி, விவித - வெவ்வேறான, வ்யாபாரஸந்நாஹிநி - வியாபாரங்களின் வரிசைகளை உடைய, தத்த்வாநாம் த்ரிதயே - தத்துவங்களுடைய மூன்றில், ஹைதுக்யம் - ஒரு வேலைக்குக் காரணமாயிருப்பது, த்ரிஷு - மூன்று பேர்களிடத்திலும், கர்த்ருதா - பிரயத்நம் செய்வது, உபயோ: - இருவர்களிடத்திலும், ஸ்வாயீநதா - ஒருவனுக்கும்உட்படாதது, ஏகத்ர-ஒருவனிடத்திலுமிருக்கின்றன. தஸ் - ஆகையினால், ஸௌம்ய: - சோம்பேறியான, ஸயம் - இவன், ஸ்வாமிஸ்வீக்ருத - எம்பெருமானுலே ஒப்புக் கொள்ளப்பட்ட, யத்பர: - எந்த பலத்தின்விஷயத்தில் பாரத்தை உடையவனே, தத்ர - அதில், ஸ்வயம் - தான், நிர்பர: - பரமில்லாதவனுகன.

(கருத்து) எம்பெருமானும், பிரபத்தி செய்கிற தானும், தன் உடம்பும், வண்டிக்காரனைப் போலவும், வண்டியில் பூட்டின குதிரைகள் போலவும், வண்டிபோலவும் இருக்கிறார்கள் என்று வேதாந்தங்கள் சொல்லுகின்றன. அவைகளில் ஒவ்வொன்றின் வேலை வெவ்வேறாக இருக்கிறது. பிரபத்தியாகிற வேலையைச் செய்யும்போது, மூன்றுக்கும் வேலை உண்டு. அறிவில்லாத உடம்பு நமஸ்காரம் செய்யவேண்டியது; வாய் மந்திரத்தைச் சொல்லவேண்டியது; மனது நினைக்கவேண்டியது. பிரயத்நம் செய்வது பிரபத்தி பண்ணுகிறவன் வேலை. அவனை அதைச் செய்யும்படி தூண்டுவதும், கூடவே ஸஹகாரியாக இருந்து அந்த வேலையை முடிப்பதும் எம்பெருமானுடைய வேலை. ஒருவனுக்கும் உட்படாத எம்பெருமான் தன் பிரயோஜநமாகப் பிரபத்தியைச் செய்வித்தானாகையால் முமுக்ஷுவுக்கு அந்த விஷயத்தில் செய்யவேண்டியது ஒன்றுமில்லை. நம்மை விட்டு பாரம் நீங்கினதே என்று அவன் ஸுகமாயிருக்கலாம்.

குறிப்பு:-(1) பிரபத்தி விஷயத்தில் சிலர் சொல்லுவது அதிவாதமென்று காட்டப்படுகிறது. ஜீவன் ஜ்ஞாதா (அறிகிறவனே) அல்லாமல், கர்த்தாவன்று, ஆகையால் அவன் பிரபத்தியைச் செய்யமுடியாது — என்று ஒருவாதம். வண்டியைப் போலல்லாமல் குதிரைகளைப்போல பிரயத்நம் பண்ண ஜீவனுக்கு சக்தியிருப்பதால், அவன் பிரபத்தியைச் செய்யலாம். இது "க்ருத-ந்ருஹாவ உஹயொ:" என்பதால் காட்டப்படுகிறது.

(2) ஜீவன் எம்பெருமானுக்கு உட்பட்டவனாகையாலே, அவனால் பிரபத்தி செய்யமுடியாது — என்பது இரண்டாவது வாதம். குதிரைகள் வண்டிக்காரனுக்கு உட்பட்டிருந்த போதிலும், வண்டியை இழுத்துக்கொண்டு போகச் சக்தியிருக்கிறது. ஆகையால் குதிரையைப்போல் இவனும் பிரபத்தியாகிற வேலையைச்செய்யலாம். இதுவும்அந்தப்பதங்களாலேகாட்டப்படுகிறது.

(3) எம்பெருமான் சேஷியாகையாலே அவனே நம்மை ரக்ஷிப்பன்; நாம் ஒன்றும் செய்ய வேண்டியதில்லை என்பது மூன்றாவது வாதம்— வண்டிக்காரன் ஸ்வதந்திரனாக இருந்தபோதிலும், குதிரைகளை வேலை செய்யும்படி பண்ணியே போகவேண்டிய விடத்திற்குப் போகிறான். அப்படியே எம்பெருமானும், ஜீவனைப் பிரபத்தி செய்யும்படி செய்து அவனை ரக்ஷிக்கிறான்.

வண்டிக்காரன் குதிரைகளில்லாமல் போகவேண்டிய இடத்திற்கு நடந்தே போகலாம். அப்படியே எம்பெருமானும் பிரபத்தியைச் செய்விக்காமலே, ஜீவனை ரக்ஷிக்கலாம். அப்படிச் செய்வதால் பக்ஷபாதம் என்கிற குற்றம் எம்பெருமானுக்கு வரும். அதில்லாமல் இருப்பதற்காக ஒரு வியாஜத்தை முன்னிட்டுக் கொண்டே ஜீவனை ரக்ஷிக்கிறதென்று ஏற்பாடு செய்திருக்கிறான். அவன் ஸ்வதந்திரனானதால் அந்த ஏற்பாடு செய்ய முடியும்.

(4) குதிரைகள் வண்டியை இழுத்துக்கொண்டு போவது வண்டிக்காரன் பிரயோஜநத்திற்காகவே. அப்படி எம்பெருமான் தன் பிரயோஜநத்திற்காகவே பிரபத்தியைச் செய்விக்கிறான். குதிரைகள் வண்டிக்காரன் சொத்தாயிருப்பதுபோல், ஜீவன் எம்பெருமானுடைய சொத்து. அவனுக்கு வேலை செய்து அவனை ஸந்தோஷப்படுத்த வேண்டியது.

## 13-வது கிருதகிருத்யாதிகாரம்.

அவ:— இப்படி ஆறு அதிகாரங்களாலே உபாயங்களைச் சொல்லி, கொஞ்சகாலம் இங்கேயே இருக்கவேண்டும் என்று ஆசைப்படுகிற பிரபந்நன் எப்படி இருக்கவேண்டியது என்று மேல் ஏழு அதிகாரங்களால் சொல்லப்படுகிறது. அவைகளில் முதலாவதான இந்த அதிகாரத்தில் செய்யவேண்டிய வேலை ஒன்றுமில்லாமையால், அவன் ஸந்தோஷமாயிருக்க வேண்டியது என்று முதல் சுலோகத்தால் அருளிச்செய்கிறார்:—

ஸர்வஶக்தௌ ஸர்வஜ்ஞே ஸஹஜஸுஹ்ருதி ஸ்வீக்ருதபரே
யஸ்யார்த்தம் கர்த்தவ்யம் ந புனரிஹ யத: கிஞ்சிதத்ராபி ந: |
[illegible]
க்ருதார்த்தா: ஸ்வம் க்ருபணமபி கைங்கர்யயோக்யம் ந:॥

(ப-ரை) ஸர்வஶக்தௌ - (எல்லாம் செய்யச்) சக்தியுள்ளவனையும், ஸர்வஜ்ஞே - எல்லாம் தெரிந்தவனையும், ஸஹஜஸுஹ்ருதி- ஸ்வபாவத்தாலே கருணை உள்ளவனையுமிருக்கிற எம்பெருமான், ஸ்வீக்ருதபரே - ஒப்புக்கொண்ட பரத்தை உடையவனாயிருக்கையில், யஸ்யார்த்தம் - எந்த பலனுக்காக, புந: - மறுபடியும்,

கர்தவ்யம் - செய்யவேண்டியது, யத் கிஞ்சித் - (அப்படிப் பட்ட) ஒன்றும், இஹ - இங்கே, ந: - நமக்கு, ந - இல்லை, நிராபாயி - தானாக வரவேண்டிய, அமிதாநந்தஜலதௌ - அளவில்லாத ஆநந்தத்திற்கு ஸமுத்திரமான, தஸ்மிந் - அந்த பரிபூர்ணபிருமமாநந்தத்தின் அநுபவத்தில், ஸ்வம் - தம்மை, நியம்ய: - அடக்கிக்கொண்டு, (அதையே நினைத்துக் கொண்டிருக்கும்படி செய்துகொண்டு) க்லாம்யத: - (பலன் உடனே கிடைக்காமையால்) துக்கப்படுகிற நம்மை, கைங்கர்யதநிந: - கைங்கரியமாகிய தநத்தை உடையவர்களாய்க்கொண்டு, க்ருதார்த்தயாம: - கிருதார்த்தர்களாகச் செய்துகொள்ளுகிறோம்.

(கருத்து) நம்முடைய பாரத்தை எம்பெருமான் ஒப்புக் கொண்டுவிட்டான். நமக்கு ஆகவேண்டிய வேலையைஅவன்செய்து முடிக்கச் சக்திபுள்ளவன்; அதைச் செய்யும் வழியும் அவனுக்குத் தெரியும். அவன் நம்முடைய வருத்தத்தைப் பார்த்து, மிகுந்த கருணையினால் கட்டாயம் இரக்ஷிப்பன். ஆகையால் இந்த விஷயத்தில் செய்யவேண்டிய வேலை நமக்கு ஒன்றுமில்லை. இந்த விஷயத்தை நாம் தெரிந்து, வரப்போகிற அளவில்லாத ஆநந்தத்தை எப்போதும் நினைத்துக்கொண்டு, எம்பெருமானுக்கு வேண்டிய கைங்கரியங்களை நம்மால் கூடியவரையில் செய்து நம்மை கிருதார்த்தர்களாகச் செய்கிறோம். நாம் முன் இருந்த இருப்பையும் நாம் இப்போதிருக்கிற இருப்பையும் நினைத்துக்கொண்டு ஸந்தோஷமாயிருக்கிறோம்.

குறிப்பு:— (1) வரப்போகிற ஆநந்தமானது, நம்முடைய கர்மங்கள் கழிந்தால் தானே வரும். ஒரு ரத்தினத்திலிருக்கிற அழுக்கை அலம்பினால், அதின் ஒளியானது தானே தோன்றும், அதுபோல்.

(2) கர்மத்தினால் வருகிற ஸுகமானது அல்பமாயும் அந்த அல்பமான ஸுகத்திலும், சிலது கொஞ்சமாயும் சிலது அதிக மாயுமிருக்கும். மேல் வரப்போகிற ஆநந்தம் அது போலில்லாமல் அளவில்லாததாயும் ஒரே விதமாயும் இருக்கும். இது "அமிதாநந்த" என்பதால் காட்டப்படுகிறது.

(3) "க்ருபணம்" என்கிற சொல்லுக்கு துக்கப்படுபவன் என்கிற பொருளிருந்தபோதிலும், இங்கே இனி துக்கமில்லாமையால் துக்கத்திற்குக் காரணமான பலன் இப்போது கிடைக்காமலிருப்பது சொல்லப்படுகிறது.

(4) 'இஹ யத்கிஞ்சித்' என்கிற சொற்களாலே, இங்கேயோ, பரலோகத்திலோ வேறொன்றும் நாம் செய்யவேண்டியது இல்லை என்றும், பிரபத்திக்கு மேலே ஒரு குற்றம் செய்து அது போவதற்காகப் பிரபத்தி பண்ணினபோதிலும், மோக்ஷத்திற்காக ஒன்றும் செய்யவேண்டியதில்லை என்றும் காட்டப்படுகிறது.

---

அவ:— முதல் சுலோகத்தில் ஒன்றும் செய்யவேண்டியது இல்லை என்று சொன்னதை விரிவாய்ச் சொல்லி கைங்கரியம் செய்யவேண்டியது என்று கடைசி சுலோகத்தால் அருளிச் செய்கிறார்:—

பகவதி ஹரௌ பாரம் கந்தும் பரந்யஸநம் க்ருதம்
பரிமிதஸுகப்ராப்த்யை க்ருத்யம் ப்ரஹீணமக்ருத்யவத் |
பவதி ச வபுர்வ்ருத்தி: ப்ராச்யை: க்ருதைர்நியதக்ரமா
பரமிஹ விபோராஜ்ஞாஸித்தாஸ்ஸபர்யாஸ்த்வநந்யதா ||

(ப-ரை) ஹரௌ - நம்முடைய விரோதிகளைப் போக்க ஸமர்த்தனை, பகவதி - ஆறு குணங்களை உடைய எம்பெருமானிடத்தில், பாரம் கந்தும் - ஸம்ஸாரத்தின் அக்கரையை அடைவதற்காக, பரந்யஸநம் - பரத்தைக் கொடுப்பது, க்ருதம் - செய்யப்பட்டது. பரிமிதஸுகப்ராப்த்யை - அளவுள்ள ஸுகத்தை அடைவதற்காக, க்ருத்யம் - செய்யவேண்டியது, அக்ருத்யவத் - செய்யத் தகாதவைகள்போல், ப்ரஹீணம் - விடப்பட்டது. வபுர்வ்ருத்தி: ச - உடம்பின் இருப்பானது, (ரக்ஷணம்) ப்ராச்யை: க்ருதை: - முன்னால் செய்யப்பட்ட கர்மங்களால், நியதக்ரமா - ஏற்பட்ட வரிசைப்படி, பவதி - நடக்கும். இஹ - இங்கிருக்கும்போது, விபோ: - யஜமானனாகிய எம்பெருமானுடைய, ஆஜ்ஞாஸித்தா: - அவன் நீ இதைச் செய், இதைச் செய்யாதே என்று அந்தந்த ஜாதிக்கும், அந்தந்த

ஆஸ்ரமத்திற்கும் எம்பெருமான் ஏற்படுத்தி இருக்கிற ஆஜ்ஞை யாகிற அணை, ஸ்வை: - தம் ஸ்வரூபத்தை ஆசாரியர்களி டம் இருந்து அறிந்துகொண்ட பிரபந்நர்களாலே, ஸ்வம் - ஸ்வ யம் பிரயோஜநமாக, ஸாத்வாவ்ருத்தெ - செய்கையால் இரக்ஷிக் கப்படுகிறது.

(கருத்து) பிரபந்நன் பிரபத்திக்கு மேலே ஒரு வேலையைச் செய்யவேண்டியதானால், மூன்று காரணங்கள் இருக்கலாம். (1) மோக்ஷபலனை அடைவதற்காக; அதுவிஷயத்தில் செய்யவேண் டிய பொறுப்பை எம்பெருமானிடத்தில் கொடுத்தாய் விட்டது. அவனோ நம்முடைய கர்மங்கள் எல்லாவற்றையும் போக்குவதற் குச்சக்தியுள்ளவன். அதற்கு வேண்டிய ஜ்ஞாநமுள்ளவன். ஆகை யால் அந்தக்காரணம் இல்லை. (2) விஷயஸுகத்தை அடைவதற் காக; அதற்காக முன்னாலே பாடு பட்டோம். இப்போது அதை விட்டுவிட்டோம். (3) இருக்கிறவரையில் உடம்பை இரக்ஷிப்ப தற்காக; அது முன் செய்த கர்மங்களுக்குத்தகுந்தபடி தானே நடக்கும். இந்தகாரணமுமில்லை. ஆகையால் ஒருவிதத்தாலும்நாம் ஒன்றும் செய்யவேண்டியது இல்லை. ஆனால் வெறுமனே இருக்க லாமோ என்றால், அது கூடாது; ஏனென்றால், எம்பெருமான் இன்ன வேலையைச் செய் என்று உத்திரவு பண்ணியிருப்பதால், அவைகளை நாம் செய்யவேண்டியது. அந்த உத்திரவுப்படி நடக்க வேண்டியதற்காக நாம் அவைகளைச் செய்யவேண்டியது. நம்மு டைய ஸ்வரூபத்தைத் தெரிந்துகொண்ட நமக்கு இது தான் தகுந்தது. அவனுக்கு நாம் சேஷமாயிருப்பதாலே அவன் இஷ் டப்படி அவன் சொன்னதைச் செய்யவேண்டியது. நாம் அவ னுக்கு உட்பட்டவர்களாயிருப்பதாலே அவைகளைச் செய்யாவிட் டால் அவனுடைய தண்டனை வரும். மேலும் நமது யஜமாநனாகிய எம்பெருமானுக்கு ஒத்து நடப்பதாகிய புருஷார்த்தமும் கிடைக்காது.

குறிப்பு:— "ஸாத்வாவ்ருத்தெ" என்கிற சொல்லில், ஸாது என்பதால், பிரபத்திக்கு மேலே எம்பெருமான்கைங்கரி யத்தை நாம் செய்யவேண்டியது என்று காட்டப்படுகிறது.

## 14-வது ஸ்வநிஷ்டாபிஜ்ஞாநாதிகாரம்.

அவ:- பிரபந்நன் ஸ்வரூபம் முதலிய மூன்றையும் எப்போதும் நினைத்துக்கொண்டு இருக்கவேண்டியது என்றும், அப்படி இருப்பதற்கு அடையாளங்கள் இன்னவை என்றும் முதல் சுலோகத்தால் அருளிச்செய்கிறார்:—

ஸ்வரூபோபாயபுருஷார்த்தேஷு யதாவந்நிவிஷ்டாத்மந: ஸ்ம்ருதிக்ஷமமயோக்தேஷ்வமர்த்தித: ப்ரப்ந்தீத: ।
ஸ்வநிஷ்டாபிஜ்ஞாநம் போக்யம்பவத்யாசார்யஹ் தத: ।

(படை) ஸ்வரூபே - தன் ஸ்வரூபம், உபாய - செய்த உபாயம், புருஷார்த்த - அடையப் போகிற புருஷார்த்தம் இவைகளில், யதாவத் - உள்ளபடி, நிவிஷ்ட - வைக்கப்பட்ட, ஸ்ம்ருதிக்ஷ - பிரபத்திக்கு மேல் தொடர்ந்து வருகிறதாய் ஒரு கெட்ட யுக்தியினாலும் கலங்காதபடி உறுதியான அறிவை உடையவனுக்கு, ஸ்வநிஷ்டாபிஜ்ஞாநம் - ஸ்வநிஷ்டைக்கு அடையாளங்கள், உபநதாஸ - சீக்கிரம் வரப்போகிற, அபவர்க்கஸ - மோக்ஷத்தைக் காட்டிலும், போக்யம் - போக்கியமாயிருக்கும், யஸ்ய - எந்த அடையாளங்களுடைய, மஹிம்நா - மஹிமையினாலே, விநீத: - ஆசாரியர்களால் சிக்ஷிக்கப்பட்ட, அஸௌ - இந்த பிரபந்நன், கம்பீரா - ஆழமாயும், அப்ரதிஷ்ட்யா - நிரப்பக்கூடாததாயும், ககநஸம: - ஆகாசம்போல் பெரிய தாயுமிருக்கிற, ஓடைகள் - ஓட்டைகளுடைய கூட்டங்களை, ஸ்தகயிதும் - மறைப்பதற்கு, ப்ரபவதி - சக்தியுள்ளவனாக ஆகிறான்.

(கருத்து) பிரபந்நன் தன்னுடைய ஸ்வரூபத்தையும், தான் செய்த உபாயத்தையும், தான் அடையப்போகிற புருஷார்த்தத்தையும் உள்ளபடி அறிந்து, அவைகளை எப்போதும் நினைத்துக் கொண்டிருக்கவேண்டியது. இப்படி நினைத்துக்கொண்டிருப்பதற்கு அடையாளங்கள் வரப்போகிற மோக்ஷஸுகத்தைக்

காட்டிலும் அதிக இனியவைகளாகஇருக்கும். இப்படி இருந்தால் அவனுக்கு இங்கிருந்த நாளில் ஒருவிதமான துன்பமும் வராது.

குறிப்பு:— (1) இங்கே சொல்லுகிற ஓட்டைகளாவன:— கஷ்டங்கள். அவைகள் மூன்றுவிதங்களாயிருக்கும்— (1) ஒருவன் தன்னை வைதால் தனக்கு உண்டாகும் துன்பமும், வைதவனிடத்தில் கோபமும். தன்னைப்போலே அவனும் எம்பெருமானுக்கு உட்பட்டவனுகையாலே, அவனைக்கொண்டு தான் முன்செய்த கர்மத்துக்காக எம்பெருமான் தன்னைத் தண்டிக்கிறுன் என்றும், இப்படி ஒரு கர்மத்தை அவன் போக்கினுன் என்றும் நினைக்க வேண்டியது. அப்போது மனக்கலக்கமிராது; ஸந்தோஷமுமுண்டாகும். (2) மோக்ஷத்திற்காக வேறு உபாயம் செய்வதும், வேறு தேவதைகளின் காலில் போய் விழுவதும், தனக்கு ஒரு கெடுதல் வருவதாகத் தோன்றினுல் பயப்படுவதும். எம்பெருமான் தான் செய்த பிரபத்தியினுலே ஸந்தோஷப்பட்டு, தன்னுடையசுமையை ஒப்புக்கொண்டிருக்கிறுனென்றும், அவன் தன்னை இரக்ஷிப்பதற்கு ஸித்தமாய்இருக்கிறுன் என்றும் அறிந்தால், இந்தக் கஷ்டங்கள் வரமாட்டா. (3) தனக்கு ஒரு லாபம் கிடைத்தால் ஸந்தோஷமும், கிடைக்காவிட்டால் துக்கமும். எம்பெருமானையே தான் அடையவேண்டியது, வேறொன்றையும் அடையவேண்டியது இல்லை என்றும் எப்போதும் நினைத்துக் கொண்டிருந்தால் இந்தக் கஷ்டமும் வராது.

(2) இப்படி தனக்கு நிஷ்டையில்லாமல் போனுல் இந்தக் கஷ்டங்களைப் போக்குவதற்கு வழியில்லை இந்தக் கஷ்டங்கள் ஒன்றிரண்டாயிருந்தால் பொறுக்கலாம். அவைகளுக்குக் கணக்கில்லை. ஆழமாயும் அகலமாயும் இருக்கிற ஓட்டையை நிரப்புவது எப்படிக் கஷ்டமோ, அப்படியே இந்தக் கஷ்டங்களைப் போக்கமுடியாது.

---

அவ:— பிரபந்நனுக்குக் கீழ்ச்சொன்ன நிஷ்டையானது எம்பெருமான் கொடுத்து வரவேண்டுமென்றும், ஏதோ ஒரு பாக்கியத்தாலே இங்கே கொஞ்சநாள் இருக்கவேண்டும் என்றும் அவன் ஒப்புக்கொள்ளுகிறுன் என்றும்கடைசிசுலோகத்தால் அருளிச்செய்கிறுர்:—

ஸ்வாபோத்போதவ்யதிகரஸமே ஸம்ஸ்ருதிமோக்ஷாந்தராலே
காலம் கஞ்சிஜ்ஜகதி விதிநா கேநசித் ஸ்தாப்யமாநா: ।
தத்த்வோபாயப்ரப்ருதிவிஷயே ஸ்வாமிதத்தாம் ஸ்வநிஷ்டாம்
சேஷாம் க்ருத்வா சிரஸி க்ருதிநஶ்சேஷமாயுர்நயந்தி ॥

(ப-ரை) ஸ்வாப - தூக்கம், உத்போத - விழித்துக்கொள்வது, வ்யதிகரஸமே - இவைகள் கலந்திருக்கும் ஸ்வப்நாவஸ்தைக்கு ஸமமான, ஸம்ஸ்ருதி - ஸம்ஸாரத்தில் அநுபவம், மோக்ஷ - மோக்ஷமாகிய ஸுகம், அந்தராலே - இவைகள் நடுவில் இருக்கிற காலத்தில், கஞ்சித் காலம் - கொஞ்சகாலம், கேநசித் விதிநா - ஏதோ ஒரு பாக்கியத்தாலே, ஜகதி - இந்த உலகத்தில், ஸ்தாப்யமாநா: - இருக்கும்படிசெய்யப்பட்டவர்கள், தத்த்வோபாயப்ரப்ருதிவிஷயே - தத்துவம் உபாயம் முதலானவைகளின் விஷயத்தில், ஸ்வாமிதத்தாம் - யஜமாநனாகிய எம்பெருமானால் கொடுக்கப்பட்ட, ஸ்வநிஷ்டாம் - ஸ்வநிஷ்டையை, சிரஸி - தலையில், சேஷாம் - பரிவட்டமாக, க்ருத்வா - வைத்துக்கொண்டு, க்ருதிந: - கிருதார்த்தர்களாய் இருந்துகொண்டு, சேஷமாயு: - பாக்கி ஆயுஸின் காலத்தை, நயந்தி - நடத்துகிறார்கள்.

(கருத்து) பிரபத்திக்கு பின்னால் பிரபந்நன் இருக்கும் காலமானது ஸ்வப்நகாலம்போல் மிகவும் கொஞ்சமாயிருக்கும். அதில் முன்போல ஸ்வரூபஜ்ஞாநம் இல்லாமலிருக்காது. ஸ்வரூபஜ்ஞாநமுண்டாகியிருக்கிறது. ஆனால் மோக்ஷதசையில் போல பூர்ணமான ஜ்ஞாநமில்லை. அர்ச்சையாய் எழுந்தருளியிருக்கிற எம்பெருமானுக்குக் கைங்கரியம் செய்யவேண்டுமென்கிற ஆசையாலேயோ, அல்லது, ஆசாரியர்களுடைய கிரந்தங்களை ஸேவிக்க வேண்டும் என்கிற ஆசையாலேயோ, அவன் இங்கே இருக்கும்படி ஏற்படுகிறது. எம்பெருமான் அநுக்கிரஹத்தால் கொடுத்த தன்னுடைய நிஷ்டையை மிகுந்த கௌரவத்துடன் வைத்துக்கொண்டு எம்பெருமானுக்குச் செய்யும் கைங்கரியத்தாலே, தன்னைக் கிருதார்த்தனைப் பண்ணிக்கொண்டு பாக்கி காலத்தைப் போக்குவன்.

---

## 15-வது உத்தர கிருத்தியாதிகாரம்.

---

அவ:— பிரபந்நன் என்ன வேலைகளைச் செய்துகொண்டு காலம் போக்கவேண்டுமென்று இதில் முதல் சுலோகத்தால் அருளிச்செய்கிறார்:—

ஸந்தோஷார்த்தம் விம்ருசதி பஹுச: ஸத்பிஸ் ஸ்ரீபாஷ்யம்
நித்யம் ப்ரூதே நிசமயதி ச ஸ்வாது ஸூரிவ்யாஹ்ருதாநி।
ஸ்வீக்ருத்யைநாம் அநகஸுகிதாம் வ்ருத்திமாதேஹபாதாத்
அத்ராமுத்ர ஸ்வபரவிகமே தத்தசித்த: ப்ரபந்ந: ॥

(பதவுரை) ஸந்தோஷார்த்தம் - ஸந்தோஷத்திற்காகவே, ப்ரபந்ந: - பிரபந்நன், ஸத்பி: - எம்பெருமானுடைய ஜ்ஞானம் உண்டாயிருப்பதால் தன் ஸ்வரூபத்தைப் பெற்றவர்களுடன், ஸ்ரீபாஷ்யம் - ஸ்ரீபாஷ்யத்தை, பஹுச: - அடிக்கடி, விம்ருசதி - படிக்கிறான். ஸ்வாது - இனியவைகளான, ஸூரிவ்யாஹ்ருதாநி - ஆழ்வார்களுடைய பிரபந்தங்களை, நித்யம் - எப்போதும், ப்ரூதே - அயலாருக்குச் 'சொல்லிக் கொடுக்கிறான், நிசமயதி ச - அவர்களிடமிருந்து தான் கேட்கிறான். எப்படி இருந்து என்றால், அத்ராமுத்ர - இங்கே ஆகவேண்டிய விஷயங்களிலும், மோக்ஷவிஷயத்திலும், ஸ்வபரவிகமே - தன்னுடைய பொறுப்புப் போய்விட்டதில், தத்தசித்த: - வைக்கப்பட்ட நினைவுள்ளவனாய், ஆதேஹபாதாத் - உடம்பு கீழே விழுகிற வரையில், அநகஸுகிதாம் - தோஷமில்லாமலும், ஸுகமாயும் நடக்கிற, வ்ருத்திம் - விருத்தியை, ஸ்வீக்ருத்ய - ஒப்புக் கொண்டு, கீழ்ச்சொன்னபடி காலத்தைப் போக்கவேண்டியது.

(கருத்து) பிரபந்நன் பிரபத்தி செய்த காலத்திற்கு மேலே எம்பெருமானுக்குத் தான் சேஷனாயிருப்பதாலே, அவனுடைய ஸந்தோஷத்துக்காக, அவனால் இவைகளைச்செய் என்று சொன்ன ஆசிரமதர்மங்களையும், வர்ணதர்மங்களையும் அபராதமுண்டாகாதபடி செய்துகொண்டு வரவேண்டியது. அவைகள் பக்தனைப் போலே உபாயத்துக்கு அங்கமாகச் செய்யவேண்டியதில்லை. எம்பெருமானுக்கு ஸந்தோஷத்தைக் கொடுப்பதால் அவைகளை

இவனுக்குப் பிரயோஜநம். இங்கிருக்கும் காலத்தில் அவன் உடம் பின் ரக்ஷணம் முன் செய்த கர்மத்துக்குத் தகுந்தபடி நடக்கும். அதைப்பற்றி அவன் விசாரப்படவேண்டியதில்லை. மோக்ஷமும் பிரபத்தியினாலேயே ஸந்தோஷப்பட்ட எம்பெருமான் தானே கொடுப்பன். ஆகையால் அதிலும் அவனுக்குப் பொறுப்பில்லை. அவன் காலத்தை ஸ்ரீபாஷ்யத்தை ஸேவித்துக்கொண்டாவது அதற்குச் சக்தியில்லாதபோனால், ஆழ்வார்களுடைய பிரபந்தங் களை ஸேவித்துக்கொண்டாவது போக்கவேண்டியது. இதுவும் ஜ்ஞாநம் ஸம்பாதிப்பதற்காக அன்று. எம்பெருமானுடைய குணங்களை அந்த கிரந்தங்கள் சொல்லுவதால், அவைகள் மிகுந்த ஸந்தோஷத்தைக் கொடுக்கும். அதுவே அவனுக்குப் பிரயோஜநம்.

அவ:— முக்தர்களைப்போலே எம்பெருமானை பிரபந்நன் நேராகப் பார்க்காவிட்டாலும், அவர்களைப்போலவே அவனை அநு பவிக்கக் கூடும் என்று கடைசி சுலோகத்தாலே அருளிச் செய்கிறார்:—

[illegible]
[illegible] ।
[illegible]
[illegible] ॥

(ப-ரை) [illegible] - புருஷனுடைய பிரீதிக்கு விஷயை யான ஒரு ஸ்திரீயானவள், [illegible] - அடிக்கடி துடைக்கப்பட்ட, [illegible] - பெரிய, [illegible] - அழகிய கண்ணுடியில், (அழகால் தான் புருஷனுக்குத் தகுந்தவளாக இருக்கிறேனே என்று பார்த்துக்கொண்டிருக்கையில்) [illegible] - பின்னால் வந்த, [illegible] - தன்னுடன் சேர்ந்த, [illegible] - தன்னிடத்தில் பிரீதியுள்ள புருஷனை [illegible] - பார்த்து, (சிருங்காரரஸம் மேலிட்டு) [illegible] - தோஷமில் லாமல் வெளுப்பான, [illegible] - நாலுபக்கமும் பரவுகிற, [illegible] - மிகுந்தவாஸனையுள்ள, [illegible] - புஷ்பங்களாலே,

பரிஷ்வஜதே - எல்லா விதத்தாலும் அநுபவிக்கிருள். (தத்வ - அதுபோல) ப்ரபந்நா: - பிரபத்தி என்கிற தநத்தையுடையவர்களான, ஸந்த: - தன்னுடையவும் எம்பெருமானுடையவும் ஸ்வரூபத்தை அறிந்த பெரியோர்கள், தேசிகோக்தே - ஆசாரியன் சொல்லிக்கொடுத்தபடி அர்த்தத்துடன் நினைக்கப் பட்ட, தநு - மூலமந்திரத்தில், பஸ்சாத் ப்ரவ்ருத்தம் - மந்திர வாக்கியத்தின்படி பின்பு வருகிற, ப்ரணயிநம் - தம்மிடத்தில் ஆசையுள்ள, ப்ரபும் - பிரபுவான எம்பெருமானை, ஸுத்தை:- சுத்தங்களான, (ஸாத்துவிகத்தியாகத்தோடு கூடிய) ப்ரஸ்ருமர தேஹ - நாலுபக்கங்களிலும் பரவுகிற மிகுந்த வாஸனையை உடைய, ஸ்மேர - மலர்ந்திருக்கிற, ப்ரஸூநோபமை: - புஷ்பங் களுக்கு ஸமாநமாயிருக்கிற, கைங்கர்யை: - கைங்கரியங்களாலே, (அவனை) பரிஷ்வஜந்தே - எல்லாவிதத்தாலுமநுபவிக்கிருர்கள்.

(கருத்து) ஒரு ஸ்திரீயானவள் தன்னுடைய புருஷனுக்கு "நான் தகுந்தவளாக இருக்கிறேனே" என்று கண்ணுடியில் தன்னைப் பார்த்துக்கொண்டிருக்கும்போது, பின்னுல் வருகிற தன் புருஷனுடன் சேர்ந்து சிருங்காரரஸம் உண்டாய் புஷ்பங்களை அவன்மேல் இறைத்து அவனை அநுபவிக்கிருள். அதுபோல பிரபந்நன், தான் எம்பெருமானுக்குக் கைங்கரியம் செய்யத் தகுந்தவனென்று அடிக்கடி அநுஸந்தாநம் பண்ணப்பட்ட மூலமந்திரத்தாலே அறிந்து, அவனுக்கு ஸந்தோஷத்தை உண்டுபண்ணும்படியான, நல்லகைங்கரியங்களைச்செய்து அவனை அநுபவிக்கிருன்.

குறிப்பு— (1) கண்ணுடிபோல் மூலமந்திரம். கண்ணுடி அடிக்கடி துடைப்பதாலே, அதின் அழுக்குப் போய் அதில் தன்னை ஒரு ஸ்திரீ பார்த்து புருஷனுக்குத் தகுந்தவளென்று அறிகிருள். அதுபோல மூலமந்திரத்தை அடிக்கடி நினைத்துப் பார்த்து, ஸந்தேஹம் இல்லாமல் பிரபந்நன் எம்பெருமானுக்குத் தான் சேஷனென்றும், தான் அவனுக்குக் கைங்கரியம் செய்யத் தகுந்தவனென்றும் அறிகிருன். ஸ்திரீயானவள் புருஷனிடம் ஆசை உண்டாய் புஷ்பங்களை இறைத்து அவனை அநுபவிக்கிருள். அதுபோல் எம்பெருமானிடத்தில் பிரபந்நனுக்கு ஆசை உண்டாகி நல்ல கைங்கரியங்களைச் செய்து அவனை அநுபவிக்கிருன்.

(2) புஷ்பங்களுடைய வாஸனையைச் சொல்லுவதாலே, எம்பெருமானுக்குச் செய்யும் கைங்கரியமானது அபாரதமில்லாமலும் அவனுக்கு ஸந்தோஷத்தைக் கொடுப்பதாயும் இருக்க வேண்டுமென்று காட்டப்படுகிறது.

(3) ஸ்திரீயை "ப்ரியா" என்று சொன்னதாலே, அவளிடத்தில் புருஷனுக்குப் பிரீதி இருப்பதுபோல், பிரபந்நனிடத்தில் எம்பெருமானுக்குப் பிரீதி இருக்கிறதென்று காட்டப்படுகிறது. ஸ்திரீயானவள் தன் புருஷனுக்காகவே இருப்பதை நினைத்துக்கொண்டு அவன் கட்டின திருமங்கலியத்தை இரக்ஷித்துக்கொண்டு வருகிருள். அப்படியே பிரபந்நனும், தான் எம்பெருமானுக்குச் சேஷன் என்று நினைத்துக்கொண்டு அந்த நினைவை இரக்ஷித்துக்கொண்டுவரவேண்டியது. ஸ்திரீயானவள் தன் பிரயோஜநத்தை எதிர் பார்க்காமல் புருஷனுடைய ஸந்தோஷத்தையே பார்த்து அதற்காகப் பிரீதியுடன் அவனுக்கு வேலை செய்கிருள். அப்படியே பிரபந்நனும் தனக்கு வரும் ஸந்தோஷத்தைக் கவனிக்காமல் எம்பெருமானுடைய ஸந்தோஷத்தையே பார்த்து அதற்காக பிரீதியுடன் அவனுடைய கைங்கரியங்களைச் செய்யவேண்டியது.

(4) மூலமந்திரத்தில் அடங்கிய பிரணவத்தை ஒரு வாக்கியமாகச் சொல்லும்போது, ஜீவன் முன்னாலேயும் எம்பெருமான் பின்னாலேயும் வருவதைக்கொண்டு "வஸுராக்ஷ ஸ்ரீதம்" என்று சொல்லியிருக்கிறது.

## 16-வது புருஷார்த்தகாஷ்டாதிகாரம்.

அவ:— பிரபந்நன் எம்பெருமானுடைய கைங்கரியத்துடன் நிற்கக்கூடாது. பாகவதர்களுக்கும் கைங்கரியம் செய்யவேண்டும் என்று முதல் சுலோகத்தால் அருளிச்செய்கிருர்:—

ஸ்வதந்த்ர ஸ்வாமிகாம ஸ்வபஹுமதிவசாத் த்ருஷ்ட நியதம்
ஸ்ரிய: காந்தோ தேவஸ்ஸ்வயமபி விஹிதே விஹிதவா।
யதா லோகாசாரம் யதிவதி ஸ்வாராதிதபியாம்
ததோ ந: கைங்கர்யம் ததபிமதவைஷம்யசமனம் ॥

(பதவுரை) ஶ்ரிய꞉ காந்த꞉ - லக்ஷ்மீபதியான, ஸ꞉ தேவ꞉ - அந்த தேவனானவன், ஸ்வதந்த்ர꞉ ஸ்வாமிகத்வாத் - ஸ்வதந்திரனாயும், ஸ்வாமியாயும் இருப்பதாலே, விதுஷாம் - அறிவுள்ளவர்களையும், அறிவில்லாதவைகளையும், ஸ்வஸம்பந்தி ... - தன்னுடைய கௌரவத்துக்குப் பாத்திரமானவர்களிடத்தில், நியதம் - அவைகள் உள்ளவரையில் இருக்கும்படி, விநியுங்க்தே - அவர்களுடைய ஸொத்தாகச் செய்கிறான், ஏதத் - இது பிரஸித்தம், தத꞉ - ஆகையினாலே, யதிவராஸ்வாதிமை꞉ - ஸ்ரீபாஷ்யகாரரைப் பிரதானமாக உடைய ஆசாரியர்களாலே, ஶிக்ஷித தியாம் - சிக்ஷிதமான புத்தியை உடைய, ந꞉ - நமக்கு, யதா லோகாசாரம் - உலகவழக்கப்படியும், வேதத்தின் படியும், கைங்கர்யம் - கைங்கரியமானது, தத் ஆஶ்ரித ... - எம்பெருமான் கௌரவம் செய்கிறவர்கள் (பாகவதர்கள்) வரையில், ஸஹஜ꞉ -

(கருத்து) எம்பெருமான் பிரபந்நனை பாகவதர்களுக்குச் சேஷமாகச்செய்திருக்கிறான். அவன் ஸ்வாமியாயிருப்பதால் அப்படிச் செய்ய அவனுக்கு அதிகாரமுண்டு. ஸ்வதந்திரனானபடியால், அதைச்செய்யச் சக்தி உண்டு. ஆகையால், ஸ்ரீபாஷ்யகாரரைப் பிரதானமாகவுடைய ஆசாரியர்கள் நாம் எம்பெருமானுக்குச் சேஷம் என்றும், நாம் கைங்கரியம்செய்து அவனை ஸந்தோஷப்படுத்த வேண்டியவர்களென்றும் சொல்லிக்கொடுத்திருக்கிறார்கள். ஆகையால் எம்பெருமான் செய்த ஏற்பாட்டை நாம் ஸந்தோஷமாய் ஒப்புக்கொண்டு பாகவதர்களுக்குக் கைங்கரியம் செய்யவேண்டியது. இதை உலகத்திலும் பார்க்கலாம். ஒரு ராஜா தான் பூட்டிக்கொண்டிருக்கும் நகைகளைத் தன்னுடைய பிரீதிக்கு விஷயமான குழந்தைகள் கழுத்தில் போட்டு, அவர்கள் அவைகளினால் ஸந்தோஷப்படுவதைப் பார்த்துத் தானும் ஸந்தோஷப்படுகிறான். வேதமும் இப்படியே சொல்லுகிறது.

குறிப்பு—(1) பிரபந்நன் எம்பெருமானுக்கே சேஷன். ஆகையால் பாகவதர்களுக்குக் கைங்கரியம் செய்யக்கூடுமா என்றால்; பதில்— பிரபந்நன் தன் ஸ்வாமிக்கு ஸந்தோஷத்தைக் கொடுப்பதையே செய்யவேண்டியது. ஆகையால் பாகவதர்களுக்குக் கைங்

கரியம் செய்வதினால் அவனுக்கு மிகுந்த ஸந்தோஷமுண்டாகிறபடியால், அது பிரபந்நனுடைய ஸ்வரூபத்துக்கு விரோதமன்று.

(2) பாகவதர்களுக்குப் பிரபந்நன் கைங்கரியம் செய்யாவிட்டால் எம்பெருமானுக்கு ஸந்தோஷத்தை உண்டுபண்ணுவதாகிய அதிசயத்தைச் செய்தவனாகான். அதிசயத்தைச் செய்யாவிட்டால், எப்படி அவன் எம்பெருமானுக்குச் சேஷனாயிருக்கக் கூடும். ஆகையால் தன்னுடைய ஸ்வரூபம் நிலை நிற்பதற்காக பாகவதர்களுக்குப் பிரபந்நன் கைங்கரியம் செய்யவேண்டியது.

---

அவ:— பாகவதர்களுடைய பிரஸாதம் தவிர நான் வேறு ஒன்றையும் வேண்டேனென்று சொல்லி, கடைசி சுலோகத்தால் அவர்களைக் கொண்டாடுகிறார்—

நாதெ நஸ்த்ருணமந்யதந்யதபி வா தந்நாபிநாளீகிநீ
நாளீகஸ்ப்ருஹணீயஸௌரப முசா வாசா ந யாசாமஹெ ।
ஶுத்தாநாம் மஹதாம் ஸ்புடாஶயாநாம் ஶுத்தாந்தவநிதாநாம்
மனெதுஶயஹ்ருதிநந்தாந்யதேவதாம் பஶ்யதாம் பாஹி: ||

(ப-ரை) நாதெ - நாதனாகிய எம்பெருமானிடத்தில், தந்நாபிநாளீகிநீ - அவனுடைய தொப்புளாகிய தாமரை ஓடையிலிருக்கும், நாளீக - தாமரைப்பூவினால், ஸ்ப்ருஹணீய- ஆசைப்படத் தகுந்த, ஸௌரபமுசா - வாஸனையை வீசுகிற, ந: வாசா - நம்முடைய வாக்காலே, த்ருணம் - திருணம்போல் அல்பமான பிரகிருதிபோகத்தையும், அந்யத் - அதைக்காட்டிலும் வேறான ஆத்மாநுபவத்தையும், அந்யத் - அதைக் காட்டிலும் வேறான மோக்ஷத்தையும், அபி - எம்பெருமானுக்கு உண்டாகும் ஆநந்தத்தின் அநுபவத்தையும், வா - இவைகளெல்லாவற்றையும் சேர்த்தும், ந யாசாமஹெ - நாம் கேட்க மாட்டோம். ஶுத்தாநாம் - அபராதங்களில் ருசியில்லாதவர்களாயும், ஸ்புடாஶயாநாம் - ஐந்துவிதங்களான ஸந்தேஹங்களால் கலக்கமுடியாத மஹாவிஶ்வாஸத்தை உடையவர்களாயும், ஶுத்தாந்தவநிதாநாம் - அந்தப்புரஸ்திரீகள் தங்களுடைய புருஷனில் இருப்பதுபோல், வேறு தேவதைகளை நெஞ்சால்

நினைக்காமலும், எம்பெருமானுடைய பிரீதிக்காக வேலை செய்கிறவர்களாயும் தங்களுக்கென்று ஒன்றையும் கேட்காதவர்களாயுமிருக்கிற பாகவதர்களுடைய, முக்தைஶ்வர்ய - முக்தனுடைய ஐஶ்வரியமாகிற, தி³ந - பகலுக்கு, ப்ராதஸ்ஸந்த்⁴ய - விடியற்காலத்தினுடைய, ஸந்தி⁴ம் - கிட்டவருகையாகிய, ப்ரஸத்திம் - பிரஸாதத்தை, முஹு: ம்ருக³யாமஹே - அடிக்கடி அடைய ஆசைப்படுகிறோம்.

(கருத்து) ஒருவன் இந்த உலகத்திலும், மேலுலகத்திலும் உள்ள ஸுகத்தைத்தேடுகிறான்; வேறொருவன் தன் ஆத்மாவைப்பார்த்து ஸுகப்பட ஆசைப்படுகிறான்; மற்றொருவன் கர்மபந்தம்போய் எம்பெருமானை அநுபவிக்கவேண்டும் என்று ஆசைப்படுகிறான். நாம் இவைகளைத் தனித்தனியாகவும் சேர்த்தும் எம்பெருமானுக்கு உண்டாகும் ஆநந்தாநுபவத்தையும் அவனிடத்தில் கேட்கமாட்டோம். பாகவதர்களுடைய பிரஸாதமே நமக்கு வேண்டியது. அது கிடைத்தால் விடியற்காலத்திற்கு மேல் பகல் வருவதுபோல், முக்தைசுவரியம் தானே வரும். அவ்விதமான பிரபாவமுடையது பாகவதர்களுடைய பிரஸாதம்.

குறிப்பு:— எம்பெருமானுடைய தொப்புளிலிருக்கும் தாமரைப்பூவுக்குப் பிரும்மாவாகிய வேறு தேவதையின் ஸம்பந்தம் உண்டு. ஸ்ரீ தேசிகனுடைய வாக்குக்கு வேறு தேவதையினுடையவும், வேறு பிரயோஜநத்தினுடையவும் ஸம்பந்தம் கொஞ்சமும் இல்லை என்று கருத்து.

---

## 17-வது சாஸ்திரீய நியமநாதிகாரம்.

---

அவ:— பிரபந்நன் எம்பெருமானுக்கும் பாகவதனுக்கும் கைங்கரியம் செய்யும்போது சாஸ்திரத்தை விடக்கூடாது என்று இதன் முதல் சுலோகத்தால் அருளிச்செய்கிறார்:—

லோகே நிக்ஷிப்ய ஸ்வஸ்மாந்நவோ லோகதத்த்வஸ
ஸ்வதந்த்ராஜ்ஞாவிஶேஷம் ஸ்வயமிதி தத்ஸ்வாமிஹ்ருத³ய: ।
ப்ரீத்யாமே ஸத்ய: ஸ்வபாவவிவியாநமபூஜநநா
த்ரைவர்ண்யாசாரரக்ஷார்த²ந்யாஸாதி ஶாஸ்த்ரீயஸாரணி

(பதவுரை) ஸ்ரீ முக்தே - மோக்ஷத்தைக் கொடுக்கும் எம்பெ ருமானிடத்தில், ஸ்வரம் - தன்னை இரக்ஷிக்கும் சுமையை, நிக்ஷிப்ய - வைத்து, அதினாலே, க்ஷீணவ: - முன் செய்த வினை கள் கழிந்தவனாய், ஸ்ரீ முக்தவத் - முக்தனைப்போலிருக்கிற, அஸௌ - இந்த பிரபந்நன், ஸ்வயம் - தானாக, அவிதித ஸ்வாமிஹ்ருதய: - தன் யஜமானனாகிய எம்பெருமானுடைய அபிப்பிராயத்தை அறியா தவனாயிருக்கையாலே, ஸ்வதந்த்ராஜ்ஞாவஸிதம் - ஸ்வதந்திரனான எம்பெருமானுடைய ஆஜ்ஞையினாலேற்பட்டதும், வ்யதிக்ரமே - அதை விட்டுவிடும்போது, ஸத்ய: - உடனே, ஸ்வபர - தனக்கும் மற்றவர்களுக்கும், விவிதாநர்த்த ஜநநாத் - வெவ் வேறான துன்பங்களை உண்டுபண்ணுவதாலே, அலங்க்யம் - மீறி நடக்கக்கூடாததாயுமிருக்கிற, ஶாஸ்த்ரஸாரணிம் - சாஸ்திரம் சொன்ன வழியை, ஆமோக்ஷாத் - மோக்ஷம் வரையில், அநு ஸரதி - அநுஸரித்து நடக்கிறான்.

(கருத்து) பிரபந்நன் எம்பெருமானுக்குக் கைங்கரியம்செய்யும் போது, இன்ன கைங்கரியம் அவனுக்குப் பிரியமாயிருக்குமென்று அறிந்து செய்யவேண்டியது. இதை முக்தன் தானாக அறிந்து கொள்ளுவான்; பிரபந்நனுக்கு அது இப்போது முடியாது. ஆகை யால், இருட்டில் கைவிளக்கைப்போல சாஸ்திரத்தை அவன் நடக்கவேண்டியது. இது ஒரு காரணம். இன்னுமிரண்டு காரணங்களுண்டு. சாஸ்திரமானது எம்பெருமானுடைய ஆஜ்ஞை. ஆகையால் அதை அநுஸரிக்கவேண்டியது. அதை மீறி நடந்தால் இந்த ஜந்மத்திலேயே துன்பமுண்டாகும். ஆகையால் அதை விடக்கூடாது. மீறி நடப்பதால் தானும் கெட்டு மற்றவர்களையும் கெடுக்கும்படியாயிருக்கும். ஏனென்றால், இவன் பிரஸித்தனா யிருந்தால் இவன் செய்வதைப் பார்த்து, மற்றவர்களும் அப்ப டியே செய்வார்கள்.

குறிப்பு— பிரபந்நனுக்கு எல்லாப் பாபங்களும் போய்விட் டன. தான் உடம்பைக் காட்டிலும் வேறு என்று தன் ஸ்வரூ பத்தைத் தெரிந்துகொண்டிருக்கிறான். ஸ்வரூபத்தில் ஜாதியும் ஆசிரமமுமில்லை. ஆகையால் வர்ணத்துக்கும் ஆசிரமத்துக்கும் தகுந்ததாய் ஏற்பட்ட கர்மங்களை விட்டுவிடலாமோ என்று ஸங்

தேஹமுண்டாகலாம். அது கூடாது. உடம்பை ஆத்மாவாக எண்ணுவது அவைகளைச் செய்வதற்குக் காரணமன்று. ஜாதி உடம்பிலிருக்கிறது. அந்த உடம்புடன் சேர்ந்திருக்கிறவரையில் அவைகளைச்செய்யவேண்டியது. இது "ஆதேஹபாதம்" என்கிற சொல்லால் காட்டப்படுகிறது.

---

அவ:— எம்பெருமானுடைய அபிப்பிராயத்தை வேதமும் ஸ்மிருதிகளும் வழி காட்டாத இடங்களில் எப்படி அறியலாம் என்று கடைசி சுலோகத்தாலே அருளிச்செய்கிறார்:—

ஶ்ருதிஸ்ம்ருத்யாசாரை: ஸ்வமதிமதிபி: ஶுத்தமனஸாம்
ஸத்ஸங்கல்பைர்தர்ம்யை: குலசரணதேசாதிஸமயை: ।
நியோகைர்யோக்யானாம் நியமிதுராத்யஸ்யாபிமதம்
நிமித்தஸ்வப்னாத்யைரபி நிபுணமன்விச்சதி புத: ॥ ௧௧ ॥

(ப-ரை) புத: - புத்திமான், ஆத்ய: - ஜகத்காரணமாயும், நியமிது: - எல்லாரையும் நியமநம் பண்ணுகிறவனும் இருக்கிற எம்பெருமானுடைய, அபிமதம் - இஷ்டத்தை, ஶ்ருதி - வேதத்தாலும், ஸ்ம்ருதி - ஸ்மிருதிகளாலும், ஆசாரை: - ஸ்மிருதி எழுதினவர்களின் ஆசாரங்களாலும், ஸ்வமதிமதிபி: - சாஸ்திரம் இரண்டு வழி சொல்லுமிடங்களில் தன் இச்சையாலும், ஶுத்தமனஸாம் - சுத்தமான மனதை உடையவர்களுடைய, ஸத்ஸங்கல்பை: - நல்ல தீர்மானங்களாலும், தர்ம்யை: - தர்மத்தை விட்டு விலகாத, குல - குலங்களுடையவும், சரண - ஸூத்திரங்களுடையவும், தேசாதி - தேசம் முதலியவைகளுடையவும், ஸமயை: - ஸங்கேதங்களாலும், யோக்யானாம் - யோக்கியர்களுடைய. நியோகை: - உத்திரவுகளாலும், நிமித்தஸ்வப்னாத்யை: - நிமித்தங்களாலும், ஸ்வப்நங்களாலும், இவைபோன்றவைகளாலும், நிபுணம் - நன்றாக, அன்விச்சதி - தேடுகிறான். (அறிகிறான்.)

குறிப்பு:— சில தர்மங்கள் சாஸ்திரத்துக்கு ஒத்திருந்தபோதிலும் கலியுகத்திற்கு அவை வேண்டாமென்று பெரியோர்

கள் தீர்மானஞ்செய்திருக்கிறார்கள். இதைத் தான் " ஸாவஸ்க்ஷேமே: " என்று சொல்லியிருக்கிறது.

---

## 18-வது அபராத பரிஹாராதிகாரம்.

---

அவ:— பிரபந்நன் சாஸ்திரத்தை அநுஸரிக்கவேண்டியது என்று சொல்லப்பட்டது. அதை ஒருகால் மீறி நடந்தால் அதற்கு என்ன செய்யவேண்டியது என்பது இந்த அதிகாரத்தில் சொல்லப்படுகிறது:—

ஸ்வச்சஸ்வாத்வீ ஸதாதநஸாஹஹராம் தைவாதயம்
தேஹீ அம்ஹோநிவ்ருத்த்யை ஶ்ரியபதிகருணாகங்காம்
விந்ததி। யத்யப்யேவமஸாவஸாரவிஷயஸ்ரோத:ப்ரஸூ-
தை: புந: பங்கைரேவ கலுஷயதி நிஜதநும் ப்ரா-
ஜ்ஞைர்ந ஸம்ஸ்ப்ருஶ்யதே ॥ ॥ ௪௦ ॥

(பதவுரை) அயம் தேஹீ - இந்த ஜீவன், அம்ஹோநிவ்ருத்த்யை - பாபங்களாகிய அழுக்குப்போவதற்காக, ஸ்வச்ச - தெளிந்ததாயும், ஸ்வாத்வீ - ருசியுள்ளதாயும், ஸதாதந - எப்போதும் சுத்தமாயும், ஸாஹஹராம் - வேண்டியதைக் கொடுப்பதாயிருக்கிற, ஶ்ரியபதிகருணாகங்காம் - லக்ஷ்மீபதியினுடைய கருணையாகிய கங்கையை, தைவாத் - ஏதோ ஒரு பாக்கியத்தாலே, விந்ததி - அடைகிறான். யத்யபி ஏவம் - இப்படி இருந்தபோதிலும், அஸௌ - இவன், அஸார - ஸாரமில்லாத சப்தாதிவிஷயங்களாகிற, ஸ்ரோத:ப்ரஸூதை: - சிற்றாறுகளிலுண்டான, பங்கை: - சேற்றினாலே, புந: - மறுபடியும், நிஜதநும் - தன்னுடைய உடம்பை, கலுஷயதி - அழுக்குப்பண்ணிக் கொண்டால், ப்ராஜ்ஞை: - பெரியோர்களால், ந ஸம்ஸ்ப்ருஶ்யதே ஏவ - சேர்த்துக்கொள்ளப் படுகிறதில்லை.

(கருத்து) முமுக்ஷுவான ஒருவன் தான் முன் செய்த பாபங்கள் போவதற்காக, எம்பெருமானிடத்தில் பிரபத்தி பண்ணுகிறான். அதனால் அவனுடைய பாபங்கள் போய் அவ

னுக்கு எம்பெருமானுடைய கைங்கரியம் கிடைக்கிறது. இப்படி இருக்க, அவன் சப்தம் முதலான விஷயங்களில் ஆசையினல் மேலே பாபங்கள் செய்தால் பெரியோர்கள் அவனைச் சேர்த்துக் கொள்ளமாட்டார்கள். பாபங்களுக்குப் பரிஹாரம் பண்ணினல் அவர்கள் அவனைச் சேர்த்துக்கொள்ளுவர்கள்.

குறிப்பு— கங்கையின் ஜலமானது மலமில்லாமலும், ருசியாயும், வெளுப்பாயும், வேண்டியதைக் கொடுப்பதாயுமிருக்கிறது. அதுபோல எம்பெருமானுடைய தயையானது, ஒரு குற்றமில்லாததாயும், பிரபத்தி பண்ணுகிற காலத்திலும் போக்கியமாயும், தன்னுடைய பாபத்தைப் போக்கி இஷ்டத்தைக் கொடுப்பதாயுமிருக்கிறது. தயைக்குக் குற்றமில்லாமையாவது— எம்பெருமானுடைய மற்ற குணங்கள் நிக்ரஹத்திற்கும் அநுக்ரஹத்திற்கும் பொதுவாயிருக்கின்றன; அவைபோலில்லாமல் இந்த தயை என்கிற குணம் அநுக்கிரஹத்தையே செய்யும்.

(2) “ யத்ருச்சி ” என்கிற சொல்லால், ஒருவேளை அபராதம் பிராரப்தம் என்கிற கர்மத்தால் வரக்கூடும் என்று காட்டப்படுகிறது.

(3) ‘பதேத்’ என்கிற சொல்லால் பெரியோர்கள் சேர்க்கிறதில்லை. ஆனல் எம்பெருமான் அவனை விட்டுவிடுவதில்லை. ஏதோ ஒரு பரிஹாரத்தைச் செய்து அவனைச் சேர்த்துக் கொள்ளுவன்.

---

அவ:— முன் சுலோகத்தில் ‘ஸாமீ ந்யஸ்யஸாய’ என்பதின் கருத்தை விரித்துச்சொல்லி, மேலே நேரக்கூடும் பாபத்துக்குப் பரிஹாரத்தைக் கடைசி சுலோகத்தால் அருளிச்செய்கிருர்—

ப்ராரப்தேதரபூர்வபாபமகிலம் ப்ராமாதிகம்
சோத்தரம் ந்யாஸேந க்ஷபயந்நஹேதுவிஹதப்ராரப்த
பாகம் ச ந: | தீபூர்வோத்தரபாப்மநாமஜநநாஜ்
ஜாதேऽபி தந்நிஷ்க்ருதே: க்ஷாந்த்யா வா ஸதி சிக்ஷயா வ்யந
யந்நு க்ஷேமீகரோதி ப்ரபு: || || ௪௧ ||

(பதவுரை) ப்ரபு: - ஸ்வதந்திரனான எம்பெருமான், ந: - நம்முடைய, ப்ராரப்தேதர - பிராரப்தம் தவிர மற்ற, பூர்வபாபம் - முன் செய்த பாபங்கள், அகிலம் - எல்லாவற்றையும்,

ப்ராமாதிகம் - நினைவில்லாமல் செய்கிற, உத்தரம் ச - மேல்வரும் பாபங்களையும், அநப்யுபேதம் - ஒப்புக்கொள்ளாத, ப்ராரப்த கண்டம் ச - பிராரப்தபாகத்தையும், ந்யாஸேந - பிரபத்தியாலே, க்ஷபயதி - கழியும்படி செய்கிறனாய், தீபூர்வோத்தராகானாம் - புத்திபூர்வகமாய்ச் செய்யும் மேல் பாபங்களுடைய, (பாபங்கள்) அஜநநாத் - உண்டாகாமையாலும், ஜாதேபி - உண்டானாலும், தந்நிஷ்க்ருதே: - அவைகளுக்குப்பரிஹாரம் ஏற்படுவதாலும், காடிந்யே ஸதி - பாபம்செய்தவன் கடினமான மனதை உடையவனாயிருந்தால், ஶிக்ஷயா ச - செய்கிற தண்டனையால், அநகயதி - தோஷமில்லாதவனாய்ச் செய்து, கௌரக்ஷிகம் கரோதி - சேர்த்துக்கொண்டு இரக்ஷிக்கிறான்.

(கருத்து) பிராரப்தமென்பது பலன் கொடுக்க ஆரம்பித்த கர்மம். இது தவிர, முன் செய்த கர்மங்களும் பின்னால் எண்ணமில்லாமல் செய்கிற கர்மங்களும் கழிந்துபோகின்றன. இது பக்தனுக்கும் பிரபந்நனுக்கும் பொது. பிரபந்நன் பிரபத்திகாலம் முதல் உயிரோடிருக்கிற வரையில் அநுபவிக்கவேண்டிய பிராரப்தத்தின் பாகத்தை ஒப்புக்கொள்ளுகிறான். அது தவிர, பாக்கி இருக்கிற பிராரப்தமும் போய்விடுகிறது. இது பிரபத்தியின் மஹிமை. ஏன் இப்படி லகுவான உபாயத்திற்கு இவ்வளவு அநுக்கிரஹம் செய்கிறீர் என்று ஒருவன் எம்பெருமானைக் கேட்க முடியாது. இதைக் காண்பிப்பதற்காக எம்பெருமானை பிரபு என்று சுலோகம் சொல்லுகிறது. முமுக்ஷுவாய் பிரபத்தி செய்தவனாகையாலே, அவனுக்குப் புத்திபூர்வகமாய் அபராதமுண்டாகாது. பிராரப்தத்தினாலுண்டானால் லஜ்ஜையும் அநுதாபமும் பிறந்து அதற்குப் பரிஹாரம் செய்துவிடுவன். அது செய்யாமல் கடினமான மனது உள்ளவனாயிருந்தால் எம்பெருமான் அவனைத் தண்டித்து தோஷத்தைப் போக்கி விடுவன். ஒருகாலும் அவனைக் கைவிடுவதில்லை.

குறிப்பு— மேல் குற்றஞ் செய்தவனை அதற்குப் பரிஹாரம் செய்யும்படி செய்வதும், கடினமான மனதை உடையவர்களைத் தண்டித்து நிர்தோஷமாய் பண்ணுகிறவனும் எம்பெருமான் தான். இதுவும் பிரபத்தியின் பலன்.

## 19-வது ஸ்தாந விசேஷாதிகாரம்.

அவ:— பிரபந்நன் எங்கே இருக்கவேண்டியதென்று அதிகாரத்தின் முதல் சுலோகத்தால் அருளிச்செய்கிறார்:—

யத்ரைகாக்ர்யம் பவதி பகவத்பாதஸேவார்சநாதே:
யத்ரைகாந்த்யவ்யவஸிததியோ யஸ்ய கஸ்யாபி லாப: |
வாஸஸ்தாநம் ததிஹ க்ருதிநாம் பாதி வைகுண்டகல்பம்
ப்ராயோ தேஶா முநிபிருதிதா: ப்ராயிகாவஸித்யவந்த: ||

(ப-ரை) யத்ர - எங்கு, பகவத்பாதஸேவார்சநாதே: - எம்பெருமானுடைய திருவடிகளில் கைங்கரியம் பண்ணுவதற்கும், அர்ச்சநம் முதலானவைகளைப் பண்ணுவதற்கும் தகுந்த, ஐகாக்ர்யம் - சித்தஸமாதாநம், பவதி-உண்டாகுமோ, யத்ர - எந்த இடத்தில், ஐகாந்த்யவ்யவஸிததிய: - வேறு தேவதைகளிடத்தில் போகக்கூடாதென்றும், எம்பெருமான் தவிர வேறு பிரயோஜநம் வேண்டாமென்றும் உறுதியான எண்ணம் உள்ள, யஸ்ய கஸ்யாபி - எவனுவதொருவனுடைய, லாப: - கிடைப்பது உண்டோ, தத் - அந்த இடமானது, க்ருதிநாம் - பிரபந்நர்களுக்கு, இஹ - இந்த ஸம்ஸாரதசையில், வைகுண்டகல்பம் - வைகுண்டத்துக்கு ஸமமான, வாஸஸ்தாநம் - இருப்பிடமாக, பாதி - விளங்குகிறது. முநிபி: உதிதா: - ருஷிகளால் சொல்லப்பட்ட, ப்ராயோ தேஶா: - பஹுவான தேசங்கள், ப்ராயிகாவஸித்யவந்த: - பெரும்பாலும் பிரபந்நன் வஸிக்கத்தகுந்த இடங்கள்.

(கருத்து) எங்கே எம்பெருமானுக்கு சித்தஸமாதானத்துடன் கைங்கரியம் பண்ணக்கூடுமோ அதுவும், எங்கே பரமைகாந்தியான ஒருவனுவது இருக்கிறனே, அதுவும் பிரபந்நன் இருக்கத் தகுந்த இடம். காசி காஞ்சி முதலான ருஷிகளால் சொல்லப்பட்ட இடங்களை ஏன் சொல்லவில்லை என்றால், அவைகள் பெரும்பாலும் பிரபந்நன் இருக்கத் தகுந்தவிடங்கள் என்று அவர்களின் அபிப்பிராயம். ஆனாலும் யுகஸ்வபாவத்தாலே அவைகள் இப்போது அப்படியிருக்கவில்லை. ஆகையால் அவைகளைச் சொல்லவில்லை.

குறிப்பு:— (1) சுலோகத்தில் "யத்ர யத்ர" என்று இரண்டு தடவை சொல்லியிருப்பதாலே, சொன்ன இரண்டிடங்களில் ஏதாவதொன்றில் இருக்கலாம் என்று கருத்து. இரண்டும் சேர்ந்திருந்தால் மிகவும் நல்லது.

(2) "யஸ்ய கஸ்யாபி" என்று எவனாவதொருவன் என்று சொன்னதால் அந்த பரமைகாந்தி எந்த ஜாதியாயிருந்தாலும் இருக்கலாம் என்று கருத்து.

(3) "வைகுண்டகஂ" என்று சொன்னதாலே, அந்த இடத்தில் ஒரு விரோதியுமிருக்கமாட்டானென்றும், எம்பெருமானுடைய கைங்கரியத்திற்கு ஒரு தடையும் இருக்கமாட்டாது என்றும் கருத்து.

---

அவ:— முன் சுலோகத்தின் கடைசி பாதத்தில் சொன்னதை விரிவாய் கடைசி சுலோகத்தால் அருளிச்செய்கிறார்:—

ஸா காஶீதி ந வாகாஶீதி ஹுவி ஸாயோத்ஸ்யேதி
நாயாஸ்யதே ஸாவந்தீதி ந கல்மஷாதவந்தி ஸா கா
ஞ்சீதி நோதஞ்சதி | யத்ர ஸா மதுரேதி நோத்
யதுராம் மதுராபி நாதுரா வாஸீ யா வைகுண்டகதா
ஸுதாரஸஹாஜாம் ரோசதே நா சேதஸே || சஙு ||

(ப-ரை) யா - எந்த இடமானது, வைகுண்டகதா - எம்பெருமானுடைய கதையாகிய, ஸுதா ரஸஹாஜாம் - அமிருதத்தினுடைய ரஸத்தை அநுபவிக்கிற பெரியோர்களுடைய, சேதஸே - மனதுக்கு, நோ ரோசதே - பிடிக்கவில்லையோ, ஸா - அதானது, ஹுவி - பூமியில், காஶீ இதி - காசியென்று, ந வகாஶீதி - நன்றாய் பிரகாசிக்கிறதில்லை. ஸா - அது, அயோத்யா இதி - அயோத்தியை என்று, ந அயாஸ்யதே - வஸிக்கப் படுகிறதில்லை, ஸா- அது, அவந்தீதி - அவந்தியென்று, கல்மஷாத் - தோஷத்திலிருந்து, ந அவதி - இரக்ஷிக்கிறதில்லை, ஸா - அது, காஞ்சீதி - காஞ்சீ என்று, ந உதஞ்சதி - உயர்ந்ததாக இருக்கவில்லை, ஸா - அது, மதுரா இதி - மதுரை என்று, உத்யதுரா

ரம் - உத்தமமான பாரத்தை, நயதே - தூக்கவில்லை, யா - எந்த, அந்யா அபி பூ: - வேறு பட்டணமும், ந கௌரவம் - கௌரவம் செய்யத் தகுந்ததாயிருக்காது.

(கருத்து) உலகத்தில் காசிமுதலான ஏழுஇடங்கள் மோக்ஷத்தைக் கொடுக்கத் தகுந்தவைகள் என்று சொல்லுவதுண்டு. அவைகளும் பரமைகாந்திகளுடைய மனதிற்குப் பிடிக்காவிட்டால், அவைகளின் பெயரைக் கொண்டு மாத்திரம் கௌரவம் பண்ணத் தகுந்தவைகள் அல்ல.

---

## 20-வது நிர்யாணுதிகாரம்.

அவ:— இப்படி ஏழு அதிகாரங்களால் இங்கே கொஞ்சகாலம் இருக்கவேண்டுமென்று எண்ணுகிற பிரபந்நன் எப்படியிருக்க வேண்டியதென்று சொல்லி, மேல் மூன்று அதிகாரங்களால் பிரபத்தியின் பலன்களைச் சொல்லுகிறார். அவைகளுள் இந்த அதிகாரத்தில் பிரபந்நன் உடம்பை விட்டுக் கிளம்பும் வழியைச் சொல்லுகிறார்:—

மநஸி கரணக்ராமம் ப்ராணே மந: புருஷே ச தம்
ஜடிதி கடயந் பூதேஷ்வேநம் பரே ச ததாத்மநி |
ஸ்வவிஷவிச்லேஷாரம்பம் ஸமாயாநே ஸமாநேஷ்வபி
நயதி பதவீ நாடீமத்யே ஸுஷும்நயா ரங்கேச்வர: ||

(ப-ரை) ரங்கேச்வர: - எம்பெருமான், மநஸி - ஜீவனுடைய மனதில், கரணக்ராமம் - இந்திரியவர்க்கத்தையும், மந: - இவைகளுடன் சேர்ந்த மனதை, ப்ராணே - பிராணனிடத்திலும், தம் - இவைகளுடன் சேர்ந்த பிராணனை, புருஷே ச - ஜீவனிடத்திலும், ஏநம் - இவைகளுடன் சேர்ந்த ஜீவனை, பூதேஷு - ஸூக்ஷ்மமான ஐந்து பூதங்களிடத்திலும், தம் - இவைகளுடனும், ஐந்து பூதங்களுடனும் சேர்ந்த ஜீவனை, பரே ஆத்மநி ச - பரமாத்மாவாகிய தன்னிடத்திலும், ஜடிதி - சீக்கிரத்தில், கடயந் - சேர்த்து, இத்தம் - இப்படி, ஸ்வவித் - தன்னைத் தியாகம் பண்ணுகிறவனுக்கும், அவிஷோ: - அப்

படித் தியாகம் பண்ணுதவனுக்கும், ஸாயாரணே - இதுவரை யில் பொதுவாயிருக்க, ஸரணெ: உ-ரெவெ: - அந்தந்த மார்க் கத்திற்கு ஆரம்பங்களாகிய, நாடீஹெஷெ: - அந்தந்த நாடி களாலே, யமொஷிதம் - அந்தந்த ஜீவனுக்குத் தகுந்தபடி, வஹிதம் - வெளியில், நயதி - கொண்டுபோகிறுன்.

(கருத்து) சுலோகத்தில் சொன்னபடி ஜீவனை இந்திரியங்கள் மனது, பிராணன், ஸூக்ஷ்மங்களான ஐந்து பூதங்கள், இவைக ளுடன் சேர்த்து, எம்பெருமான் தன்னிடத்தில் அவனை இளைப் பாற்றுகிறுன். இதுவரையில் பிரபந்நனுக்கும் மற்றவர்களுக்கும் உடம்பை விட்டுக் கிளம்புவது ஒரே மாதிரி. பிறகு பிரபந்நனை ஹிருதயத்திலிருந்து உச்சந்தலைக்குப் போகிற நாடி வழியாக வெளியே கொண்டுபோகிறுன். பக்தனுக்கும் இது உண்டு. மற் றவர்கள் கண் முதலான இடங்கள் வழியாக அவரவர்கள் போக வேண்டியதற்குத் தகுந்தபடி வெளியே போகிறுர்கள்.

---

அவ:— முன் சுலோகத்தில் ஜீவன்கள் அந்தந்த நாடிவழி யாக வெளியே போகிறுர்கள் என்று சொன்னதை விரித்துப் பிர பந்நன் போகிற நாடி இன்னதென்று கடைசி சுலோகத்தால் அருளிச்செய்கிறுர்:—

உஹாரகஹரெ தெவஸ்திஷ்ஸ்திஷ அராதீவிடிகா
நிவதிதநிஜாவதஂஸாஷிதாவதீணஂவிதஂகூ ஊாக: ।
யஊநிஊஹ நஸ்ஷிந காமெ ஸ ஊவ மதாயிகா
ஊகூதகவரஸ்ஷஸா நாமயஂ வூெவமயதி வூஹ: ॥

(ப-ரை) தெவ: - எம்பெருமான், நிஷ அராதீவிடிகா - சேறுள்ள குட்டையில், நிவதித - விழுந்த, நிஜாவதஂ- தன் னுடைய பிள்ளையை, ஆஷிஸா - எடுக்கவேண்டுமென்கிற இச்சை யினுலே, அவதீணஂ - அதில் இறங்கின, விதஂகூ ஊாக - தகப் பனைப்போலே, உஹ உஹாரகஹரெ - இந்த நம் ஹிருதயகு கையில், திஷ்டு - இருந்துகொண்டு, வூஹ:- பிரபுவான, ஸ ஊவ- அவனே, தஸ்ஷிந காமெ - அந்த காலத்தில், நஃ- நம்மை, அகூதகவர - ஒருவராலும் செய்யப்படாமல் எப்போதும்

இருக்கிற பட்டணத்திற்கு, ஞூஷாநாயஃ - புறப்பட்டுப்போவதற்காக, ஶதாயிகாம - நூற்றொன்றுவதான, யஃடிம - நாடியை (யில்) ஐவெஶயதி - நுழையும்படி செய்கிறான்.

(கருத்து) பிரபந்நன் உடம்பைவிட்டு வெளியேபோகும் நாடியானது உச்சந்தலைக்குப் போகும் நூற்றொன்றுவதான நாடி. இதைக் கண்டுபிடித்து அதில் நுழைய ஜீவனுக்குச் சக்தியில்லாவிட்டாலும், அந்தவேலையை எம்பெருமானே செய்கிறான், அவன் ஹ்ருதயத்திலேயே யிருக்கிறான். எதற்காக என்றால். சேறு நிறைந்த ஒரு குட்டையில் விழுந்த தன் பிள்ளையைத் தகப்பன் எடுப்பதற்கு அதிலிறங்குவது போல், எம்பெருமானும் இந்த அருவருப்புள்ள உடம்பில் இருக்கும் ஜீவனை எடுப்பதற்கு ஸமயம் பார்த்துக் கொண்டிருந்து, அந்த ஸமயம் வந்தபோது நம்மை அதிலிருந்து வெளியே கொண்டுபோகிறான்.

குறிப்பு:- (1) சேறு நிறைந்த குட்டைபோல் நமது உடம்பு, ஒரு குழந்தையானது தப்பி குட்டையில் விழுந்ததுபோல் நாம் கர்மங்களாலே இந்த உடம்பில் வந்திருக்கிறோம்.

(2) தகப்பன் பிள்ளையை எடுப்பதற்கு முயற்சி செய்வது போல், எம்பெருமானுக்கும் நமக்குமிருக்கும் உறவினால் நம்மை எடுப்பதற்கு அவன் பாடுபடுகிறான்.

(3) தகப்பன் குழந்தையை எடுத்துக்கொண்டு வீட்டிற்குப் போகிறான். எம்பெருமானும் தான் இருக்கும் இடமாகிய வைகுண்டத்திற்குக் கொண்டுபோவதற்காக நம்மை உடம்பில் இருந்து வெளியே கொண்டுபோகிறான்

(4) தகப்பன் வீடுதான் குழந்தைக்கும் வீடு. அப்படியே, எம்பெருமான் இருக்கும் இடமாகிய வைகுண்டமே நமக்கும் இருக்குமிடம்.

---

## 21-வது கதிசிந்தநாதிகாரம்.

---

அவ:— அர்ச்சிராதி என்கிற மார்க்கத்தாலே பிரபந்நன் வைகுந்தத்திற்குப் போவதாகிய பலனை முதல் சுலோகத்தால் அருளிச்செய்கிறார்.—

வஹ்நி திவஸ ஜ்யோத்ஸ்நாபக்ஷோத்தராயண வத்ஸராந்
பவந தபந ப்ராலேயாம்ஸூந் க்ரமாத் தடிதம் ததா ।
வருணபதிம் தேவாதீஸம் ப்ரஜாபதிமாகத
ஸ்தரதி விரஜாம் தூரே வாசஸ்தத: பரமத்புதம் ॥

(பதவுரை) வஹ்நி - அக்கினி, திவஸ - பகல், ஜ்யோத்ஸ்நாபக்ஷ - சுக்கிலபக்ஷம், உத்தராயண - உத்தராயணம், வத்ஸராந் - வர்ஷம், இவர்களையும், பவந - வாயு, தபந - ஸூரியன், ப்ராலேயாம்ஸூந் - சந்திரன், இவர்களையும், தடிதம் - மின்னலையும், வருணபதிம் - வருணனையும், தேவாதீஸம் - இந்திரனையும், ப்ரஜாபதிம் - பிரஜாபதியையும், க்ரமாத் - வரிசையாய், ஆகத: - அடைந்தவனாய், விரஜாம் - விரஜை என்னும் ஆற்றை, தரதி - தாண்டுகிறான், தத: பரம் - அதற்குமேலுள்ள, அத்புதம் - ஆச்சரியமானவைகள், வாச: தூரே - வாக்குக்கு தூரமாயிருக்கும். அதாவது— அவைகளை இன்னதென்று சொல்லமுடியாது.

குறிப்பு— (1) காலத்தைச் சொல்லுகிற சொற்கள் அவைகளின் அபிமானிதேவதைகளைச் சொல்லுகின்றன. அப்படியே மின்னல் என்கிற சொல்லும் அதின் அபிமானிதேவதையைச் சொல்லுகிறது.

(2) சுலோகத்தில் சொன்னவர்களெல்லாரும் பிரபந்நனை வைகுந்தத்திற்கு அழைத்துக்கொண்டுபோக எம்பெருமானாலே நியமிக்கப்பட்டவர்கள். ஆகையால் அவர்களுக்கு ஆதிவாஹிகர்களென்று பெயர்.

---

அவ: — ஸம்ஸாரத்தில் துக்கப்படுவது ஸ்வபாவமாக இருப்பதையும், வைகுண்டத்தில் துக்கக்கலக்கமில்லாத ஆநந்தத்தை அநுபவிப்பது ஸ்வபாமாயிருப்பதையும் கடைசி சுலோகத்தால் அருளிச்செய்கிறார்:—

விசித்ரவிவிதப்ரோஹாவரோஹவிஹ்ருதௌ
நித்யவிவிதாத்யாதக்ரமேஷு நிரந்தரை: ।
ஸ்வயமுதவிப்ராஞ்சநாஜ்ஞாயபோதிவாஹ்யந
ஸ்வயதி நிஜச்சாயாசாயீ ஸ்வயம் ஹரிவஹ்ந: ॥ ௪௭ ।

(ப-ரை) பித்ருயாண - பித்ருயாணமென்கிற, கடீயந்த்ர - ஏத்தச்சாலில், ஆரோஹ - ஏறுகிறது, அவரோஹ - இறங்குவது, இவைகளாகிற, பரிவ்ருத்திபி: - அடிக்கடி சுற்றிவருவதாலும், நிரந்தரை: - இடைவிடாதிருக்கிற, நிரயவர்த்மனி - நரகமார்க்கத்தில், யாதாயாதை: ச - போவதும் வருவதுமாகிய வியாபாரங்களாலேயும், அதிமாத்ரஸ்ராந்தான் - மிகுந்த சிரமத்தை அடைந்த, ந: - நம்மை, ஸ்வீயை: - தன் வேலைக்காரர்களாலே, அதிவாஹ்ய - அழைத்துக்கொண்டுபோய், ஹரிசந்தந: - ஹரி என்கிற சந்தனமரமானது, நிஜச்சாயாம் தத்வா - தன்னுடைய நிழலைக்கொடுத்து, ஸ்வயம் - தானே, ஸுகயதி - ஸுகப்படுத்துகிறது.

(கருத்து) ஸம்ஸாரத்திலிருக்கும்போது பாபம் செய்து அடிக்கடி நரகத்துக்குப் போயும், திரும்பியும், புண்ணியம்செய்து ஸ்வர்க்கத்திற்குப் போவதும் வருவதுமாயுமிருப்பதால், நாம் மிகுந்த சிரமத்தை அடைந்திருக்கிறோம். எம்பெருமான் தன்னுடைய வேலைக்காரர்களாலே நம்மை வைகுண்டத்திற்கு அழைத்துக்கொண்டு போய், நம்முடைய சிரமங்களைப் போக்கித் தன்னை அநுபவிக்கும்படி செய்து ஸுகப்படுத்துகிறான்.

குறிப்பு— ஏத்தச்சாலானது கிணற்றிலிருந்து ஜலத்தைக் கொண்டுபோய், ஜலத்தைக் கொட்டினபிறகு மறுபடியும் கிணற்றுக்கு வருகிறது. அதுபோல நாம் புண்ணியத்தைச் செய்து அத்துடன் ஸ்வர்க்கத்திற்குப் போகிறோம். அங்கு அநுபவத்தினால் ஸுகம் கழிந்தவுடன் திரும்பி இங்கே வருகிறோம். இப்படி நாம் போவதும் வருவதுமாயிருக்கிறோம்.

(2) இப்படியே பாபம் செய்து நரகத்திற்குப் போய் நரகத்தில் அநுபவத்தை அடைந்து, திரும்பிவருகிறோம். இதில் ஓய்ச்சல் ஒழிவு கிடையாது. ஸ்வர்க்கத்திற்குப் போகிறவனுக்கு அதை விட்டுத்திரும்பித் தாயார் வயிற்றில் வருகிறவரையில், ஸுகமும் துக்கமுமில்லாத இருப்பு உண்டு. அதுவும் நரகத்திற்குப் போகிறவனுக்குக் கிடையாது. இதைக் காட்டுவதற்காக "நிரந்தரை:" என்று சொல்லப்பட்டிருக்கிறது.

(3) வழிப்போக்கன் வெயிலில் நடந்து களைப்படைந்து வருந்துகையில், ஒரு சந்தனமரம் கிட்டவிருந்தால் அதினிடம்

போய் அதின் நிழலில் இளைப்பாறி, அதின் வாஸனையால் ஸுகத்தை அடைகிறான். அதுபோல எம்பெருமான் தன்னிடத்தில் பிரபந்நனை வைத்துக்கொண்டு அவன் முன்பு பட்ட சிரமத்தைப் போக்கி ஆநந்தத்தைக் கொடுத்து ஸுகப்படுத்துகிறான்.

(4) "ஸ்வயம்" என்கிற சொல்லாலே பிரபந்நனை ஸுகப்படுத்துவது வேலைக்காரனைக்கொண்டு அன்று; அந்த வேலையைத் தானே செய்கிறான் என்று கருத்து.

(5) வேறு மரங்கள் நிழலை மாத்திரம் கொடுத்து, வெயிலினால் உண்டாகும் களைப்பைப் போக்கும். சந்தனமரமோ இதையும் செய்து, தன்னுடைய வாஸனையினால் ஸுகத்தையும் கொடுக்கும்.

---

## 22-வது பரிபூர்ண பிரம்மாநுபவாதிகாரம்.

---

அவ:— வைகுந்தத்திற்குப் போனவனுக்கு என்ன என்ன பெருமைகள் கிடைக்கின்றன என்பதை முதல் சுலோகத்தால் அருளிச்செய்கிறார்:—

விதமஸி பதே லக்ஷ்மீகாந்தம் விசித்ரவிபூதிகம்
ஸவிவஹநகைஸ்ஸம்ப்ராப்யாவிர்பவத்ஸஹஜாக்ருதி: ।
ஸ்ப்ருதகயுதஸித்திர்திவ்யஸ்ஸுகாஷ்டகதந்மய:
பஜதி பரமம் ஸாம்யம் போகே நிவ்ருத்திகதோஜ்ஜ்ஜித: ॥

(பதவுரை) (முக்தன்) விதமஸி - முக்குணமுள்ள பிரகிருதி மண்டலத்திற்கு மேலேயிருக்கும், பதே - இடமாகிய வைகுண்டலோகத்தில், விசித்ரவிபூதிகம் - ஆச்சரியங்களான விபூதிகளையுடைய, லக்ஷ்மீகாந்தம் - லக்ஷ்மீபதியை, ஸவிவஹநகை: - ஆதிவாஹிகர்களாகிய வேலைக்காரர்களாலே கொண்டுபோகப்பட்டு, ஸம்ப்ராப்ய - அவனை அடைந்து, ஆவிர்பவத் - இதுவரையில் மறைந்து இருந்து இப்போது தோன்றுகிற, ஸஹஜாக்ருதி: - தனக்கு ஸ்வபாவமாயுள்ள ஆகாரத்தை உடையவனாய், ஸ்ப்ருதகயுதஸித்தி: - எம்பெருமானைக் காட்டிலும் தான் வேறு என்று சொல்லமுடியாதபடி அவனுடன் ஒன்றாகச் சேர்ந்திருப்

பதை நன்ருய் அறிந்து, ஸித்⁴யக - உண்டான, கு³ணாஷ்டக - எட்டு குணங்களையும், தத்ப²ல:- அதின் பலன்களையும் அடைந்தவனாய், நிவ்ருத்திகதோஜ்ஜித:- திரும்பிவருகிறது என்கிற பேச்சில்லாத, ஸோமெ - ஆநந்தாநுபவத்தில், பரமம் ஸாம்யம் - அளவில்லாத ஒற்றுமையை, உபைதி - அடைகிருன்.

(கருத்து) முக்தன் போகும் வைகுந்தலோகத்தில் இந்த உலகத்துப் பிரகிருதியானது இல்லை. அதிலிருக்கும் திரவியத்திற்கு ஸத்துவம் என்கிற ஒரே குணமுண்டு. அதில் முக்தனுக்கு லீலைக்கும், போகத்திற்கும் வேண்டிய பல பல ஆச்சரியங்களான வஸ்துக்கள் இருக்கின்றன. அவ்விடத்தில் ஆநந்தமயம் என்கிற ஒரு மண்டபத்தில் பிராட்டியுடன் எம்பெருமான் எழுந்தருளியிருக்கிருன். அவனை அடைந்த பிறகு முக்தனுக்குக் கிடைக்கும் பெருமைகளாவன— (1) இங்கிருக்கும்போது அவனுடைய ஆகாரமானது அவன் செய்த கர்மத்திஞல் மறைந்திருந்தது; அது இப்பொழுது தோன்றுகிறது. ஸ்வர்க்கத்தில் ஸுகாநுபவத் ாக ஒரு உடம்பு வருவதுபோல், இவனுக்கு ஆநந்தாநுபவத் ாக அந்த ஆகாரம் வருகிறதன்று. அது ஸ்வபாவமாகவே உள்ளது. (2) அந்த ஆகாரமாவது—எட்டு குணங்கள் உள்ளவனுயிருப்பது. அவைகளாவன — கிழத்தனம், மரணம், பசி, தாஹம், சோகம், இவைகளுக்குக் காரணமான கர்மம் இவைகளில்லாமையும், ஸத்யகாமனுயிருப்பதும், அதாவது— அழிவில்லாத போக வஸ்துக்களை உடையவனுயிருப்பதும், ஸத்யஸங்கல்பனுயிருப்பதும் அதாவது- நினைத்ததைத் தடையில்லாமல் செய்யும் திறமை. (3) இந்த எட்டாவதான குணத்தாலே வேண்டுமிடங்களுக்குப் போகவும், வேண்டியவர்களைப் பார்க்கவும், எம்பெருமானுடைய கைங்கரியத்திற்குச் சேஷமான எந்த அநுபவத்தையும் அடையவும் தகுந்தவனுக ஆகிருன். (4) தன்னுடைய ஸ்வரூபமும் எம்பெருமானுடைய ஸ்வரூபமும் வெவ்வேருக இருந்தபோதிலும், அவனைக்காட்டிலும் வேறு என்று சொல்லமுடியாதபடி அவனுடைய ஸங்கல்பத்துக்கு ஒத்து நடக்கிருன். இப்படி இருப்பது இந்த லோகத்தில்போல் இல்லாமல் நன்ருய்த் தெரியும். (5) எம்பெருமானைப் போலவே அவன் இருப்பன். ஆனுல் உலகத்தை உண்டுபண்ணி, இரக்ஷித்து, அழிக்கும் வேலை அவனுக்குக்கிடையாது. ஒற்றுமையானது ஆநந்தத்தின் அநுபவத்தில் மாத்திரம்.

எம்பெருமானுக்கு எவைகள் ஆநந்தத்தைக் கொடுக்குமோ அவைகளெல்லாம் அவனுக்கும் உண்டு. எம்பெருமானுக்கு எவ்வளவு ஆநந்தம் உண்டோ, அவ்வளவும் அவன் அடைகிறான். (6) ஒருவேளை அந்த லோகத்தை விட்டு இங்கே திரும்பி வருவனோ என்று ஸந்தேஹம் வேண்டாம். அவன் திரும்பிவர ஆசைப்பட்டாலும் எம்பெருமான் அவனைத் திருப்பிவிடமாட்டான்.

---

அவ:— மிகவும் களைப்படைந்தவன் தண்ணீரை ஆவலுடன் தேடுவதுபோல், முக்தன் எம்பெருமானுடைய கைங்கரியங்கள் எல்லாவற்றையும் தானே செய்யவேண்டும் என்று ஆசைப்படுகிறான் என்று கடைசி சுலோகத்தால் அருளிச்செய்கிறார்—

அவிஶ்ராந்தஶ்ரத்தாகலஹகல்லோலகலுஷா
மமாவிர்பூயாஸுர்மனஸி ஸனகாதிஸுலபா: ।
மதுக்ஷீரந்யாயஸ்வகுணவிபவாஸங்கஸுபக
ஸாந்த்ராநந்தப்ரஹ்மாநுபவபரீவாஹா பஹுவிதா: ॥

(ப-ரை) அவிஶ்ராந்த - ஓய்வில்லாத, ஶ்ரத்தா - அநேக சிரத்தைகளுடைய, கலஹ - போட்டிகளாகிற, கல்லோல - அலைகளாலே, கலுஷா: - கலங்கியிருக்கின்றவைகளாயும், ஸனகாதி - ஸநகர் முதலான யோகிகளுக்கும், நித்தியஸூரிகளுக்கும், முக்தர்களுக்கும், ஸுலபா: - பிரயாஸம் இல்லாமல் கிடைக்கிறவைகளாயும், பஹுவிதா: - அநேகவிதங்களாயும், மதுக்ஷீரந்யாய - தேனும் பாலும் கலந்ததுபோல், ஸ்வகுண - தன்னுடைய (வாத்ஸல்யம் முதலான) குணங்களுடையவும், விபவ - விபூதிகளுடையவும், ஆஸங்க - கலந்திருப்பதாலே, ஸுபக - போக்கியமாயிருக்கிற, ஸாந்த்ராநந்த - மிகுந்த ஆநந்தத்தைக் கொடுக்கிற, ப்ரஹ்ம - எம்பெருமானுடைய, அநுபவ - அநுபவத்தினுடைய, பரீவாஹா:-மேலேவழிந்து ஓடிவருவது போல் இருக்கிற கைங்கரியங்கள், மம - என்னுடைய, மனஸி - மனதில், ஆவிர்பூயாஸு: - உண்டாகவேண்டும்.

(கருத்து) தேனையும் பாலையும் கலந்ததுபோல், எம்பெருமானும், அவனுடைய குணங்களும், விபூதிகளும் சேர்ந்திருப்பதால்

அவனுடைய அநுபவம் மிகவும் ஆநந்தத்தைக் கொடுப்பதாய் இருக்கிறது. அந்த ஆநந்தத்தை அடைந்து அது உள்ளடங்காமல் உண்டாகும் கைங்கரியங்கள் என் மனதில் தோன்ற வேண்டும். அவைகளில் இதை முதலில் செய்வேனு, அதை முதலில் செய்வேனு என்கிற ஆவல்கள் ஒன்றோடொன்று ஓயாமல் போட்டி போடுகின்றன. அவைகள் யோகிகளுக்கும் நித்தியஸூரிகளுக்கும் முக்தருக்கும் லகுவாய்க் கிடைக்கின்றன. அப்படிப்பட்ட பலவிதங்களான கைங்கரியங்கள் எனக்கு உண்டாகவேண்டும்.

குறிப்பு— (1) இங்கே இருக்கும்போது சிரத்தையுடன் ஒரு கைங்கரியத்தை ஆரம்பித்து அதை முடித்தவுடன் அந்த சிரத்தை போய்விடுகிறது. அதுபோல அன்று. அங்கேகைங்கரியம் முடிந்தபோதிலும் சிரத்தை தொடர்ந்து வருகிறது.

(2) கைங்கரியங்கள் பலவிதங்களாய் இருப்பதால் சிரத்தைகளும் அநேகங்களாக இருக்கின்றன. அவைகள் என் கைங்கரியத்தை முன்னடி செய்யவேண்டும், என் கைங்கரியத்தை முன்னடி செய்யவேண்டும் என்று போட்டி போடுகின்றன. அதாவது — எல்லா கைங்கரியங்களையும் தானே ஒரே காலத்தில் செய்ய வேண்டும் என்கிற ஆவல். அதைச் சொன்னபடி.

(3) எம்பெருமானுடைய ஸ்வரூபமே மிகவும் இனியதாயிருக்கும். அப்படியே அவன் குணங்களும் விபூதிகளும். இவைகள் அவனுடன் சேர்ந்தால் மிகுந்த ஆநந்தம் உண்டாகும் என்று சொல்லவேண்டுமோ ?

(4) முக்தன் எம்பெருமானுடைய கைங்கரியங்களை அவனுடைய ஆஜ்ஞைகளால் செய்யவில்லை. அவனுக்கு அநுபவத்தால் கிடைக்கும் ஆநந்தம் தானே கைங்கரியங்களைச் செய்யும்படி தூண்டுகிறது. அப்படிச் செய்யும் கைங்கரியம் தான் மிகவும் போக்கியமாயிருக்கும்.

---

அவ:— இந்த இருபத்திரண்டு அதிகாரங்களில் சொல்லிய விஷயங்களை ஒரு சுலோகத்தால் சுருக்கமாக அருளிச்செய்கிறார்—

[illegible]
[illegible]
[illegible]

விமுக்தோ நியதம் ஸ்வாபவம் காஷ்டே ப்ராப்தேந்த்ரியவர்க்க்ஸூக்ஷ்மகாத்ர நபஸ்ஸத்ஸ்வரூபம் நித்யமேகஃ ॥

(பதவுரை) ஸத்ருஷ்டஃ - எம்பெருமானால் பார்க்கப்பட்டு, ஸாரவாதீஸ் - மூன்று ரஹஸ்யமே ஸாரமான சப்தராசி என்று அறிந்து, ஸ்வ - தன்விஷயத்திலும், பர - எம்பெருமான் விஷயத்திலும், நிசிதமதிஃ - கூர்மையான புத்தியை உடையவனாய், ஸஜீத்ஸ - விஷயங்களில் இருக்கும் பிடிமானத்தை ஜயித்து, நைகஸம்ஸ்தஃ - பக்தி பிரபத்தி என்கிற அநேகவிதமான உபாயங்களுக்குத் தகுந்தவனாய், ஸ்வதேஷ்டாவாயஃ - அவைகளில் தனக்குத்தகுந்த அதிகாரம் இன்னதென்று தெளிந்து, அதிவிளஃ - பக்தியைச் செய்ய சக்தியில்லாமல் மிகவும் வருத்தப்பட்டு, ஸவரிகர - அங்கங்களோடு கூடிய, ஹரந்யாஸ - பரஸமர்ப்பணத்தாலே, நிஷ்ஸகர்த்யஃ - செய்யவேண்டியதைச் செய்தவனாயும், ஸ்வாவஸ்தாஹம் - தன்னுடைய ஸ்வரூபம் முதலானவைகளுக்குத் தகுந்தபடி, இஹ - இந்த உலகத்தில், நியதம் - தன் ஜாதிக்கும் ஆசிரமத்திற்கும் தகுந்ததாய் சாஸ்திரத்தால் ஏற்படுத்தப்பட்ட, ஸ்வாபவம் - அபராதம் இல்லாமல் இருக்கிற, ஸவயர்விய்யம் - செய்யவேண்டிய கைங்கரியங்களை, காஷ்டே - தகுந்த இடத்திலிருந்து, ப்ராப்ய - செய்துகொண்டு, நிர்ப்பந்த ஸ்வேந்த்ரிய ஸூக்ஷ்மகாத்ரஃ - ஸ்தூலமாயும், ஸூக்ஷ்மமாயும் இருந்துள்ள உடம்பினின்று விடுபட்டு. இருக்கிற, ஏகஃ - எவனாவது ஒருவன், ஸத்ஸ்வரூபம் - எம்பெருமானை, நித்யம் - எப்பொழுதும், அநுபவதி - அநுபவிக்கிறான்.

---

## 23-வது ஸித்தோபாய சோதநாதிகாரம்.

---

அவ:— இப்படி இருபத்திரண்டு அதிகாரங்களாலே, தத்துவம், உபாயம், புருஷார்த்தம்— ஆகிய இவைகளைப் பற்றித் தெரியவேண்டிய விஷயங்களை விரிவாய்ச் சொல்லி, பக்திபிரபத்தி விஷயத்தில் சிலர் சொல்லும் அதிவாதங்களை நான்கு அதிகாரங்

களால் கண்டிக்கிறுர். அவைகளில் முதல் அதிகாரத்தில் எம்பெருமானுடைய ஸ்வபாவத்தைப் பற்றிச் சொல்லும் அதிவாதங்கள் கண்டிக்கப்படுகின்றன:—

யுகபதகிலம் ப்ரத்யக்ஷேண ஸ்வதஸ்ஸததம் விதந்
நிரவதிதயாதிவ்யாம்போதிரசக்யவிவர்ஜித: |
ஜலதிஸுதயா ஸார்த்தம் தேவோ ஜகத்பரிரக்ஷயந்
ஸலீலசேஷ்டஸ்ஸித்தோபாய: ப்ரதீஷ்டபரஸ்ஸதாம் ||

(ப-ரை) யுகபத்- ஒரேகாலத்தில், அகிலம் - எல்லாவற்றையும், ப்ரத்யக்ஷேண- பிரத்தியக்ஷத்தாலேயே, ஸ்வத:- தானுகவே, ஸததம் - எப்போதும், விதந் - அறிந்துகொண்டும், நிரவதி- இயற்கையாகவே எல்லையில்லாத, தயாதிவ்யாம்போதி: - தயையாகிய ஒப்பில்லாத ஸமுத்திரமாயும், அசக்யவிவர்ஜித: - செய்ய முடியாதது என்கிறவைகளால் விடப்பட்டவனுயும் இருக்கிற, தேவ: ஸலீலசேஷ்ட: - லீலைக்காக வேலை செய்கிற பரமபுருஷனை எம்பெருமான், ஜலதிஸுதயா ஸார்த்தம் - திருப்பாற்கடலின் திருமகளாகிய பிராட்டியுடன் கூடிய, ஜகத் - உலகத்தை, பரிரக்ஷயந் - இரக்ஷித்துக்கொண்டு, ஸதாம் - ஸ்வரூபஜ்ஞானம் உள்ளவர்களுடைய, ப்ரதீஷ்டபர: - பரத்தை ஒப்புக்கொண்டு, ஸித்தோபாய: - அவர்களுக்குப் பலனைக்கொடுக்கிற ஸித்தோபாயமாய் இருக்கிறுன்.

(கருத்து) எம்பெருமான் ஒருவன் செய்யும் பிரபத்தியை ஒப்புக்கொண்டு தான் அவன் கேட்கும் பலனைக் கொடுக்கிறுன். இதையும் பிராட்டியுடன் கூடவே இருந்துதான் செய்கிறுன்.

குறிப்பு:— (1) எம்பெருமானுக்குக் கருணை இருப்பதாலே ஜீவனை இரக்ஷிக்கிறுன். எல்லாம் தெரிந்தவனுகையாலே இவனை இரக்ஷிக்கும் வழி அவனுக்குத் தெரியும். இவன் படும் கஷ்டமும் தெரியும். அவனுல் செய்யமுடியாதது ஒன்றுமில்லை. இந்த விஷயங்கள் சுலோகத்தில் முதல் பாதத்தினுல் காட்டப்படுகிறது.

(2) நாம் வஸ்துக்களை ஒரே க்ஷணத்தில் பார்ப்பது முடியாது. ஒன்றின் பின் ஒன்றுய்த் தான் பார்க்கவேண்டும்; எம்பெருமானுக்கு அப்படியன்று. அவன் எல்லா வஸ்துக்களையும் ஒரே

க்ஷணத்தில் பார்க்கிறான். எல்லா வஸ்துக்களையும் நம்மால் பார்ப்பது முடியாது; சிலவற்றைத்தான் பார்க்கிறோம். ஸூக்ஷ்மமாய் இருப்பதையும், தூர இருக்கிறவைகளையும், சுவர் முதலானவைகளால் மறைக்கப்பட்டிருப்பவைகளையும் நமக்குப் பார்ப்பது முடியாது; அவனுக்கு அப்படியன்று. அவன் எல்லாவற்றையும் பார்க்கிறான். நாம் சிலவேளையில் பார்க்கிறோம், எப்போதுமில்லை. அவன் அவைகளை எப்போதும் பார்க்கிறான். நமக்குத் தபஸ்ஸு முதலியவைகளால் இப்போது பார்க்கமுடியாதவைகளான சிலவற்றைப் பார்க்கிறோம். அவன் இயற்கையாகவே பார்க்கிறான். நாம் சிலவற்றைப் பிரத்தியக்ஷத்தாலும், சிலவற்றை அநுமானத்தாலும் பார்க்கிறோம். அவன் பிரத்தியக்ஷத்தாலேயே எல்லாவற்றையும் பார்க்கிறான்.

(3) இதனால், அதிவாதத்திற்குக் காரணம் சொல்லப் படுகிறது. கருணை உள்ளவனாயிருப்பதால் எம்பெருமான் தானே இரக்ஷிப்பன். சக்தியுள்ளவனாகையாலே ஒருவனும் அவனை விலக்கமுடியாது. ஒரு வியாஜமில்லாமல் ஒருவரை இரக்ஷித்தால் பக்ஷபாதம் என்கிற தோஷம் அவனுக்கு வரும். ஆகையால் ஒரு வியாஜத்தை முன்னிட்டுக் கொண்டே இவனை இரக்ஷிக்கிறான். அந்த வியாஜம் பக்தியும் பிரபத்தியும், ஒருவன் பிரபத்தி செய்ய வேண்டியதில்லை என்பது அதிவாதம்

(4) பிராட்டியுடன் சேர்ந்தே எல்லா வேலைகளையும் செய்வதுபோல், முமுக்ஷுவினுடைய பரத்தையும் அவளுடன்கூடவே இருந்தே ஒப்புக்கொள்ளுகிறான். இதில் பிராட்டிக்கு ஸம்பந்தம் இல்லை என்பது அதிவாதம்.

---

அவ:— இந்த விஷயங்கள் மற்றவர்களுக்கு ஏன் தெரியவில்லை என்பதற்குப் பதில் கடைசி சுலோகத்தால் அருளிச்செய்கிறார்:—

विश्रान्तिर्भव्यभव्यैर्दिवानक्तं बहि-
र्भव्यमेनांस्सुदेशिक संप्रदायामहिमेतान्दृष्ट्वापि
नावेक्षितः । स्वप्रावेसत्वसत्त्वे सायन्तया जो
धाष्ट्र्याणः श्रुतौ सत्क्षेत्रयुष्य हृयेत सहि
यत्वसौ शास्त्रापथिरोभयिः ॥ ॥ ௫௨ ॥

(ப-ரை) உவரி உவரி - (புதையலுக்கு) மேன் மேலே - திவா நக்தம் - பகலிலும், இராத்திரியிலும், விஶ்ராம்யத்பி: க்வசித் - உட்கார்ந்து சிரமபரிஹாரம் பண்ணிக்கொண்டிருக்கிறவர்களான, பஹிர்த்ருஷ்டிபி: - மேலே பார்க்கிறவர்களான, க்வஸ்மதீய - நம்முடைய ஆசாரியர்களுடைய, ஸம்ப்ரதாயரஹிதை: - ஸம்பிரதாயம் இல்லாதவர்களாலே, க்வாபி - இதுவரையில், ந த்ருஷ்ட: - பார்க்கப்படவில்லை, ஸ்வப்ராப்தௌ - தன்னை அடைவதற்கு, ஸ்வயமேவ - தானே, ஸாதநதயா - உபாயமாக இருப்பதாக, ஶ்ருதௌ - வேதத்தில், ஜோகுஷ்யமாண: - இறைஞ்சு சொல்லப்பட்ட, மாதவ: - அளவில்லாத, ஶேவதி: - புதையலானது, ஸத்த்வஸ்தை: - ஸத்துவகுணம் உடையவர்களிடத்தில், ஸந்நிதிம் ஸஜதே - ஸமீபத்தில் இருப்பதை அடைகிறது. அதாவது— காணத்தகுந்ததாக ஆகிறது.

(கருத்து) ஒரு இடத்தில் புதையல் இருப்பதை அறியாமல் அதன்மேலே ஜநங்கள் உட்கார்ந்துகொண்டிருக்கிறார்கள். அவர்கள் உள்ளே பார்க்காததினால், அது இருப்பதை அறியவில்லை. அதுபோல நம்முடைய ஆசாரியர்களுடைய ஸம்பிரதாயம் இல்லாதவர்கள் எம்பெருமானே தன்னை அடைவதற்கு ஸாதநம் என்று உபநிஷத்துக்கள் முறையிடுவதை அறியவில்லை. ஸத்துவகுணம் உடையவர்களால் தான் அப்படி அவனைக் காணக்கூடும்.

குறிப்பு:— "பஹிர்த்ருஷ்டிபி:" என்பதற்கு வேதத்திற்கு வெளிப்பட்ட ஸித்தாந்தங்களாலே இந்த விஷயம் அறியப்படவில்லை என்று கருத்து. வேதாந்தத்தை ஒப்புக்கொண்டு நம்முடைய ஆசாரியர்களுடைய மதத்தை அநுஸரிக்கிறவர்கள் தான் வேதத்தில் இருக்கிற அர்த்தத்தை உள்ளபடி பார்க்கிறார்கள்.

## 24-வது ஸாத்தியோபாய சோதநாதிகாரம்.

அவ:— பிரபத்தி என்பது ஒருவன் செய்யவேண்டிய வேலை அன்று என்றும், பக்தியைச் செய்யக்கூடாது என்றும் சொல்லுகிற அதிவாதங்கள் இதில் கண்டிக்கப்படுகின்றன:—

யதாதிகாரம் ப்ரபு: யஜநதாநஹோமார்சந

ப்ரபத்திபக்திப்ரப்ருதிபி: ஸுஸமாராதித: |

பலம் திசதி தேஹிநாமிதி ஹி ஸம்ப்ரதாயஸ்திதி:

ஶ்ருதிஸ்ம்ருதிகுருஸூக்திபிர்நயவதீபிராபாதி ந: ||

(ப-ரை) ப்ரபு: - யஜமானனை எம்பெருமான், யதாதி காரம் - அவரவர்கள் அதிகாரத்துக்குத் தகுந்தபடி செய்யப் பட்ட, யஜந- யாகம், தாந- தானம், ஹோம-ஹோமம், அர்சந- அர்ச்சநம், ப்ரபத்தி- பிரபத்தி, பக்திப்ரப்ருதிபி:- பக்தி முதலானவைகளாலே, ஸுஸமாராதித: - நன்றாய் ஆராதிக்கப் பட்டு, தேஹிநாம் - உடம்போடு கூடிய ஜீவன்களுக்கு, பலம் - பலனை, திசதி - கொடுக்கிறான், இதி ஹி - இப்படிப் பிரஸித் தமான, ஸம்ப்ரதாயஸ்திதி: - ஸம்பிரதாயத்தின் இருப்பானது, நயவதீபி:- நியாயங்களோடு கூடின, ஶ்ருதி- வேதம், ஸ்ம்ருதி- ஸ்மிருதிகள், குருஸூக்திபி: - ஆசாரியர்களுடைய திவ்விய ஸூக்திகள், இவைகளாலே, ந: - நமக்கு, ஆபாதி - நன்றாய் பிரகாசிக்கிறது.

(கருத்து) உலகத்தில் அவரவர்கள் தங்களுக்கு வேண்டிய பலனை அடைய உபாயமாக யாகம் முதலானவைகளைச் செய்கிறார் கள். அவைகளினாலே ஆராதிக்கப்பட்ட எம்பெருமான் அவர் கள் வேண்டும் பலனைக் கொடுக்கிறான். அந்த உபாயங்கள் இல் லாமல் அவன் பலனைக்கொடுப்பது இல்லை. அதுபோல பிரபத் தியையும், பக்தியையும் ஒருவன் செய்யாவிட்டால் அவன் மோ க்ஷத்தைக் கொடுப்பதில்லை. இந்த விஷயம் வேதம், ஸ்மிருதிகள், பெரியோர்களிடம் இருந்து வந்த ஸம்பிரதாயம், இவைகளை நல்ல யுக்திகளைக்கொண்டு விசாரம் செய்கிற நமக்குத் தோன்றுகிறது. அப்படிச் செய்யாதவர்களுக்கு அது தோன்றாது.

குறிப்பு— (1) சுலோகத்தில் "ப்ரப்ருதிபி:" என்ப தாலே கர்மயோகமும், ஜ்ஞானயோகமும் சேர்த்துக் கொள்ளப் படுகின்றன.

(2) "ப்ரபு:" என்பதற்குக் கேட்கும் பலனைக்கொடுக்க ஸமர்த்தன் என்று பொருள்.

(3) இங்கு ஸம்பிரதாயம் என்பது கிடாம்பி ஆச்சானிடமிருந்து அப்புள்ளார் வழியாக வந்தது.

---

அவ:— ஆசாரியர்களிடம் இருந்து நாம் தெரிந்துகொண்ட விஷயத்தை ஒருவனும் அசைக்க முடியாது என்று கடைசி சுலோகத்தால் அருளிச்செய்கிறார்—

தத்தத்தைதுகஹைதுகை: க்ருததியஸ்தர்கேந்த்ர
ஜாலகே விதந்வாநா: கதகவ்ரஜகணநே நிஷ்டாம்
கநிஷ்டாச்ரயாம் | த்ரய்யந்தச்ருதிஸம்ப்ரதாயகதகை:
ஸாது விசோதிதாசயா ஸித்தோபாயவசீக்ரியாமிதி ஹி
நஸ்ஸாத்யம் ஸமாதிசந்து ‖ ‖ ருச ‖

(பதவுரை) தத்தத்தைதுகஹைதுகை: - அந்தந்த ஹைதுகர்களால் உண்டுபண்ணப்பட்ட, தர்கேந்த்ர ஜாலகே - தர்க்கங்களாகிய இந்திரஜாலவித்யையில், க்ருததிய: - சிக்ஷிக்கப்பட்ட புத்தியை உடையவர்களாயும், கதகவ்ரஜகணநே - வாதம் செய்கிறவர்களில் முக்கியமானவர்களை எண்ணும்போது, கநிஷ்டாச்ரயாம் நிஷ்டாம் விதந்வாநா: - சுண்டு விரலால் எண்ணத் தகுந்தவர்களாயும், (முதலில் எண்ணத் தகுந்தவர்களாயும்) த்ரய்யந்தச்ருதி - வேதாந்த சாஸ்திரத்தினுடைய, ஸம்ப்ரதாய - ஸம்பிரதாயமாகிற, கதகை: - தேத்தாங்கொட்டைகளினால், ஸாது - நன்றாய், விசோதிதாசயா: - சுத்தம் பண்ணப்பட்ட மனதை உடையவர்களாயும் இருக்கிற நம்முடைய ஆசாரியர்கள், ஸாத்யம் - செய்யவேண்டிய பக்தி பிரபத்திகளை, ஸித்தோபாயவசீக்ரியாம் - ஸித்தோபாயனை எம்பெருமானை நமக்கு உட்பட்டவனாகச் செய்யும் வியாபாரங்கள், இதி - என்று, ந: - நமக்கு ஸமாதிசந்து - சொல்லிக்கொடுத்து இருக்கிறார்கள்.

(கருத்து) பக்தியும் பிரபத்தியும் நாம் செய்யவேண்டிய வேலைகள் என்றும், அவைகளாலேதான் எம்பெருமான் நமக்கு உட்படுவன் என்றும், நமக்குச் சொல்லிக்கொடுத்திருக்கிற ஆசா

ரியர்கள் தர்க்கவித்யையில் நல்ல பழக்கம் உள்ளவர்கள், வாதம் பண்ணுகிறவர்களில் முதலாக எண்ணத் தகுந்தவர்கள். வெறும் யுக்திகளைக்கொண்டு மாத்திரம் அவர்கள் இப்படிச் சொல்லிக்கொடுக்கவில்லை. அவர்கள் வேதாந்தத்தின் ஸம்பிரதாயத்தை நன்ருய் அறிந்து ஒருவிதமான தப்பு அறிவில்லாதவர்களாய் இருக்கிருர்கள். அவர்கள் சொல்லிக் கொடுத்ததை எவன் அசைக்கக்கூடும்.

குறிப்பு— ஸம்பிரதாயம் என்பது ஆசாரியர்களிடமிருந்து நடுவில் விட்டுப்போகாமல் தொடர்ந்து வருகிற உபதேசம்.

---

## 25-வது பிரபாவ வியவஸ்தாதிகாரம்.

---

அவ:— பிரபந்நனுக்கு சாஸ்திரங்களில் சொல்லுகிற பெருமையை அதிகப்படுத்திச் சொல்லும் அதிவாதங்களை இதில் கண்டிக்கிருர். அதில் முதல் சுலோகம்.

ஸ்வரூபம் யத்³யாத்³ருʼக்³கு³ணவிப⁴வஶீலாதி³ ச விபோ⁴
ஸ்ததா³ஜ்ஞாஸேதவஶ்ச ஶ்ருதிபி⁴ரவஸேயம் தத³கி²லம் ।
ததா² தத்³ப⁴க்தாநாம் தத³வஸதா³நேஶ்ச மஹிமா
யதா²யீதம் ஸஹ்யத்³ரிவ தி³வ்யவைர்யவஸித꞉ ॥

(ப-ரை) விபோ⁴꞉ - யஜமாநனுகிய எம்பெருமானுடைய, ஸ்வரூபம் - ஸ்வரூபமும், கு³ணவிப⁴வஶீலாதி³ ச - குணங்களும், விபூதிகளும், சீலங்களும், திருமேனியும், யத் - எந்த பிரமாணங்களாலே ஏற்படுகின்றன, யாத்³ருʼக் - எந்த விதங்களாய் இருக்கின்றன, ததா³ஜ்ஞாஸேதவ꞉ ச - அந்த அந்த ஜாதிகளுக்கும் ஆசிரமங்களுக்கும் தகுந்த நியமங்களாகிய அவனது உத்திரவுகள், யத் - எவைகள், யாத்³ருʼக் - எந்த அங்கங்களோடு சேர்ந்தன; தத் அகி²லம் - அவைகள் எல்லாம், ஶ்ருதிபி⁴꞉ - வேதங்களாலே, அவஸேயம் - உள்ளபடி அறியவேண்டியது. ததா² - அப்படியே, தத்³ப⁴க்தாநாம் - அவனிடத்தில் பக்தியுள்ளவர்களுடையவும், தத³வஸதா³நேஷு꞉ ச - அவனிடம் போகவேண்டிய

தற்கு உபாயங்களாகிய பக்தி பிரபத்தி முதலியவைகளுடைய வும், மஹிமா - பெருமையானது, யதாஶ்ருதம் - சாஸ்திரம் சொல் லுகிறபடி, யதிபதி முகை: - ஸ்ரீபாஷ்யகாரர் முதலான, ஸத்பி: - பெரியோர்களாலே, வ்யவஸித: - இவ்வளவு என்று தீர்மானிக்கப் பட்டிருக்கிறது.

(கருத்து) எப்படி எம்பெருமானுடைய ஸ்வரூபம் முதலா னவைகளை வேதத்தைக் கொண்டு அறியவேண்டியதோ, அப்ப டியே பக்தி பிரபத்திகளையும், அவைகளைச் செய்கிறவர்களையும் பற்றி சாஸ்திரம் என்ன சொல்லுகிறதோ, அதையே நம்முடைய ஆசாரியர்கள் குறைக்காமல் சொல்லி இருக்கிறார்கள். அதற்கு மேல்பட்டு அவர்களின் பெருமையைச் சொல்லுவது ஸரியன்று.

குறிப்பு— எம்பெருமானுடைய ஸ்வரூபம் பிரகிருதியைப் போல் மாறுதலை அடைகிறது இல்லை என்றும், ஸ்வயம் பிரகா சம் என்றும், மூன்று விதமான பரிச்சேதங்கள் இல்லை என்றும் வேதம் சொல்லுகிறது. அப்படியே அவனுக்குக் குணங்கள் உண்டு, அவன் நிர்விசேஷன் (குணமில்லாதவன்) அல்ல என்றும், அவனுக்கு ஒரு கெட்ட குணமும் இல்லை என்றும், எல்லா நல்ல குணங்களுக்கும் அவன் இருப்பிடம் என்றும், ஜகத் என்கிற விபூதி என்று ஒன்று இல்லை என்கிற மதம் பிசகு என்றும், அது உண்மையில் இருக்கிறது என்றும் சொல்லுகிறது.

---

அவ:— வர்ணதர்மங்களையும், ஆச்ரமதர்மங்களையும் விட்டு விட்டு, நினைத்தபடி நடக்கிற ஜநங்கள் நிறைந்த இந்தக் காலத்தி லும், இந்த அதிகாரத்தில் செய்த விசாரத்தைப் பார்த்து ஸந் தோஷப்படுகிற பெரியோர்கள் இருக்கிறார்கள் என்று கடைசி சுலோகத்தால் அருளிச்செய்கிறார்:—

ஸாதூ⁴பஜ்ஞம் ஸாது⁴வித்³யாப்ரஸூதே ஹேதௌ
யதா²வஸ்தி²தே வ்ருத்தம் தந்யதாம் கு³ணாநுகு³ணயா
வ்ருத்த்யா விஶிஷ்டம் ஶ்ரிதா: । த்யாகோ³பவ்ருத்தித்³ருடா⁴
ஶரணவ்ரஜ்யாவிநயா கோவிதா³ஶ்சித்தாஹ்லாத³கமந்தராத்மநி
யதோ²பவ்யாக்²யாதித்³ருஷ்டிந: ॥ ॥ ௫௬ ॥

(பதவுரை) வர்ணாநாம் சதுர்ணாம் - நாலு ஜாதிகள், சதுர்விதே ஆஶ்ரமேஷு - நான்கு விதங்களான ஆசிரமங்கள், இவை முதலான, பேதே - பேதமானது, யதாவஸ்திதே - சாஸ்திரம் சொன்னபடி இருக்கையில், நாராயணைகநிஷ்டா - விஷ்ணுபக்தராய் இருப்பதற்குத் தகுந்த, வ்ருத்த்யா - இருப்புடன், விஶிஷ்டம் - கூடின, தத்உசிதம் - ஜாதிக்கும் ஆசிரமத்திற்கும் பொருத்தமான, வ்ருத்தம் - நடத்தையை, ஶ்ரிதா: - அடைந்திருக்கிறவர்களாயும், த்யாகோபாலம்பபதே: - வர்ணாசிரமதர்மங்களை விடுவதாகிய தோஷத்திற்கு எப்போதும் தூரத்திலிருக்கிற, ப்ரபத்தி ப்ரகாரே - பிரபத்தி செய்யும் பிரகாரத்தில், கோவிதா: - ஸமர்த்தர்களாயும் (நன்றாய்த் தெரிந்தவர்களாயும்) இருக்கிற, ஏகாந்திந: - ஏகாந்திகள், கலியுகேऽபி - இந்த கடைசி யுகத்திலும், ந: - நம்முடைய, விசாரம் - செய்த விசாரத்தை, ஸஹர்ஷம் ஸ்வீகுர்வந் - ஒப்புக்கொண்டு ஸந்தோஷப்பட, ஸந்தி - இருக்கிறார்கள்.

(கருத்து) இந்த காலத்திலும் தங்களுடைய வர்ணாசிரமதர்மங்களைச் செய்துகொண்டு வேறு தேவதைகளை நெஞ்சால் நினைக்காத பெரியோர்கள் இருக்கிறார்கள். பிரபத்திக்கு வர்ணாசிரமதர்மங்களை விடுவது அங்கம் அன்று என்று நன்றாய் அறிந்திருக்கிறார்கள். அவர்கள் இந்த அதிகாரத்தில் செய்த விசாரத்தைப் பார்த்து ஸந்தோஷப்படுவர்கள். ஆகையால் செய்த விசாரம் வீண் அன்று.

குறிப்பு— (1) சுலோகத்தின் மூன்றாவது பாதத்தாலே சிலர் வர்ணாசிரமதர்மங்களை விடுவது பிரபத்திக்கு அங்கமாகச் சொல்லுகிறார்கள். அவைகளை விடுவது ஸரி அன்று என்றும், அப்படிச் சொல்லுவது துர்வாதம் என்றும் காட்டப்படுகிறது.

(2) வர்ணாசிரம தர்மங்களை அநுஷ்டிக்கிற பெரியோர்கள் என்று சொன்னதால், ஜாதியானது பிரபத்தி பண்ணுவதாலே போய்விடாது என்றும், ஜாதி போகும் என்பது அதிவாதம் என்றும் காட்டப்படுகிறது.

## 26-வது பிரபாவ ரக்ஷாதிகாரம்.

அவ:— பிரபத்தியின் பெருமையைக் குறைக்கிறவர்களுடைய ஸந்தேஹத்தைத் தீர்ப்பதற்காக முதல் சுலோகம் அருளிச் செய்கிருர்—

ஶிலாதெ: ஸ்த்ரீவுஂவிபரிணதிரஸ்ஶ்ச ர்யமெதத்

தஸ்மாதெவ்ய தஶ்ச்ர்யம் யதெத உஷணஸ்யைவ ஶீததா ।

த்ருணஸ்யைவாஸ்த்ரம் விபக்ஷெ நிஹதெரெவ ஶிததா

பாதத்ராணைரெவ த்ரிஜகதாம் த்ராணமிதி ச ॥

(ப-ரை) ஶிலாதெ: - கல்லு முதலானவைகளுக்கு, ஸ்த்ரீ புஂவிபரிணதி: - ஸ்திரீயாகவும், புருஷனுகவுமான, விபரிணதி: - மாறுதலான, ஏதம் தத் ஆஶ்சர்யம் - இந்த ஆச்சரியம், அஸ்து - இருக்கட்டும். ததஸ்அபி - அதைக் காட்டிலும், வக்ஷ்யமாண - மேலே சொல்லப்போகிறவைகள், ஆஶ்சர்யம் - இன்னும் ஆச்சரியங்கள், யத் எதத் - எவைகளென்ருல், உஷ்ணஸ்ய ஏவ - நெருப்புக்கே, ஶீததா - குளிமை உண்டானதும், த்ருணஸ்ய ஏவ - ஒரு புல்லுக்கே, அஸ்த்ரத்வம் - ஆயுதத் தன்மை வந்ததும், விபக்ஷெ - விரோதிகளிடத்தில், நிஹதெ: ஏவ - கொல்லப்படுவதற்கே, ஶிததா - நன்மையைக் கொடுப்பதாக ஆனதும், பாதத்ராண ஏவ - திருவடிகளை இரக்ஷிக்கிற பாதுகைகளாலேயே, த்ரிஜகதாம் த்ராணம் - மூன்று உலகங்களையும் இரக்ஷித்ததும், இதி ச - இப்படிப்பட்டவைகள் ஆச்சரியங்கள்.

(கருத்து) கல்லாய் இருந்த அகலியை சக்கிரவர்த்தித் திருமகனுடைய திருவடி பட்ட உடனே முன்போல் ஸ்திரீயாக ஆகிவிட்டாள். உத்தரையின் கர்ப்பத்தினின்று விழுந்த கரிக்கட்டையானது ஸ்ரீகிருஷ்ணனுடைய திருவடி பட்ட உடன் பரீக்ஷித் ராஜாவாக மாறிவிட்டது. இவைகள் ஆச்சரியமானவைகள்; இவைகளைக் காட்டிலும் ஆச்சரியமானவைகள்— ஹநுமாருடைய வாலை ராக்ஷஸர்கள் கொளுத்தும்போது பிராட்டியின் அநுக்கிரஹத்தாலே நெருப்பின் உஷ்ணம் போய்விட்டது. பிராட்டியினிடத்தில் அபசாரப்பட்ட காகாஸுரன் பேரில் ஏவின புல்லானது ஒரு

பெரிய அஸ்திரத்தின் வேலையைச் செய்தது. கபந்தனையும், விராதனையும், இரட்டையாக இருந்த அர்ஜுநமரங்களையும் கொன்றதினால் அவர்களுக்குச் சாபம் நீங்கி க்ஷேமம் கிடைத்தது. ஸ்ரீ சக்கரவர்த்தி திருமகனுடைய பாதுகைகளைக் கொண்டு பரதாழ்வான் அயோத்தியை இரக்ஷித்து வந்தார். இந்தஆச்சரியங்களை ஒப்புக்கொள்ளுகிறவன் பிரபத்தியின் மஹிமையைப் பற்றி ஏன் ஸந்தேஹப்படவேண்டியது.

குறிப்பு — எம்பெருமானுடைய பிரபாவம் இப்படி இருக்கையில், அவனிடத்தில் செய்யும் பிரபத்திக்கு பக்தியாலே முடியாத பிராரப்தகர்மத்தைப் போக்கும் சக்தி உண்டாகலாம்.

---

அவ,— இந்த நான்கு அதிகாரங்களில் செய்த விசாரத்தின் முடிவில் பிரபத்தியின் மஹிமையைக் கொண்டாடுகிறார்—

ராகத்வேஷமதாதிகைரிஹ மஹாக்ராஹைரக்ஷோபி-
தே (தம்) நித்ய ரக்ஷதி ஸத்த்வே நிஜபரந்யாஸா-
பிதானம் தப:। யத்ஸங்கீக்ருதமத்யஜதி விவிதான்
தர்மானதர்மாபஹான் தன்மஹிமார்ணவஸ்ய தைவவர்ணன-
ம் ஸ்ருத்யோ: ந ஸஹம் ॥ ॥ ௫௮ ॥

(ப-ரை) ராக - ஆசை, த்வேஷ - த்வேஷம், மதாதிகை: - கொழுப்பு முதலானவைகளாகிய, மஹாக்ராஹை: - பெரிய ராக்ஷஸர்களாலே, அக்ஷோபிதே - கலக்கப்படாதவராயும், நித்ய ரக்ஷதி ஸத்த்வே - எப்போதும் இரக்ஷிக்கிறவனாயும் இருக்கிற எம்பெருமானிடத்தில் செய்யப்பட்ட, நிஜபரந்யாஸாபிதானம் - தன்னுடைய பரத்தை வைப்பதாகிய பிரபத்தி என்கிறபெயரை உடைய, யத் தப:- எந்த தபஸ்ஸானது, அதர்மாபஹ: - அதர்மங்களைப் போக்கும்படியான, விவிதான் - வெவ்வேறான, தர்மான் - தர்மங்களை, அத்யஜதி - அதிகரித்திருக்கிறது என்று, ஸங்கீக்ருதம் - ஒப்புக்கொள்ளப் படுகிறதோ, தன்மஹிமார்ணவ - அந்த தபஸ்ஸினுடைய பெருமையாகிய ஸமுத்திரத்தினுடைய, தைவவர்ணனம் - ஒரு திவலையை வர்ணிப்பதும், ஸ்ருத்யோ: - எப்போதும் இரு வேதங்களுக்கும், ந ஸஹம் - நிலமன்று.

(கருத்து) பிரபத்தியினுடைய பெருமையானது ஸமுத்திரம் போல் அளவில்லாமல் இருக்கிறது. அதில் ஒரு திவலையைக்கூட வேதங்களும் வர்ணிக்கமுடியாது. ஏனென்றால், உலகத்தில் பாபங்களைப் போக்கச் சக்தி உள்ளனவாகச் சொல்லப்பட்ட எல்லா தர்மங்களைக் காட்டிலும் பிரபத்தி மேற்பட்டது. அதைச் சீக்கிரம் செய்யலாம். எல்லா அநிஷ்டங்களையும் போக்கும். எல்லா இஷ்டங்களையும் கொடுக்கும். பிரபத்தி செய்தவனுக்கு ஆசை த்வேஷம் முதலான குற்றங்கள் நேர்ந்தாலும் அவைகளுக்குப் போக்கு விட்டு பிரபந்நன் கேட்டுக் கொண்ட காலத்திலேயே மோக்ஷம் கிடைக்கும்.

குறிப்பு— (1) ஆசையும் த்வேஷமும் ராக்ஷஸர்களுக்கும் தகாதவைகளாகையால் அவைகளைப் பெரிய ராக்ஷஸர்கள் என்று சொல்லியிருக்கிறது.

(2) சுலோகத்தில் "ஸகொக்ஷாஸிதஃ" என்றும் பாடமுண்டு. அப்போது அது தபஸ்ஸுக்கு விசேஷணம். தண்டகாரணியத்தில் இருந்த ருஷிகளுடைய தபஸ்ஸு ராக்ஷஸர்களாலே கெடுக்கப்பட்டது. ராக்ஷஸர்களைக் காட்டிலும் பொல்லாதவைகளான ஆசை த்வேஷம் முதலானவைகளாலே பிரபத்தி என்கிற தபஸ்ஸை அழிக்க முடியாது என்று கருத்து. இந்த பாடமே சிலாக்கியம் என்று வியாக்கியானகாரர்களால் ஒப்புக்கொள்ளப்படுகிறது.

---

## 27-வது மூல மந்திராதிகாரம்.

---

அவ:— மேல் மூன்று அதிகாரங்களால் மூன்று ரஹஸ்யங்களுக்கு விரிவாய் அர்த்தஞ் சொல்ல ஆரம்பித்து, இதில் மூல மந்திரத்தின் அர்த்தத்தைச் சொல்லுகிறார். முதலில் இந்த மந்திரத்தின் தேவதை விஷயமாகவும், அதின் ருஷிவிஷயமாகவும், அந்த மந்திரவிஷயமாகவும் வரிசையாய் மூன்று மங்கள சுலோகங்களை அருளிச்செய்கிறார்:—

तारं पूर्वं तदनु हृदयं तच्च नारायणाये
[illegible] ।
[illegible] नः
क्षिप्रं देवः [illegible] ॥

(ப-ரை) வ-டுிவ-ும் தாரம் - முதலில் தாரம் என்கிற பிரணவம், தஉ-ந-ா - அதன்மேலே, ஹ்ருஉயம் - ஹிருதயம் என்கிற நமஸ்ஸு, தது - அந்த பிரஸித்தமான நாராயணாய இதி - நாராயணாய என்று, ஶ்ருதியோக்தம் - வேதத்தால் சொல்லப்பட்ட, வஉம் - சொல், ஆகிய இவைகளை, ஸார்த்தம் - அர்த்தத்துடன், ஆசார்யதத்தம் - ஆசாரியர்களால் கொடுக்கப்பட்டு, ஸ்மரந்தோ - அதை நினைத்துக்கொண்டு, அஶக்தாஸ்ஸந்தோ - சக்தியில்லாதவர்களாய், (அகிஞ்சனர்களாயிருக்கும்) நஃ - நம்முடைய, ரக்ஷாபாரம் - நம்மை இரக்ஷிக்கும் சுமையை, ஸ்வீகுர்வந் - ஒப்புக்கொண்டவனாக, தேவஃ - எம்பெருமான், நிகிலாந் - எல்லா, கைங்கர்யவிக்நாந் - கைங்கரியமாகிற ஸம்பத்துக்கு வரும் விக்கிநங்களை, க்ஷிப்ரம் - சீக்கிரம், க்ஷிபது - போக்கவேண்டும்.

(கருத்து) மூலமந்திரத்தை அர்த்தத்துடன் நினைத்துப் பார்த்து அகிஞ்சனர்களான நாம், நம்மை இரக்ஷிக்கும் சுமையை எம்பெருமானிடம் கொடுக்கிறோம். அதை அவன் ஒப்புக்கொண்டு அவனுக்குச் செய்யவேண்டிய கைங்கரியங்களுக்கு வரும் எல்லா விக்கிநங்களையும் சீக்கிரம் போக்கவேண்டும்.

குறிப்பு:— (1) மந்திரத்தின் மூன்று சொற்களைத் தனித் தனியாக சுலோகத்தில் சொல்லி இருப்பதால், மந்திரத்தை மூன்று வாக்கியமாக அர்த்தம் பண்ணவேண்டும் என்று காட்டப் படுகிறது.

(2) 'அஶக்தாஸ்ஸந்தோ' என்பதாலே, அகிஞ்சநனை ஆத்மாவின் ஸ்வரூபமும், 'ரக்ஷாபாரம்' என்பதாலே, பிரபத்தியும், 'கைங்கர்ய' என்பதாலே அதின்பலனை கைங்கரியமும் காட்டப்படுகின்றன. இதனால் இந்த மந்திரத்தை ஸ்வரூபத்தைச் சொல்லுவதாகவும், உபாயத்தைச் சொல்லுவதாகவும், புருஷார்த்தத்தைச் சொல்லுவதாகவும் அர்த்தம் பண்ணலாம் என்றும் காட்டப்படுகிறது.

(3) பிரணவத்தை 'தாரம்' என்றும், நமஸ்ஸை 'ஹ்ருஉயம்' என்றும் மந்திர சாஸ்திரம் சொல்லுகிறது.

கல்யாணமாவஹது க்ருதயுகம் ஸ்வதர்மம்
ஆக்யாபயந் ஶ்ருண்வத்ஸு நரநாரதாதிகேஷு |
ஆத்யம் கிமப்யதிஷ்டிதோ ரதமஷ்டசக்ரம்
பந்து: ஸதாம் பதரிகாஶ்ரமதாபஸோ ந: || ௯0 ||

(ப-ரை) ஶ்ருண்வத்ஸு - கவனமாய்க் கேட்கிற, நரநாரதாதிகேஷு - நரன், நாரதர் முதலானவர்களிடத்தில், க்ருதயுகம் - க்ருதயுகஸம்பந்தமான, ஸ்வதர்மம் - தன்னுடைய தர்மத்தை, ஆக்யாபயந் - சொல்லிக்கொண்டு, அஷ்டசக்ரம் - எட்டு சக்கிரங்களை உடைய, ஆத்யம் - முதன்முதலான, கிமபி - விலக்ஷணமான, ரதம் - ரதத்தை, அதிஷ்டித: - அடைந்திருக்கிற, ஸதாம் - பெரியோர்களுக்கு, பந்து: - பந்துவாய், (பந்துவான தகப்பனைப்போல் அநுகூலத்தைச்செய்யும்) பதரிகாஶ்ரமதாபஸ:-பதரிகாஶ்ரமத்தில் தபஸ்ஸு செய்துகொண்டு இருக்கிற நாராயணன் என்கிற ருஷியானவர், ந: - நமக்கு, கல்யாணம் - க்ஷேமத்தை, ஆவஹது - செய்யவேண்டும்.

குறிப்பு:— (1) க்ருதயுகதர்மமாவது— மோக்ஷத்திற்கு வேண்டிய வியாபாரங்களைச் செய்வது. இதற்கு நிவிருத்திதர்மம் என்று பெயர்.

(2) மூலமந்திரத்திற்கு எட்டு எழுத்துக்கள் இருப்பதால், அதை எட்டு சக்கிரங்களுள்ள ரதம் என்று சொல்லியிருக்கிறது.

(3) நாராயணன் என்கிற ருஷியானவர் இந்த மந்திரத்தை உபதேசம் பண்ணிக்கொண்டு இருக்கிறார். ஆகையால் அதற்கு அவரே ருஷி. அவரே மந்திரத்திற்கும் தேவதை. ஆகையாலே அவரை மந்திரமாகிய ரதத்தில் இருக்கிறதாகச் சொல்லி இருக்கிறது.

(4) எம்பெருமானுக்கு வேண்டியது எல்லாம் இருப்பதாலே இப்படி உபதேசம் பண்ணிக்கொண்டு இருப்பது வெறும் கிருபையினாலேயே. அவன் செய்யும் வேலைக்குப் பிரயோஜநம் ஸாதுக்களை இரக்ஷிப்பதே. இந்த 'ஸதாம் பந்து:' என்பது காட்டுகிறது.

(5) "ஶ்ருணோதி" என்பதாலே உபதேசம் பண்ணப்பட்டதைக் கவனமாய்க் கேட்பதாகிய சிஷ்யகுணம் சொல்லப்படுகிறது.

---

யதந்தர்ஸர்வமஶேஷேண வாங்மயம் வேதவைதிகம் ।
தஸ்மை வ்யாபகமுக்யாய மந்த்ராய மஹதே நம: ॥௯௧॥

(ப-ரை) வேதவைதிகம் - வேதமும், அதை மூலமாக உடைய ஸ்மிருதிகளும், ஆகிய, வாங்மயம் - சொற்கள், அஶேஷேண - பாக்கியில்லாமல், யதந்தர்ஸ்ஸம் - எதற்குள் அடங்கி இருக்கின்றனவோ, தஸ்மை - அந்த, வ்யாபகமுக்யாய - வியாபகமந்திரங்களுக்குள் முக்கியமான, மஹதே - பெருமையை உடைய, மந்த்ராய - மந்திரத்திற்கு, நம: - நமஸ்காரம்.

குறிப்பு:— (1) வேதமும் ஸ்மிருதிகளும் இம்மந்திரத்தில் அடங்கி இருப்பதாவது- தத்துவம், உபாயம், புருஷார்த்தமாகிய இவைகளைப் பற்றி அவைகள் சொல்லுவது எல்லாம் மூலமந்திரத்தில் அடங்கி இருக்கிறது என்று கருத்து.

(2) வியாபகமந்திரங்கள் மூன்று. அவைகளுள் மூலமந்திரம் ஒன்று. மற்றவைகளில், "வாஸுதேவ" என்கிற சொல்லும், "விஷ்ணு" என்கிற சொல்லும் இருக்கின்றன. அவைகள் எம்பெருமான் எங்கும் இருப்பதைச் சொல்லுவதனாலே அவைகளுக்கு வியாபகமந்திரம் என்று பெயர்.

---

இந்த அதிகாரத்தின் முதல் சுலோகம்.

ஏஷ மூலமந்த்ரஸம்வ்ருத
ஸ்ஸமஸ்தமேவ க்ருத்ஸ்நமஷ்டதி ।
ஸ்படிகதல நிஹித நிதிரிவ
ஸுக்ருதிநோ வ்யக்திமஶ்நுதே ॥ ॥௯௨॥

(ப-ரை) ஸ்படிகதலே - ஸ்படிகமயமான இடத்தில், நிஹிதநிதி: இவ - வைக்கப்பட்டிருக்கிற புதையலைப்போல், மூலமந்த்ரஸம்வ்ருதம் - மூலமந்திரத்தினால் மூடப்பட்டு இருக்கிற,

அர்த்தம் - அர்த்தத்தை, இஹ - இங்கு, கஶ்சித் ஜந்து: - யாதே னுமொரு மனிதன், தேஶிகோக்த - ஆசாரியர்களாலே கொடுக் கப்பட்ட, சக்ஷுஷா - கண்ணாலே, க்லேஶேந - கொஞ்சமும் பாக்கியில்லாமல், அநுபவதி - அறிந்து அநுபவிக்கிறான்.

(கருத்து) மிகவும் சுருக்கமாக இருக்கிற இம்மந்திரத்தினு டைய எல்லா அர்த்தங்களையும் ஆசாரியன் உபதேசத்தாலே ஒரு வன் அதை அறிந்து அநுபவிக்கிறான்.

குறிப்பு:— (1) இம்மந்திரத்தின் அர்த்தத்தின் பெருமை யைக் காட்டுவதற்காக அதைப் புதையலாகவும், அந்த அர்த் தத்தை அடக்கிக்கொண்டிருக்கிற மந்திரத்தை ஸ்படிகமாகவும் சொல்லியிருக்கிறது.

(2) ஸ்ரீதேசிகன் அப்புள்ளாருடைய அநுக்கிரஹத்தாலே அறிந்து அநுபவித்ததை மறைபொருளாகச் சொல்லுகிறார்.

---

அதிகாரத்தின் கடைசி சுலோகம்.

> இத்தம் ஸம்வலித: பதை: த்ரிபிரஸாவேகத்வி பஞ்சாக்ஷரைரர்தைஸ் தத்த்வ ஹித புருஷார்த்தமயைஸ்த்ரயாந்த
> ஸாரைஸ்த்ரிபி: । ஆத்யஸ்ஸ்த்ர்யக்ஷரவேதஸூதிரஜஹத்
> ஸத்வாதிவ்ருத்திஸ்த்ரயீ ஸந்தோஹோத்தரயோ: பரம் வ்யதிகரம் த்ரயஸாரைர் தந்த்ரத: ॥ ௯௩ ॥

(பதவுரை) இத்தம் - இந்த அதிகாரத்தில் சொன்னபடி, த்ரய்யந்த ஸாரை: - வேதாந்த சாஸ்திரத்தின் ஸாரமாகிய, ஏகத்வி பஞ்சாக்ஷரை:- வரிசையாய் ஒரு எழுத்து, இரண்டெழுத்துக் கள், ஐந்து எழுத்துக்களை உடைய, த்ரிபி: பதை: - மூன்று பதங்களோடும், த்ரய்யந்தஸாரை: - வேதாந்த சாஸ்திரத்தின் ஸாரமாகிய, தத்த்வஹிதபுருஷார்த்தமயை: - தத்துவம், உபா யம், புருஷார்த்தம் ஆகிய, த்ரிபி: அர்த்தை: - மூன்று அர்த் தங்களோடும், ஸம்வலித: - சேர்ந்ததாயும், ஆத்ய: - மூன்று ரஹஸ்யங்களுக்குள்ளும், மூன்று வியாபகமந்திரங்களுக்குள்ளும் முதலாயும், த்ர்யக்ஷரவேதஸூதி: - முதல் சொல்லின் மூன்று எழுத்துக்களால் மூன்று வேதங்களுக்குக் காரணமாயும், அஜ

ஸ்தூல ஸூக்ஷ்மாதிவ்யக்தித்வய: - இரண்டாவது சொல்லாலே ஸ்தூலம், ஸூக்ஷ்மம், பரம் என்கிற அர்த்தங்களைக் காட்டுகிறதாயும், த்ர்யங்கஸார: - மூன்றாவதான சொல்லாலே, வேதாந்தத்தினுடைய ஸாரமாயிருக்கிற, ஸௌம்ய மந்த்ர: - இந்த மந்திரமானது, த்ரைகுண்ய வ்யுதாஸம் - ஸம்ஸாரம் கழிவதை, ஸதாம் - முமுக்ஷுக்களுக்கு, வ்யனக்தி - கொடுக்கிறது.

(கருத்து) இந்த மந்திரத்தில் மூன்று சொற்கள் இருக்கின்றன. அவைகளில் முதல் சொல்லில் ஒரு எழுத்து; இரண்டாவது சொல்லில் இரண்டு எழுத்துக்கள்; மூன்றாவது சொல்லில் ஐந்து எழுத்துக்கள் இருக்கின்றன. மூன்று சொற்களும் வரிசையாய் ஸ்வரூபத்தினுடைய உண்மையையும், அதை அறிந்தவன் செய்யவேண்டிய உபாயத்தையும், அதினால் கிடைக்கும் பயனையும் சொல்லுகின்றன. இந்த சொற்களும் அர்த்தங்களும் வேதாந்தத்தில் ஸாரமானவைகள். முதற் சொல்லில் அடங்கி இருக்கும் மூன்று எழுத்துக்களில் இருந்து மூன்று வேதங்கள் உண்டாகி இருக்கின்றன. இரண்டாவது சொல்லிற்கு மூன்று விதமாய் அர்த்தம் பண்ணலாம். நமஸ்ஸு என்பது முழுவதற்கும் பிரபத்தி என்றும் அதின் பலமாகிய எம்பெருமான் கைங்கரியம் என்றும் பொருள். இது ஸ்தூலமான அர்த்தம். இந்த சொல்லில் ந: - என்றும், மஸ் - என்றும் பிரித்தால், நான் எம்பெருமானுக்கு உட்பட்டவன் என்றும், நான் எனக்குச் சேஷன் அன்று என்றும், என்னுடையதாக எண்ணி இருக்குமவைகளுக்கு நான் இயற்கையாகச் சேஷி அன்று என்றும் பொருள் கிடைக்கும். இதற்கு ஸூக்ஷ்மமான அர்த்தம் என்று பெயர். எம்பெருமானே பிரதானமான உபாயம் என்று பரம் என்கிற அர்த்தம். மூன்றாவது சொல்லானது எம்பெருமான் ஜகத்காரணம் என்றும், எல்லாம் அவனுடைய ஸொத்து என்றும், அவன் எல்லாவற்றிலும் இருக்கிறான் என்றும், அவனே எல்லாவற்றிற்கும் ஆதாரம் என்றும், அவனே ஜீவன்களுக்கு அடைய வேண்டிய புருஷார்த்தம் என்றும், அதற்கும் அவனே உபாயம் என்றும் காட்டுவதால் இதுவே வேதாந்தத்தின் ஸாரமான சொல். இந்த மந்திரத்தை இவ்விதமாக அறிந்து அறியப்பட்ட ஸ்வரூபத்துக்குத் தகுந்த உபாயத்தைச் செய்தால் முமுக்ஷுவுக்கு ஸம்ஸாரம் போய்விடும்.

---

## 28-வது த்வயாதிகாரம்.

ஶ்ராவிதோ விதநுதே க்ருதக்ருத்யகக்ஷ்யாம்
ஆவ்ருத்திதோ திஶதி யஶ்ச க்ருதார்த்தபாவம் ।
ப்ரத்யூஷதாம் பஜதி ஸம்ஸ்ருதிகாலராத்ரி:
பத்மாஸஹாயஶரணாகதிமந்த்ர ஏஷ: ॥   ॥ ௨௮ ॥

(ப-ரை) ய: - எந்த மந்திரமானது, ஶ்ராவித: - எம்பெருமான் கேட்கும்படி முமுக்ஷு ஒரு தடவை சொன்னால், க்ருதக்ருத்யகக்ஷ்யாம் - கிருதகிருத்யனாய் ஆவதை, விதநுதே - செய்கிறதோ, ஆவ்ருத்தித: - அடிக்கடி சொல்லப்பட்டால், க்ருதார்த்தபாவம் ச - கிருதார்த்தனாக இருக்கும் தன்மையையும், திஶதி - கொடுக்கிறதோ, ஏஷ: - இது, பத்மாஸஹாயஶரணாகதிமந்த்ர: - லக்ஷ்மீபதியான எம்பெருமானிடத்தில் செய்யும் சரணாகதியின் மந்திரமாக இருந்து, ஸம்ஸ்ருதிகாலராத்ரி: - ஸம்ஸாரமாகிய கொஞ்சமும் வெளிச்சம் இல்லாத இராத்திரிக்கு, ப்ரத்யூஷதாம் - விடியற்காலமாயிருப்பதை, பஜதி - அடைகிறது.

(கருத்து) இந்த த்வயம் என்கிற மந்திரத்தை முமுக்ஷு எம்பெருமான் கேட்கும்படி ஒருதடவை சொன்னால், அது அவனை கிருதகிருத்தியனாகச் செய்கிறது. அதாவது— அவன் செய்ய வேண்டிய வேலை இதினால் செய்யப்பட்டதாக ஆகிவிடுகிறது. அதை அடிக்கடி சொல்லிக் கொண்டு காலத்தைப் போக்கினால், அவன் ஸுகத்தை அடைவதினால், அடையவேண்டிய பிரயோஜனத்தை அடைந்துவிடுகிறான். ஒரு இருட்டான இராத்திரி விடியற்காலம் வந்த உடன் போய், பிற்பாடு பகல் வருவதுபோல், இந்த மந்திரத்தைக் கொண்டு பிரபத்தி பண்ணினால் ஸம்ஸாரத்தைப் போக்கி, மேலே அளவில்லாத எம்பெருமானுடைய அநுபவத்தை அதுகொடுக்கும். இவ்வித பெருமையை உடையது இம்மந்திரம்.

குறிப்பு:— "பத்மாஸஹாய" என்கிற சொல்லால் முமுக்ஷு செய்கிற பிரபத்தியில் லக்ஷ்மிக்கும் ஸம்பந்தம் உண்டு என்று காட்டப்படுகிறது.

இதின் கடைசி சுலோகங்கள்.

இதமஷ்டபதம் வ்யாஸே ஸமாஸே ஷட்பதம் விது: |
வாக்யம் பஞ்சபதைர்யுக்தமிதி ப்ரபத்யப்ரதானகம் ||

(ப-ரை) வ்யாஸே - ஸ்ரீமந்நாராயணசரணௌ என்பதை மூன்று சொற்களாகப் பிரித்தால், இதம் - இம்மந்திரமானது, அஷ்டபதம் - எட்டு சொற்கள் உள்ளது, ஸமாஸே - அதை ஒரு சொல்லாக வைத்துக்கொண்டால், ஷட்பதம் - ஆறு சொற்கள் உள்ளது, விது: - (என்று) பெரியோர்கள் அறிகிறார்கள், பஞ்சபதை: - ஐந்து சொற்களோடு, யுக்தம் - சேர்ந்த, வாக்யம் - வாக்கியமானது, இதி ப்ரபத்யப்ரதானகம் - பிரபத்தி பண்ணுகிறேன் என்கிற வேலையைச் சொல்லுகிற சொல்லை முக்கியமாக உடையது.

---

ஸாரம் த்வயம் த்ர்யவயவம் ஸாவலப்யதுர்யம்
வ்யக்தார்த்தபஞ்சகமுபாத்தஷடங்கயோகம் |
ஸப்தார்ணவீமஹிமவத்விவ்ருதாஷ்டவர்ணம்
ரங்கே ஸதாமிஹ ரஸம் நவமம் ப்ரஸூதே || ௬௬ ||

(ப-ரை) ஸாரம் - இது முக்கியமானது; த்வயம் - இரண்டு அர்த்தத்தைச் சொல்லுவதாலே, த்வயம் என்றுபேர்பெற்றது; த்ர்யவயவம் - மூன்று வாக்கியங்களுள்ளது; ஸாவலப்யதுர்யம் - வருத்தமில்லாமல் நான்காவது புருஷார்த்தமான மோக்ஷத்தை அடைவதற்கு உபாயமானது; வ்யக்தார்த்தபஞ்சகம் - அறிய வேண்டிய ஐந்து அர்த்தங்களைத் தெளிவாய்க் காட்டுவது; உபாத்தஷடங்கயோகம் - ஐந்து அங்கங்களோடு கூடிய பிரபத்தி என்கிற யோகத்துக்கு ஸாதநமாய் இருப்பது; ஸப்தார்ணவீமஹிமவத் - ஏழு ஸமுத்திரங்களுடைய பெருமையைஉடையது, (எல்லா அர்த்தங்களையும் அடக்கிக்கொண்டிருப்பது) விவ்ருதாஷ்டவர்ணம் - எட்டு எழுத்தாகிற மூலமந்திரத்தின் அர்த்தத்தை விரிவாய்க் காட்டுவது; இவ்விதமான மந்திரமானது, இஹ - இந்த ஸம்ஸாரமண்டலத்திலே அருமையான, நவமம் ரஸம் - சாந்தி என்கிற ஒன்பதாவது ரஸத்தை, ரங்கே - ஸ்ரீரங்கத்தில், ஸதாம் - இருக்கிறவர்களுக்கு, ப்ரஸூதே - கொடுக்கிறது.

குறிப்பு— (1) இரண்டு அர்த்தமாவது— உபாயம், புருஷார்த்தம். இவைகளுள் முன் பாதியால் உபாயத்தையும், பின் பாதியால் புருஷார்த்தத்தையும் காட்டுகிறது.

(2) மூன்று வாக்கியங்கள்— முன் பாதி ஒரு வாக்கியம். "ஸ்ரீமதே நாராயணாய" என்பது இரண்டாவது வாக்கியம். நம: என்பது மூன்றாவது வாக்கியம்.

(3) த்வயத்தாலே பிரபத்தியைப் பண்ணும்போது அதை ஒரே தடவை சொன்னால் போதும். மூலமந்திரத்தின் ஸித்தியை அடைவதற்காக புரச்சரணம் என்கிற ஒன்றைச் செய்ய வேண்டியது. அதாவது— அதை ஜபம் பண்ணிக்கொண்டிருக்கும்போது ஹோமங்களையும், தர்ப்பணங்களையும் ததீயாராதநங்களையுஞ்செய்வது. இந்த சிரமம் த்வயமந்திரத்தினால் ஸித்தியடைவதற்கு வேண்டியதில்லை.

(4) 'ஸ்ரீமந்நாராயண' என்பதாலே, அடையவேண்டிய எம்பெருமானும், "ப்ரபத்யே" என்பதின் உத்தமபுருஷனாலே அடைகிற ஜீவனும், அந்தச்சொல்லாலேயே செய்யவேண்டிய உபாயமும், "ஸ்ரீமதே நாராயணாய" என்பதால் அடையவேண்டிய பயனும், 'நம:' என்பதில் 'மம' என்கிற பாகத்தினால் அவனை அடையவதற்கு இதுவரையில் உண்டாகி இருந்த தடையும்—ஆகிய ஐந்தும் சொல்லப்படுகின்றன. இவைகள் முக்கியமானவைகளாகையால், அவைகளைக் காட்டுகிற இம்மந்திரம் உயர்ந்தது.

(5) ஐந்து அங்கங்களையும் அங்கியான பிரபத்தியையும் சேர்த்து ஷடங்கம்- ஆறு அங்கம் என்று பிரபத்தியைச் சொல்லி இருக்கிறது. இந்த அங்கங்கள் இன்னவை என்பதற்கு 27-வது சுலோகத்தைப் பார்க்க.

(6) நாடகசாலையைப் பார்க்கிறவர்களுக்கு நாடகத்தாலே எட்டு விதரஸம் கிடைக்கும். ஸ்ரீரங்கத்தில் இருப்பவர்களுக்கு சாந்திரஸமும் இம்மந்திரத்தாலே கிடைக்கும்.

(7) "ரங்க" என்கிற சொல்லுக்கு நாடகம் ஆடுகிற இடம் என்றும், திவ்யதேசமான ஸ்ரீரங்கம் என்றும் பொருள். வேறு

ரஸங்களில் பற்று உள்ளவர்களாய் நாடகசாலைக்குப் போகிறவர்க ளுக்கும் சாந்திரஸம் பிரயாஸமில்லாமல் உண்டாகுமென்று இத னால் காட்டப்படுகிறது.

---

அவ:- த்வயமந்திரத்தின் பெருமையைப் பல உதாரணங்க ளாலே உறுதிப்படுத்துகிறார்:—

> 𑌨 𑌵𑍇𑌦𑌾𑌨𑍍𑌤𑌾𑌚𑍍𑌛𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌂 𑌨 𑌮𑌧𑍁𑌮𑌥𑌨𑌾𑌤𑍍𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌮𑌧𑌿𑌕𑌂
> 𑌨 𑌤𑌦𑍍𑌭𑌕𑍍𑌤𑌾𑌤𑍍𑌤𑍀𑌰𑍍𑌥𑌂 𑌨 𑌤𑌦𑌭𑌿𑌮𑌤𑌾𑌤𑍍 𑌸𑌾𑌤𑍍𑌤𑍍𑌵𑌿𑌕𑌪𑌦𑌂 ।
> 𑌨 𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌹𑌾𑌰𑌾𑌦𑌾𑌰𑍋𑌗𑍍𑌯𑌂 𑌨 𑌮𑌹𑌾𑌜𑌨𑌾𑌤𑍍 𑌬𑍋𑌧𑌜𑌨𑌕𑌂
> 𑌨 𑌮𑍋𑌕𑍍𑌷𑌾𑌤𑍍𑌸𑍌𑌖𑍍𑌯𑌂 𑌨 𑌦𑍍𑌵𑌯𑌵𑌚𑌨𑌤𑌃 𑌕𑍍𑌷𑍇𑌮𑌕𑌰𑌣𑌂 ॥

(படை) 𑌵𑍇𑌦𑌾𑌨𑍍𑌤𑌾𑌤𑍍 - வேதாந்தங்களைக்காட்டிலும், 𑌅𑌧𑌿𑌕𑌂 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌂 𑌨 - உயர்ந்த சாஸ்திரம் இல்லை, 𑌮𑌧𑍁𑌮𑌥𑌨𑌾𑌤𑍍 - மதுவைக் கொன்ற எம்பெருமானைக் காட்டிலும், 𑌅𑌧𑌿𑌕𑌂 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌂 𑌨 - உயர்ந்த தத்துவம் இல்லை, 𑌤𑌦𑍍𑌭𑌕𑍍𑌤𑌾𑌤𑍍 - அவனிடத்தில் பக்தியுள்ளவனைக் காட்டிலும், 𑌅𑌧𑌿𑌕𑌂 𑌤𑍀𑌰𑍍𑌥𑌂 𑌨 - பாபத்தைப் போக்குவதில் உயர்ந்தது வேறு ஒன்றும் இல்லை, 𑌤𑌦𑌭𑌿𑌮𑌤𑌾𑌤𑍍 - அந்த பாகவதர்களுக்குப் பிடித்த இடத்தைக் காட்டிலும், 𑌨 𑌸𑌾𑌤𑍍𑌤𑍍𑌵𑌿𑌕𑌪𑌦𑌂 - ஸத்துவகுணம் மேலிட்ட வேறு இடம் கிடையாது, 𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌹𑌾𑌰𑌾𑌤𑍍 - ஸத்துவகுணம் மேலிட்ட ஆஹாரத்தைக் காட்டிலும், 𑌆𑌰𑍋𑌗𑍍𑌯𑌂 𑌨 - உடம்புக்கு ஆரோக்கியத்தை உண்டு பண்ணுவது வேறு ஒன்றுமில்லை, 𑌮𑌹𑌾𑌜𑌨𑌾𑌤𑍍 - நல்ல ஜ்ஞாநமுடைய ஆசாரியனை அடைவதைக் காட்டிலும், 𑌬𑍋𑌧𑌜𑌨𑌕𑌂 𑌨 - தத்துவங்களின் அறிவை உண்டுபண்ணுவது வேறு ஒன்று இல்லை, 𑌮𑍋𑌕𑍍𑌷𑌾𑌤𑍍 - மோக்ஷத்தைக் காட்டிலும், 𑌨 𑌸𑍌𑌖𑍍𑌯𑌂 - ஸுகம் வேறொன்றில்லை, 𑌦𑍍𑌵𑌯𑌵𑌚𑌨𑌤𑌃 - த்வயமந்திரத்தைச் சொல்லுவதைக் காட்டிலும், 𑌕𑍍𑌷𑍇𑌮𑌕𑌰𑌣𑌂 𑌨 - அந்த க்ஷேமத்தை உண்டுபண்ணுவது வேறு இல்லை.

(கருத்து) பிரபத்திக்கு உபயோகப்படும் மற்ற மந்திரங்க ளைக் காட்டிலும் த்வயம் என்கிற மந்திரத்திற்கு பெருமை அதிகம்.

---

## 29-வது சரம சுலோகாதிகாரம்.

முதல் சுலோகம்.

ய உபநிஷதாமந்தே யஸ்மாத் அநந்தகுணாத் ஸ்வயம்
அகிலஜநதா சோகச்சேதீ சரமஸ்லோகஸ் ஸ்வயம் ஸமஜாயத |
தமிஹ விதிநா க்ருஷ்ணம் நித்யம் ப்ரபத்ய ஸநாதநம்
சமிதவிபதாசங்காதங்கா த்யஜாம ஸுகம் வயம் || சு-அ ||

(பதவுரை) யஃ - எந்த எம்பெருமான், உபநிஷதாம் - உப நிஷத்துக்களுடைய, அந்தே - ஸமீபத்தில் இருக்கிறானோ, அநந்தகுணாத் - அளவில்லாத தயாஸமுத்திரமாகிய, யஸ்மாத் - எவனிடத்திலிருந்து, சரமஸ்லோகஃ - சரமஸ்லோகமானது, அகிலஜநதா சோகச்சேதீ - ஜநங்களுடைய சோகத்தைப் போக்குவதாய், ஸ்வயம் ஸமஜாயத - தானே உண்டாயிற்றோ, தம் - அந்த, ஸநாதநம் நித்யம் - எப்போதுமிருக்கிற உபாயமான, க்ருஷ்ணம் - கிருஷ்ணனை, விதிநா - முறைப்படி, ப்ரபத்ய - பிரபத்தியாலேயே அடைந்து, சமிதவிபதாஃ - பாபங்கள் போனவர்களாயும், ஆசங்கா - மோக்ஷம் கிடைக்குமோ, கிடைக்காதோ என்கிற ஸந்தேஹத்தையும், ஆதங்கா - நாம் செய்யும் பாபங்கள் போகுமோ போகாதோ என்கிற பயத்தையும், த்யஜாம் - விட்டவர்களாய், வயம் ஸுகம் - ஸுகமாய் இருக்கிறோம்.

(கருத்து) எம்பெருமானிடத்தில் பிரபத்தி செய்து பாபங்களைக் கழித்து, ஸந்தேஹத்தையும் பயத்தையும் விட்டு ஸுகமாக இருக்கிறோம்.

குறிப்பு— (1) உபநிஷத்துக்களுக்கு ஸமீபத்தில் என்று சொன்னதாலே, எம்பெருமான் ஒருவன் இருக்கிறான் என்றும் அவன் இப்படி இருக்கிறான் என்றும் உபநிஷத்து வாக்கியங்கள் ஸ்வரஸமாய் எல்லாம் ஒத்துச் சொல்லுகின்றன என்பது காட்டப்படுகிறது. இதையும், சொற்களுக்கு ஏற்பட்ட பொருளை விட்டுவிட்டு அந்தந்த இடங்களுக்குத் தகுந்தபடி பொருளை வைத்துக் கொண்டு அர்த்தம் பண்ணவேண்டிய நிர்ப்பந்தமில்லை, இது ஸ்வரஸம் என்பதின் பொருள்.

(2) சரமச்லோகமானது தானாய் வந்தது என்பதற்கு ஜநங்களிடத்தில் கருணையாலே சொல்லப்பட்டது; அர்ஜுநனுக்காக மாத்திரம் சொல்லப்பட்டது அன்று என்று கருத்து.

(5) ச்லோகத்தில் "விபி_நா" என்பதால் சரமச்லோகத்தின் முதற்பாதத்தினால் சொன்னபடி அகிஞ்சநனாய் பிரபத்தி பண்ணுவதையும், 'ஸுவெஷ' என்பதால் இரண்டாவது பாதத்தின் அர்த்தமும், 'ஸ்ரீதஸாரதிர்' என்பதால் 'ஸவ்வுவாவெ ஹெ்யா ஜோக்ஷயிஷ்யாமி' என்பதின் அர்த்தமும், "ஸ்க்ஷாதக்ஷ ஜஃ" என்பதால் 'மா ஸுசஃ' என்பதின் அர்த்தமும் காட்டப்படுகின்றன.

அவ:— சரமச்லோகத்தில் சொன்ன பிரபத்தியானது அங்க பிரபத்தி மாத்திரபரம் அன்று. நேராக மோக்ஷத்திற்கும் உபாயம் என்று ச்லோகத்தாலே அருளிச்செய்கிறார்—

ஊவிஜ்ஞாநெநியமஹநெஉவிஹுராஙெ
ஹெஸஅஙாநெஹுவஹஹிருயெநெஸுவதாஂ நஸவநாஃ । நிஷ தூஹஂ நிஜவஉஸள
நெதகாஃ ஹுஹஹா ஸதாயெயஂ கிலவி விஉயெ
ஸாரஷிஸவுநொதா ॥ ॥ சுகூ

(பட்ரை) ஊவிஜ்ஞாநெநஃ - அறியமுடியாதவைகளாயும், நியமஹநெநஃ - அவைகளுக்கு ஏற்பட்ட நியமங்களாலே செய்யமுடியாதவைகளாயும், ஊஹுவிஹுராஙெஹெஸஃ-சிரமபரிஹாரம் பண்ணுகிற இடம் வெகு தூரத்தில் இருப்பவைகளாயும், (வெகுகாலம் கழித்துப் பலனைக் கொடுப்பவைகளாயும்) பஙாநெஹுஃ - அகிஞ்சநனுக்குத் தகாதவைகளாயும் இருக்கிற, பஹுஹிஃ உயநெஃ - அநேக உபாயங்களாலே, ஸுவதாஂநஃ - வருத்தப்படுகிற நமக்கு, ஸவநாஃ - நல்லவழியாய், ஸவநொதா - எல்லாருக்கும் யஜமானனாய், கூஸள ஸாரஷிஃ - அர்ஜுநனுக்கு ஸாரத்யம் பண்ணிக்கொண்டிருந்த இந்த எம்பெருமான், ஹுஹஹா - தன் பெருமையினாலே, நிஷ தூ

ஸூ௦-ஒரு தடையும் இல்லாமல், நிஜவஶ௦- தன்னுடைய இடத்திற்கு, நேதுகாம: - கொண்டுபோகவேண்டுமென்கிற ஆசையை உடையவனாய், கிரவி- விலக்ஷணமான; ஸேதுபாதேயம்-நல்ல கட்டுசாதமாகிய பிரபத்தியை, விதே- ஏற்பாடுசெய்திருக்கிறார்.

(கருத்து) ஒருவன் ஊருக்குப்போகும்போது வருக்தப்படாமல் அந்த இடம் போவதற்கு வேண்டிய கட்டுஸாதத்தைக் கொடுத்து போ என்று சொல்லுவதுபோல, எம்பெருமான் தன்னிடம் நம்மை அழைத்துக்கொண்டு போக பிரபத்தி என்கிற உபாயத்தை ஏற்படுத்தி இருக்கிறான். மோக்ஷத்திற்கு உபாயங்களாகிய பக்தி முதலானவைகளைச் செய்யும் வழி தெரியாமலும், அதைச் செய்ய சக்தி இல்லாமலும், அவைகள் பலன் கொடுக்கிற வரையில் பொறுக்க முடியாமலும் இந்த காரணங்களால் அகிஞ்சநர்களாயிருந்து வருக்கப்படுகிற நம்மைப் பார்த்து கருணையினால் இதை உபதேசித்திருக்கிறான்.

குறிப்பு— அவரவர்களுக்கு வேண்டியவைகளை அடைவதற்கு உபாயங்களாகச் சொல்லப்பட்டவைகள் ஸூக்ஷ்மங்களாய்க் கண்டுபிடிக்க முடியாமலிருக்கிற வழிகள் போலிருக்கின்றன. காடுகள் நெருங்கி இருப்பதாலே அவைகளில் போவது கஷ்டம்; போய்ச்சேர்ந்து வருத்தம் நீங்கும்படியான இடங்கள் வெகு தூரத்தில் இருக்கின்றன. ஆகையாலே அவைகள் நம்மைப் போன்றவர்களுக்குத் தகுந்தவைகள் அன்று. அவைகளில்போய் கஷ்டப்பட வேண்டாம். இந்த இலகுவான வழியாய் போங்கள் என்று சொல்லி நமக்குக் கட்டுஸாதம் கட்டிக்கொடுத்திருக்கிறார் என்று கருத்து.

அவ:— இந்த அதிகாரத்தில் சொன்ன சரமசுலோகத்தின் அர்த்தமானது நல்ல ஸம்பிரதாயத்தின் வழியாய் வந்திருக்கிறது என்றும், அதைப் பெரிய ருஷிகளும் கொண்டாடுகிறார்கள் என்றும் கடைசி சுலோகத்தால் அருளிச்செய்கிறார்:—

வ்யாஸாத்யைர் யோகிபிஸ்ஸந்நிஹம் ஹ்ருதி
ஹரேஸ்தத்ஸம் ஶோகம் கேவந் தோகவேதவேதவிஶ்வா
ஸிதாயதம் விதே: | யேஷாம்தக்திஷ்ட தக்திஸ்ஸாபி
ஶ்வா ஸோவாநவத்க்ஷ்வீ வெஶம்வாயாநஶாநக
ஶ்ருஹூதய: ஸ்ருஷாஶ்ரீரங்கஸ்ரீந: || || ௭௦ ||

(ப-ரை) வ்யாஸாநாய - வியாஸருடைய வேதமாகிய, வயோதி - பாற்கடலிலிருந்து உண்டான, கௌஸ்துபநிபம் - கௌஸ்துபமணிபோல், ஹரே: ஹ்ருத்யம் - எம்பெருமானுக்குப் பிடித்ததாய் இருக்கிற, உத்தமம் ச்லோகம் - கடைசி சுலோகத்தை, கேசந - சில ஆசாரியர்கள், லோகவேதவ்யவஹ்ருதீ - உலக வழக்கத்தாலும், வேதத்தின் நடையாலும், விச்வாஸிதார்த்தம் - நம்பிக்கை உண்டுபண்ணப்பட்ட அர்த்தத்தை உடையது என்று, விது: - அறிகிறார்கள். யேஷாம் - எந்த ஆசாரியர்களுடைய, முக்திஸௌத - மோக்ஷமாகிற அரண்மனைக்குப் போகும் படியான, விதிவா - வீதிக்குக் கொண்டுபோய்விடும், ஸோபாநவத்ஸு - படிக்கட்டுக்கள் போலிருக்கிற, உக்திஷு - திவ்யஸூக்திகளில், (அவைகளைக் கேட்டு) அமீ - இந்த வைசம்பாயநசௌநகப்ரஹ்ருதய: - வைசம்பாயநர் சௌநகர் முதலான, ச்ரேஷ்டா: - உயர்ந்த பெரியோர்கள், சிர: கம்பிந: - ஸந்தோஷப்பட்டு நன்றாக இருக்கிறது என்று தலையை

(கருத்து) திருப்பாற்கடலில் உண்டான கௌஸ்துபம் என்கிற மணிபோல மஹாபாரதத்தினால் வெளிப்படுத்தப்பட்ட சரமசுலோகமானது எம்பெருமானுக்கு மிகவும் பிடித்ததாக இருக்கிறது. உலகத்தில் அறிவில்லாதவனும் தன்னைச் சரணமாகப் பற்றினவனை இரக்ஷிக்கிறான்; வேதத்திலும் சரணாகதி பண்ணினவனை இரக்ஷிப்பது பல இடங்களில் சொல்லி இருக்கிறது. இதைப் பார்த்து சரமசுலோகத்தில் சொன்ன விஷயம் எல்லாருக்கும் நம்பிக்கை உண்டாகும் என்று நம் ஆசாரியர்கள் சொல்லி இருக்கிறார்கள். அவர்கள் ஸூக்திகளைக் கேட்டு வைசம்பாயநர், சௌநகர் முதலான பெரிய ருஷிகளும் வியாஸர் அபிப்பிராயத்தை நன்றாய் அறிந்து சொல்லுகிறார்கள் என்று ஸந்தோஷப்படுகிறார்கள். அரண்மனைபோல் மோக்ஷம். அதற்குப் போகும் வழிபோல் பிரபத்தி. அந்த வழியில் கொண்டு சேர்க்கும் படிக்கட்டுகள்போல் ஆசாரியர்களுடைய ஸ்ரீஸூக்திகள். இவைகள் ஒருவனைப் பிரபத்திவரையில் கொண்டுபோய் விடுகின்றன.

குறிப்பு— திருப்பாற்கடலில் உண்டான ஐராவதம் முதலானவைகளை விட்டு கௌஸ்துபத்தையே எம்பெருமான் எடுத்துக்கொண்டான். அதுபோல சரமசுலோகம் எம்பெருமானுக்குப் பிடித்தது என்று கருத்து.

---

## 30-வது ஆசாரிய கிருத்தியாதிகாரம்.

---

அவ:— மேல் இரண்டு அதிகாரங்களாலே ஆசாரியன் செய்ய வேண்டிய வேலைகளையும், சிஷியன் செய்யவேண்டிய வேலைகளையும் அருளிச்செய்கிறார்—

அனைகளில் ஆசாரியகிருத்தியாதிகாரத்தில் முதல் சுலோகம்.

ஸமிஜிமஷிஷுாஸ்ருவ யாநெ ஸவ்வ த்ரியாநெஃ
ஸ்ருத விவிய வரீக்ஷாஸொயிதெ காவி வாத்ரெ।
ஸநவமணஉஸாயாநொஹிதஸெஹநாயஃ
வூதிஸதி நிரவாயம் ஸம்வூஉாயவூவீவஃ ॥ எக ॥

(பதவுரை) த்ரியாநெஃ - மூன்று இடங்களை இருப்பிடமாக உடைய எம்பெருமானுடைய, ஸுவ - எப்போதும் இருக்கிற, ஸவ்வ - ஸத்துவம் என்கிற ஒரே குணமுள்ள, யாநெ - இடத்தை, ஸமிஜிமஷிஷுஃ - அடையவேண்டும் என்கிற ஆசையையுடைய, ஆயஃ - ஆசாரியன், ஸ்ருத - வேதத்தினால் சொல்லப்பட்ட, விவிய - வெவ்வேறான, வரீக்ஷா - பரீக்ஷைகளாலே, ஸொயிதெ - தோஷம் இல்லாதவன் என்று அறியப்பட்ட, காவி வாத்ரெ - ஒரு பாத்திரமாகிய சிஷியனிடத்தில், ஸநவமண உஸாயாம் - தோஷம் கலப்பில்லாமல் நல்ல குணங்களை உடையவனாக இருக்கும் காலத்தில், நிரவாயம்- கெடுதியில்லாமல் தன்னிடம் வந்திருக்கிற, ஸம்வூஉாயவூவம் - ஸம்பிரதாயமாகிற விளக்கை, ஆஹிதஸெஹம் - வைக்கப்பட்ட கருணையோடு கூடினதாய், வூதிஸதி - கொடுக்கிறான்.

(கருத்து) ஒருவன் விளக்குப் பாத்திரத்தை அழுக்கு இல்லாமல் நன்றாய் அலம்பி, அதில் அழுக்கில்லாத திரியை வைத்து, எண்ணெயை வார்த்து விளக்கை ஏற்றுவதுபோல் ஆசாரியன்

வைகுண்டத்திற்குப் போகவேண்டும் என்கிற ஆசை உண்டான போது ஒரு சிஷ்யனைக் கண்டு பிடித்து, அவனிடத்தில் ஒருவித தோஷமும் இல்லை என்று பலபடியால் பரிசோதித்து, அவனிடத்தில் கருணையினாலேயே தனக்கு ஒருவிதக் குறைவில்லாமல் வந்திருக்கும் ஸம்பிரதாயத்தைக் கொடுத்துவிட்டுப்போகிறான்.

குறிப்பு— (1) விளக்குப் பாத்திரம்போல் சிஷ்யன். வர்த்தி போல் அவன் நல்ல குணமுள்ளவனாய் இருக்கும் காலம். 'தசா' என்கிற சொல்லுக்கு வர்த்தி என்றும், காலமென்றும் பொருள். எண்ணெய்போல் ஆசாரியன் கருணை. ஸ்நேஹம் என்கிற சொல்லுக்கு இந்த இரண்டும் பொருள்.

(2) ஆசாரியன் ஸம்பிரதாயத்தைத் தகாதவர்களிடம் கொடுக்காமல் வைத்திருந்து தான் இந்த லோகத்தை விட்டுப் போகும் போது ஒரு தகுந்த சிஷ்யனிடத்தில் கொடுத்துவிட்டுப் போக வேண்டியது. இப்படி ஸம்பிரதாயத்தை இரக்ஷிப்பதும் அதை நல்ல சிஷ்யனிடத்தில் கொடுத்துவிட்டுப் போவதும் ஆசாரியன் செய்யவேண்டிய வேலை.

(3) எம்பெருமான் இருக்கும் மூன்று இடங்களாவன— வைகுந்தமும், திருப்பாற்கடலும், ஸூரியமண்டலமும்.

---

அவ:— தெரியவேண்டிய விஷயங்களை சுருக்கமாக அறிய வேண்டுமவர்களுக்கு எப்படி ஆசாரியர்கள் உபதேசம் பண்ணுவார்கள் என்று அடுத்த சுலோகத்தாலே அருளிச்செய்கிறார்—

ப்ரத்யக் ஸ்வாந்ய விலக்ஷண: ப்ரக்ருதித ஸ்த்ராதா பதி
ஸ்தத்பர ஸ்தஸ்மிந் ந்யஸ்தபரஸ்ய ஹிததமம் தத்ஸேவ
வ்ருத்தி: ஸதா | இத்தம் தத்ஸ்வே வக்தவ்யம் இதி ந
ஜ்ஞேயா விஸ்த்ருதம் யதம் ஶ்ராயகேந ஶ்ராவயந்த: ஸ்வயம்
உபதிஷ்டவந்த: தேசிகா: ‖ எஉ ‖

(பதவுரை) (ஜீவன்) ப்ரக்ருதித:- பிரகிருதியைக் காட்டிலும், விலக்ஷண: - வேறானவனென்று, ப்ரத்யய: - அறியத் தகுந்தவன், தத்பர: - அவனைக் காட்டிலும் வேறான எம்பெருமான், த்ராதா - ரக்ஷகன், பதி: - சேஷி, தஸ்மிந் - அவனிடத்தில்,

ஆத்மராவணம் - தன்னை இரக்ஷித்துக்கொள்ளும் சுமையைக் கொடுப்பது, ஹிததமம் - மிகவும் அநுகூலமானது, தஸ்ய வ்ருத்தி: - அவனுக்குக் கைங்கரியம் செய்வது, பலம் - அதினுடைய பலம், இத்யம் - இப்படி, தத்வஹிதே - தத்துவம், உபாயம், புருஷார்த்த: - புருஷார்த்தம், இதி - இப்படி, த்ரயா விபக்தம் - மூன்று விதமாகப் பிரிக்கப்பட்டிருக்கிற, யத்தம் - தநத்தை, உத்தாதநம் - அவர்களிடத்தில் இரக்ஷிக்கவேண்டிய பொருளாகக் கொடுக்கப்பட்டிருக்கிற, ந: - நமக்கு, தயா தநா: - கருணையையே தநமாக உடைய, தேசிகா: - ஆசாரியர்கள், தாயகவத் - தகப்பன் சொத்து பிள்ளைக்கு வருவது போல், ஸ்வயம் தது: - தானே கொடுத்தார்கள்.

(கருத்து) ஜீவன் உடம்பையும் இந்திரியங்களையும் காட்டிலும் வேறு. அவனைக் காட்டிலும் வேறான எம்பெருமான் அவனை இரக்ஷிக்கவேண்டியவன். அவனுக்குச் சேஷி. அவனிடத்தில் ஜீவன் தன்னை இரக்ஷிக்கும் சுமையைக் கொடுக்கவேண்டியது இதுதான் அவனுக்கு மிகவும் நல்லது. இதனால் எம்பெருமானுடைய கைங்கரியம் கிடைக்கும் என்று நம்மை தாஸர்களாகக்கொடுக்கப்பட்ட ஆசாரியர்கள் வெறும் கருணையினாலேயே இந்த விஷயங்களைச் சொல்லிக்கொடுத்திருக்கிறார்கள்.

குறிப்பு— (1) இந்த சுலோகத்தில் சொன்ன விஷயங்கள் மூலமந்திரத்தின் அர்த்தம்.

(2) "புருஷார்த்த:" என்று பிரித்துச் சொன்னதால், அதுவே பிரதாநம் என்றும், மற்றை இரண்டும் அதற்காக வேண்டியது என்றும் காட்டப்படுகிறது.

---

அவ:— ஆசாரியன் செய்யவேண்டிய இன்னொரு வேலையை கடைசி சுலோகத்தாலே அருளிச்செய்கிறார்—

நிரவதிதயாதிவ்யோதந்தாத்ஸந்நிரஸ்தமலோ

நியமயதி யஸ்சிஷ்யாந் ஸிக்ஷாக்ஷமேண மஹாக்ஷமே: ।

ஸமரமஹிமா ராஜத்வாரம் வரீவரதா நவஸ

ந வரிஹ தாம் ஸம்யக்ஷேண ஸ்வவ்ருத்திரக்ஷதி ॥ ௭௩ ॥

(பதவுரை) யஃ - எந்த ஆசாரியன், நிரவயிதயா - அளவில்லாத கருணையாகிய, திவ்யாதஙம் - விலக்ஷணமான ஸமுத்திரத்தினுடைய, தராஙாநிரந்தராபிஃ - அலைகள்போலே தடை இல்லாமல் இருக்கிற, குணஸங்கதிஃ - நல்ல குணங்களைச் சேர்க்கும்படியான, ஶிக்ஷாகதிஃ - சிக்ஷை பண்ணுகிற வழிகளாலே, ஶிஷ்யாந் - சிஷியர்களை, நியமயதி - நியமநம் பண்ணுகிருனே, ஸஃ - அந்த ஆசாரியன், ஆத்யகுரோஃ - முதல் குருவான எம்பெருமானுடைய, ஆஜ்ஞாபாரம்பர்யவாந் - பரம்பரையாய் உபதேசிக்கப்பட்டு வருகிற ஆஜ்ஞைக்கு உட்பட்டவனுய், தாந் பரம் - அவர்களை மாத்திரமன்று, ஹ - சிக்ஷைபண்ணும்போது, தத்க்ஷண - அந்த வழியாய், ஸ்வம் - தன்னையும் கூட, அபிரக்ஷதி - இரக்ஷித்துக்கொள்ளுகிருன்.

(கருத்து) ஆசாரியன் தன்னுடைய சிஷியர்களுக்கு நல்ல குணங்கள் வருவதற்காக அவர்களைச் சிக்ஷிக்கவேண்டியது. இதுவும் தயையினுடைய வேலை. அப்படிச் செய்வதினுலே சிஷியர்களை மாத்திரம் இரக்ஷிக்கிருனில்லை. தன்னையும் அந்த வேலையினுலேயே இரக்ஷித்துக்கொள்ளுகிருன்.

குறிப்பு— ஆசாரியன் ஸம்பிரதாயமாகிற விளக்கைத் தகுந்த ஒரு சிஷியனிடம் கொடுக்காமல் திருநாட்டுக்குப் போகக்கூடாது என்று எம்பெருமான் உத்திரவு செய்திருக்கிருன். ஆகையால் அதற்கு உட்பட்டு எவனுவதொரு சிஷியனைக் கண்டு பிடித்து, அவனுக்கு நல்ல குணங்களைப் புகவிட்டு அவனிடம் ஸம்பிரதாயத்தைக் கொடுக்கவேண்டியது. இப்படிச் செய்வதினுலே தன்னையும் எம்பெருமானுடைய ஆஜ்ஞையை மீறினுன் என்கிற குற்றம் இல்லாமல் இருக்கும்படி இரக்ஷித்துக்கொள்ளுகிருன்.

---

## 31-வது சிஷ்ய கிருத்தியாதிகாரம்.

---

அவ:— உபதேசத்தைப் பெறத் தகுந்த சிஷியனுக்கு இருக்கவேண்டிய குணங்களை முதல் சுலோகத்தாலே அருளிச் செய்கிருர்—

ஆசார்யே(அ)ஹ்ராஸபக்திஸ்தத்ப்ரஶம்ஸாதிஶீல:
ப்ரபூதகௌரவவ்ருத்திஸ்தத்ஸ்வவாஸ்த்வாதிகே(அ)பி ।
குணவதி விநியோக்தும் பாலயந் ஸம்ப்ரதாயம்
க்ருதவிதநவத்யவ்ருத்தி: கிம் ந விந்தேந்நிதாநம் ॥ ௭௪ ॥

(பதவுரை) ஆசார்யே(அ)ஹ்ராஸபக்தி:- ஆசாரியனிடத்தில் குறைந்துபோகாத பக்தியை உடையவனும், தத்ப்ரஶம்ஸாதிஶீல: - அவரைக் கொண்டாடுவதையே ஸ்வபாவமாக உடையவனும், தத்ஸ்வ - அவருடைய சொத்துக்கள், வாஸ்த்வாதிகே(அ)பி - வீடு முதலானவைகளிலும், ப்ரபூதகௌரவவ்ருத்தி: - மிகுந்த கௌரவமுள்ளவனும், குணவதி - நல்ல குணங்களை உடைய சிஷ்யனிடத்தில், ஸம்ப்ரதாயம் - ஸம்பிரதாயத்தை, விநியோக்தும் - கொடுப்பதற்காக, பாலயந் - இரக்ஷித்துக்கொண்டிருக்கிறவனும், க்ருதவித் - ஆசாரியன் செய்த உபகாரத்தை நினைத்துக் கொண்டிருக்கிறவனும், அநவத்யவ்ருத்தி: - குற்றமில்லாமல் எம்பெருமானுடைய ஆஜ்ஞைகளையும், அநுஜ்ஞைகளையும் செய்துகொண்டிருக்கிறவன், நிதாநம் - எம்பெருமானாகிய நிதியை, ந விந்தேத் கிம் - அடையமாட்டானா ?

(கருத்து) நல்ல சிஷ்யன் தன்னுடைய ஆசாரியன் செய்த உபகாரத்தை எப்போதும் நினைத்துக்கொண்டு அவனிடத்தில் இருக்கும் பக்தி குறையாமல் அவனைக் கொண்டாடிக்கொண்டு அவனைச் சேர்ந்தவைகளில் பிரீதி உள்ளவனாக இருக்கவேண்டியது. தனக்குக்கிடைத்தஸம்பிரதாயத்தை ஒரு நல்லசிஷ்யனிடத்தில் கொடுக்கிறவரையில் அதை இரக்ஷித்துக்கொண்டு வரவேண்டியது. எம்பெருமானுடைய ஆஜ்ஞாகைங்கரியங்களையும் அநுஜ்ஞாகைங்கரியங்களில் தன்னால் செய்யக் கூடியவைகளையும் செய்துகொண்டிருக்கவேண்டியது. இப்படி இருந்தால் அவன் எம்பெருமானிடம் நிச்சயமாய் போய்ச்சேருவன்.

குறிப்பு— ப்ரஶம்ஸாதி என்பதில் 'ஆதி' என்கிற சொல்லாலே ஆசாரியனுக்கு வேலை செய்யவேண்டியது காட்டப்படுகிறது.

𑌅𑌧𑍍𑌯𑌾𑌸𑍀𑌨𑌤𑍁𑌰𑌙𑍍𑌗𑌵𑌕𑍍𑌤𑍍𑌰𑌵𑌿𑌲𑌸𑌜𑍍𑌜𑌿𑌹𑍍𑌵𑌾𑌗𑍍𑌰𑌸𑌿𑌂𑌹𑌾𑌸
𑌨𑌾𑌦𑌾𑌚𑌾𑌰𑍍𑌯𑌾𑌦𑌿𑌹 𑌦𑍇𑌵𑌤𑌾𑌂 𑌸𑌮𑌧𑌿𑌕𑌾𑌮𑌨𑍍𑌯𑌾𑌂 𑌨 𑌮𑌨𑍍𑌯𑌾
𑌮𑌹𑍇 । 𑌯𑌸𑍍𑌯𑌾𑌸𑍌 𑌭𑌜𑌤𑍇 𑌕𑌦𑌾𑌚𑌿𑌦𑌜𑌹𑌦𑍍𑌭𑍂𑌮𑌾 𑌸𑍍𑌵𑌯𑌂
𑌭𑍂𑌮𑌿𑌕𑌾𑌂 𑌮𑌗𑍍𑌨𑌾𑌨𑌾𑌂 𑌭𑌵𑌿𑌨𑌾𑌂 𑌭𑌵𑌾𑌰𑍍𑌣𑌵𑌸𑌮𑍁𑌤𑍍𑌤𑌾𑌰𑌾𑌯
𑌨𑌾𑌰𑌾𑌯𑌣𑌃 ॥ ॥ ௭௫ ॥

(ப-ரை) 𑌅𑌧𑍍𑌯𑌾𑌸𑍀𑌨𑌤𑍁𑌰𑌙𑍍𑌗𑌵𑌕𑍍𑌤𑍍𑌰 - ஹயக்கிரீவன் எழுந்தருளியிருக்கிற, 𑌵𑌿𑌲𑌸𑌤𑍍 - விளங்குகிற, 𑌜𑌿𑌹𑍍𑌵𑌾𑌗𑍍𑌰𑌸𑌿𑌂𑌹𑌾𑌸𑌨𑌾𑌤𑍍 - நுனி நாக்காகிற ஸிம்ஹாஸநத்தை உடைய, 𑌆𑌚𑌾𑌰𑍍𑌯𑌾𑌤𑍍- ஆசாரியனைக்காட்டிலும், 𑌇𑌹 - இந்த லோகத்தில், 𑌅𑌨𑍍𑌯𑌾𑌂 𑌦𑍇𑌵𑌤𑌾𑌂 - வேறு தேவதையை, 𑌸𑌮𑌧𑌿𑌕𑌾𑌂 - உயர்ந்ததாக, 𑌨 𑌮𑌨𑍍𑌯𑌾𑌮𑌹𑍇 - நாம் எண்ணவில்லை, 𑌮𑌗𑍍𑌨𑌾𑌨𑌾𑌂 𑌭𑌵𑌿𑌨𑌾𑌂 - ஸம்ஸாரத்தில் முழுகியிருக்கிறவர்களுடைய, 𑌭𑌵𑌾𑌰𑍍𑌣𑌵𑌸𑌮𑍁𑌤𑍍𑌤𑌾𑌰𑌾𑌯 - ஸம்ஸாரமாகிய ஸமுத்திரத்தைத் தாண்டுவிக்கிற வேலைக்காக, 𑌅𑌸𑍌 𑌨𑌾𑌰𑌾𑌯𑌣𑌃 - அந்த எம்பெருமான், 𑌅𑌜𑌹𑌦𑍍𑌭𑍂𑌮𑌾 - தன்னுடைய பெருமையைக் கொஞ்சங்கூட விடாதவனாய்க்கொண்டு, 𑌕𑌦𑌾𑌚𑌿𑌤𑍍 - ஒருகாலத்தில், 𑌯𑌸𑍍𑌯 𑌭𑍂𑌮𑌿𑌕𑌾𑌂 - எந்த ஆசாரியனுடைய வேஷத்தை, 𑌸𑍍𑌵𑌯𑌂 - தானே, 𑌭𑌜𑌤𑍇 - அடைகிறானே.

(கருத்து) ஆசாரியனே எல்லா தேவதைகளைக் காட்டிலும் உயர்ந்தவன். எல்லாரையும் ரக்ஷிக்கிற எம்பெருமானும் ஸம்ஸார ஸமுத்திரத்தில் மூழ்கிக் கிடக்கிறவர்களைக் கரையேற்றுவதற்காக ஆசாரியனாக வருகிறான். அப்படி வராமல் ஒருவனுக்கு மோக்ஷத்தைக் கொடுக்க அவனாலும் முடியாது. ஆசாரியன் செய்யும் உபதேசங்களெல்லாம் அவர் நுனி நாக்கில் எழுந்தருளி இருக்கும் ஹயக்ரீவன் உபதேசங்களே.

குறிப்பு— (1) எம்பெருமானிடத்தில்போல ஆசாரியனிடத்திலேயும் அளவில்லாத பக்தியைப் பண்ணவேண்டும் என்று காட்டப்படுகிறது.

குறிப்பு— (2) "𑌅𑌨𑍍𑌯𑌾𑌂" என்பதால் லக்ஷ்மீபதியான எம்பெருமானையும் ஆசாரியனைக் காட்டிலும் உயர்ந்த தேவதையாக எண்ணமாட்டோம் என்று கருத்து.

(3) "ஸஹாவிஸ" என்பதற்கு யாத்ருச்சிகம் முதலான ஸுக்ருதம் உண்டாகும் காலத்தில் என்று கருத்து.

(4) ஸம்ஸாரிகளைக் கரையேற்றுவதற்காக எம்பெருமானே ஆசாரியரூபமாக வருகிறபடியினால் அவருடைய ரூபத்தைக் காட்டிலும் ஆசாரியரூபம் உயர்ந்தது என்று ஏற்படுகிறது. அது உயர்ந்ததாக இல்லாவிட்டால், அந்த ரூபத்தை எடுத்துக்கொள்ளவேண்டியதில்லையே.

## 32-வது நிகமநாதிகாரம்.

முதல் சுலோகம்.

கரபதரிதவிம்ப: கஶ்சிதாசார்யத்ருஷ்ட்யா
　ஶிதிலிதநிகிலமோஹோ மந்த்ரரத்நாதிஹார்த: ।
ஸத்குணவிஷயஸித்தௌ ஸம்ப்ரதாயம் வ்யயஸ்ய
　ஸாவஶிதவிதஹாரீ ஸூரிப்ருந்தாபிநந்த்ய: ॥௭௬॥

(ப-ரை) கஶ்சித் - ஒருவன், ஆசார்யத்ருஷ்ட்யா - ஆசாரியனுடைய கடாக்ஷத்தாலே, கரபதரிதவிம்ப: - உள்ளங்கையில் வைத்த இலந்தைப் பழம்போல் காட்டப்பட்ட தத்துவத்தையும், உபாயத்தையும், புருஷார்த்தத்தையும் உடையவனாய், ஶிதிலிதநிகிலமோஹ:- எல்லா மயக்கங்களும் போனவனாய், மந்த்ரரத்நாதிஹார்த: - மூலமந்திரம் முதலான மூன்று ரஹஸ்யங்களின் அர்த்தத்தைத் தெரிந்து அநுபவித்துக்கொண்டு, ஸத்குணவிஷயஸித்தௌ - நல்லகுணமுள்ள சிஷ்யன் அகப்பட்டபோது, ஸம்ப்ரதாயம் - ஸம்பிரதாயத்தை, வ்யயஸ்ய - அவனிடத்தில் கொடுப்பதற்காக, ஸாவஶிதவிதஹாரீ - நெல்லைப்பொருக்கி, அதனால் ஜீவிக்கிறவர்கள்போல், நல்ல சரித்திரம் எங்கெங்கே அகப்படுமோ அங்கங்கே அதை எடுத்துக்கொண்டு இருந்து, (வைகுந்தம் போய்) ஸூரிப்ருந்தாபிநந்த்ய:- நித்தியஸூரிகளால் கொண்டாடத் தகுந்தவனாக ஆகிறான்

குறிப்பு— இது நிகமநாதிகாரத்தில் முதல் சுலோகமான படியால் முன் அதிகாரங்களின் அர்த்தங்கள் சுருக்கமாக இதில் காட்டப்படுகின்றன. "ஶுவாய-ுஷ்ரூஷ்ூ ா" என்பதால் குருபரம்பராஸாரத்தின் அர்த்தமும்; 'விஶூ:' என்பதால் தத்துவங்களைக் காட்டுகிற முதல் ஆறு அதிகாரங்களின் அர்த்தமும், உபாயத்தைக் காட்டுகிற மேல் ஆறு அதிகாரங்களின் அர்த்தமும், புருஷார்த்தத்தைக் காட்டுகிற மேல் பத்து அதிகாரங்களின் அர்த்தமும்; "ஃ-ஷிதநிவிரெொஹ:" என்பதால் அதிவாதங்களால் உண்டாகும் கலக்கங்களைத் தெளிவிக்கிற இரண்டாவது பாகத்தின் அர்த்தமும்; "ஃ-ஸெஃநூஷிஹொஜ:" என்பதாலே மூன்றுவது பாகத்தின் அர்த்தமும்; மூன்றுவது பாதத்தாலே ஆசாரியகிருத்தியாதிகாரம், சிஷ்யகிருத்தியாதிகாரம் இவைகளின் அர்த்தமும் காட்டப்படுகின்றன.

---

கடைசி சுலோகங்கள்.

ஊகி யதிராஜஃஹாநஸ
வரிஃஐவரிவாஹவாஸிதாம விவத |
விவுயவரிஷஹிஷெவ்ாம
வெஷாஞொஷயநஸம்ஷாயஸாயா॥ ॥ எஎ ॥

(பதவுரை) ஊகி - இப்படி, யதிராஜ - ஸ்ரீபாஷியகாரருடைய, ஃஹாநஸ - மடைப்பள்ளியினுடைய, வரிஃஐவரிவாஹ - வாஸனையின் பெருக்காலே, வாஸிதாம - வாஸனையூட்டப்பட்ட, விவுயவரிஷஹிஷெவ்ாம - நல்ல அறிவுள்ளவர்களின் கூட்டத்தாலே அநுபவிக்கக்கூடிய, வெஷாஞொஷயந - தர்க்கசாஸ்திரத்தில் உதயநரைப்போல, வேதாந்தத்தில் பிரஸித்தி அடைந்திருந்த கிடாம்பி ஆச்சானுடைய, ஸம்ஷாய ஸாயாம - ஸம்பிரதாயமாகிய அமிருதத்தை, விவத - பாநம் பண்ணுங்கோள்.

(கருத்து) அமிருதத்தை எப்படி தேவர்கள் பாநம் பண்ணி சாவில்லாமையை அடைந்தார்களோ, அப்படியே கிடாம்பியாச்சானுடைய ஸம்பிரதாயத்தை ஸேவித்து அறிவுள்ளவர்கள் மோக்ஷத்தை அடையலாம்.

குறிப்பு– (1) ஆச்சான் ஸ்ரீபாஷ்யகாரருக்கு மடைப்பள்ளி கைங்கரியம் செய்துவந்தார். ஆகையினால் அவருடைய ஸம்பிர தாயத்திற்கு மடைப்பள்ளி வாஸனை இருக்கிறது என்று காட்டப் பட்டது.

(2) தானே இனிமையாயிருக்கும் ஒரு போஜநவஸ்துவுக்குத் திருமணப்பாறினால் போக்கியத்தை அதிகப்படுவதுபோல், ஆச் சான் ஸம்பிரதாயத்திற்கு ஸ்ரீபாஷ்யகாரருடைய பக்ஷபாதமும், கரைபுரண்ட கிருபையும், அதன் விஷயமாக வந்த உபதேசமும் சேர்ந்திருப்பதால் அது மற்ற ஸம்பிரதாயங்களைக் காட்டிலும் உயர்ந்தது என்று காட்டப்படுகிறது.

---

(4) "வரிஷ்டக:" என்பதற்கு இந்த அமிருதத்தை நாலு பேருடன் கூடஇருந்து அநுபவிக்கவேண்டியது என்று கருத்து.

அவ— இந்தக் கிரந்தத்தை ரஸம் தெரியாதவர்கள் ஆதரியாவிட்டால் ஒரு குறைவும் இல்லை என்று அருளிச் செய்கிறார்—

கலக்வணகணாஸ்ஸ்வாத்³யே காமாஸ்த்ரஸ்ய நிஜாங்குரே ।
நிம்ப³வ்ருத்திபி⁴ருத்க்ஷிப்தே ந சூத: பரிதப்யதே ॥ ௭௮ ॥

(ப-ரை) கலக்வணகண - இனிமையான குரலை உடைய குயில் கூட்டங்களாலே, ஸ்வாத்³யே - ருசியோடு சாப்பிடத் தகுந்த, காமாஸ்த்ரஸ்ய - மன்மதனுக்குப் பாணமாயிருக்கிற, நிஜாங்குரே - தன்னுடைய தளிரானது, நிம்ப³வ்ருத்திபி⁴: - வேப் பிலையைக்கொண்டு பிழைக்குமவைகளால், உத்க்ஷிப்தே - தள்ளப் பட்டபோதிலும், சூத: - மாமரமானது, ந பரிதப்யதே - வருத்தப்படுகிறதில்லை.

(கருத்து) மாமரத்தின் தளிரைக் கோகிலம் ஸந்தோஷமாய் சாப்பிடுகிறது. அதை வேப்பிலையையே சாப்பிடுகிறவைகள் அவைகளை வேண்டாமென்று தள்ளிவிட்டால் மாமரத்திற்கு வருத்தமில்லை. அப்படியே இந்த கிரந்தத்தை ரஸம் தெரிந்த வித்வான்கள் அநுபவிப்பார்கள். ரஸம் தெரியாதவர்கள் ஆதரிக்காவிட்டால் நான் வருத்தப்படமாட்டேன் என்று ஸ்ரீதே சிகன் கருத்து.

அவ- இந்த கிரந்தத்தை எழுதினது ஒரு பிரயோஜநத்தை உத்தேசித்து அன்று என்றும், இப்படி தன் சிஷியர்களுமிருக்கவேண்டும் என்றும் ஒரு சுலோகத்தாலே அருளிச்செய்கிறார்:-

𑌨𑌿𑌰𑍍𑌵𑌿𑌷𑍍𑌟𑌂 𑌯𑌤𑌿𑌸𑌾𑌰𑍍𑌵𑌭𑍌𑌮𑌵𑌚𑌸𑌾𑌮𑌾𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌭𑌿𑌰𑍍𑌯𑍌-
𑌵𑌨𑌂 𑌨𑌿𑌰𑍍𑌦𑍍𑌵𑌨𑍍𑌦𑍍𑌵𑍇𑌤𑌰𑌪𑌾𑌰𑌤𑌨𑍍𑌤𑍍𑌰𑍍𑌯𑌨𑌿𑌰𑌯𑌾 𑌨𑍀𑌤𑌾𑌸𑍍𑌸𑍁𑌖𑌂
𑌵𑌾𑌸𑌰𑌾𑌃 । 𑌸𑍍𑌵𑍀𑌕𑍃𑌤𑍍𑌯 𑌸𑌤𑌾𑌂 𑌪𑍍𑌰𑌸𑌤𑍍𑌤𑌿𑌮𑌸𑌤𑌾𑌂
𑌗𑌰𑍍𑌵𑍋𑌽𑌪𑌿 𑌨𑌿𑌰𑍍𑌵𑌾𑌪𑌿𑌤𑌶𑍍𑌶𑍇𑌷𑌾𑌯𑍁𑌷𑍍𑌯𑌪𑌿 𑌶𑍇𑌷𑌿𑌦𑌂
𑌪𑌤𑌿𑌦𑌯𑌾𑌦𑍀𑌕𑍍𑌷𑌾𑌮𑍁𑌦𑍀𑌕𑍍𑌷𑌾𑌮𑌹𑍇 ॥ ॥ ௭௯ ॥

(ப-ரை) 𑌯𑌤𑌿𑌸𑌾𑌰𑍍𑌵𑌭𑍌𑌮𑌵𑌚𑌸𑌾𑌂 - யதிஶ்ரேஷ்டரான ஸ்ரீபாஷியகாரர் ஸூக்திகளுடைய, 𑌆𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌭𑌿𑌃 - அடிக்கடி படிப்பதாலே, 𑌯𑍌𑌵𑌨𑌂 - யௌவநமானது, 𑌨𑌿𑌰𑍍𑌵𑌿𑌷𑍍𑌟𑌂 - அநுபவிக்கப்பட்டது, 𑌨𑌿𑌰𑍍𑌦𑍍𑌵𑌨𑍍𑌦𑍍𑌵𑍇𑌤𑌰𑌪𑌾𑌰𑌤𑌨𑍍𑌤𑍍𑌰𑍍𑌯𑌨𑌿𑌰𑌯𑌾𑌃 - மற்றவர்களுக்கு உட்பட்டிருப்பதாகிய நரகம் இல்லாதவைகளான, 𑌵𑌾𑌸𑌰𑌾𑌃 - நாட்கள், 𑌸𑍁𑌖𑌂 𑌨𑍀𑌤𑌾𑌃 - ஸுகமாகப் போக்கப்பட்டன, 𑌸𑌤𑌾𑌂 - பெரியோர்களுடைய 𑌪𑍍𑌰𑌸𑌤𑍍𑌤𑌿𑌂 - அநுக்கிரஹத்தை, 𑌸𑍍𑌵𑍀𑌕𑍃𑌤𑍍𑌯 - ஒப்புக்கொண்டு, 𑌅𑌸𑌤𑌾𑌂 - அஸத்துக்களுடைய, 𑌗𑌰𑍍𑌵𑌃 𑌅𑌪𑌿 - கர்வமும், 𑌨𑌿𑌰𑍍𑌵𑌾𑌪𑌿𑌤𑌃 - அடக்கப்பட்டது, 𑌶𑍇𑌷𑌾𑌯𑍁𑌷𑌿 𑌅𑌪𑌿 - பாக்கி இருக்கும் ஆயுஸ்ஸிலும், 𑌶𑍇𑌷𑌿𑌦𑌂𑌪𑌤𑌿 - சேஷிகளான தம்பதிகளுடைய, 𑌦𑌯𑌾𑌦𑍀𑌕𑍍𑌷𑌾𑌂 - தயையினால் செய்யப்பட்டிருக்கிற "மரணகாலத்தில் மோக்ஷத்தைக் கொடுக்கிறேன்" என்கிற ஸங்கல்பத்தை, 𑌉𑌦𑍀𑌕𑍍𑌷𑌾𑌮𑌹𑍇 - எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறோம்.

குறிப்பு-(1) உலகத்தில் வெகுஜநங்கள் யௌவநகாலத்தை ஸ்திரீகளை அநுபவித்துக்கொண்டு போக்குகிறார்கள். ஸ்ரீதேசிகன் ஸ்ரீபாஷியகாரரின் ஸ்ரீஸூக்திகளைப் பலகாலும் ஸேவித்துக் கொண்டு தன் யௌவநத்தைப் போக்கினார். ஆவிருத்தி என்கிற சொல்லானது வடமொழியில் பெண்பாலைச் சொல்லுவதாலே, இவ்விதமான ஸ்திரீகளுடன் யௌவநகாலம் கழிந்தது என்று காட்டப்படுகிறது.

(2) ஸ்ரீதேசிகன் ஒருவருக்கும் உட்படாமலிருந்து காலத்தைச் செலவழித்தார். ஆகையினால் அவர் ஸ்ரீபாஷ்யம் முதலான கிரந்தங்களை ஸேவித்துக் கொண்டிருந்த ஸுகத்துக்குத் துக்கக் கலப்பில்லை.

(3) கிரந்தம் எழுதிச் சிலருடைய அதிவாதங்களைக் கண்டித்தது பெரியோர்களுடைய ஸந்தோஷத்திற்காக; தனக்கு ஒரு பெருமை வரவேண்டும் என்று எழுதப்பட்டது அன்று.

---

அவ- வரவர நாஸ்திகத்தனம் அதிகமாவதால், இந்தக் கிரந்தத்தை ஸேவிப்பார் இல்லாமல் போகுமோ என்கிற ஸந்தேஹத்தைத் தீர்ப்பதற்காக ஒரு ச்லோகம் அருளிச்செய்கிறார்—

ச்ரத்தாவாந் நிசிதமதிரநஸூயு:
ஸத்ஸம்ப்ரதாயபரிசுத்தமநா: ஸதர்த்தீ |
ஸங்கேதபீதிரஹிதஸ்த்ருணவல்லகுஸக்த:
ஸந்நீதிமநுவிதாஸ்யதி சாச்வதீம் ந: || அ௦ ||

(பதவுரை) ச்ரத்தாவாந் - வேதம் சொல்லுகிற விஷயங்கள் எல்லாம் உண்மை என்று தீர்மானம் உள்ளவனும், நிசிதமதி: - கூர்மையான புத்தியை உடையவனும், அநஸூய: - குணங்களைவிட்டு தோஷத்தைப் பார்க்கும் ஸ்வபாவம் இல்லாதவனும், ஸத்ஸம்ப்ரதாயபரிசுத்தமநா: - நல்லஸம்பிரதாயத்தைப் பெற்று அதனால் ஒரு குற்றமுமில்லாத மனதை உடையவனும், ஸதர்த்தீ - நல்ல விஷயங்களைத் தேடுகிறவனும், ஸங்கேதபீதிரஹித: - கட்டுப்பாட்டுக்குப் பயப்பட்டு அதற்கு உட்பட்டில்லாதவனும், த்ருணவத் - புல்லைப் போல் அல்பங்களான பெயர், லாபம், பூஜைமுதலானவைகளில், லகுஸக்த: - பிடிப்பில்லாதவனும் இருக்கிற ஒருவன் பின் காலத்தில் உண்டாய், ந: - நம்முடைய, சாச்வதீம் - எப்போதுமிருக்கிற, ஸந்நீதிம் - நல்ல மார்க்கத்தை, அநுவிதாஸ்யதி - அநுஸரித்து நடப்பன்.

(கருத்து) சுலோகத்தில் சொன்ன நல்ல குணங்களை உடைய ஒருவன் வருங்காலத்திலும் பிறந்து இந்தக் கிரந்தத்திலுல் வெளியிட்டிருக்கிற பழைமையான நல்ல மார்க்கத்தை அநுஸரிப்பன். அந்த குணங்களாவன— (1) முதலில் வேதம் சொல்லுவது எல்லாம் உண்மையே என்கிற விசுவாஸம்; (2) இதை எடுத்துக் கொள்ளவேண்டியது; இதைத் தள்ளவேண்டியது என்று பகுத்து அறியும்படியான கூர்மையான புத்தி; (3) இந்த புத்தியைக் கொண்டு தோஷங்களைத்தள்ளி குணங்களையே பார்க்கும் தன்மை; (4) நல்ல ஸம்பிரதாயமுடைய ஆசாரியனிடம் போய் விஷயங்களை நன்றாய்த் தெரிந்து சுத்தமான மனது உள்ளவனாய் இருப்பது; (5) நல்ல ஸங்கதிகளையே தேடுவது; (6) இவ்வளவு இருந்தும் மற்றவர்களின் கட்டுப்பாட்டுக்குப் பயந்து அதற்கு உட்படாமை; (7) தெரிந்த ஜ்ஞானத்தைக் கொண்டு நல்ல பெயர் முதலானவைகளைத் தேடாமை.

---

அவ— இந்தக் கிரந்தமானது எம்பெருமானை அறிந்த பெரியோர்களுக்கு ஸம்மதமாயிருக்கும் என்று கடைசி சுலோகத்தால் அருளிச்செய்கிறார்—

ரஹஸ்யத்ரயஸாரோऽயம் வேங்கடேஶவிபஶ்சிதா ।
ஶரண்யதம்பதிஜ்ஞானாம் ஸம்மத்யை ஸமக்ருஹ்யத ॥ ॥ ௮௧ ॥

(பதவுரை) அயம் ரஹஸ்யத்ரயஸார꞉ - இந்த மூன்று ரஹஸ்யங்களின் அர்த்தமானது, ஶரண்யதம்பதிஜ்ஞானாம் - சரண்யர்களாகிய தம்பதிகளை அறிந்த பெரியோர்களுடைய, ஸம்மத்யை - ஒப்புக்கொள்ளுதலை ஏற்கும்படி, வேங்கடேஶவிபஶ்சிதா - வேங்கடேசன் என்கிற நல்ல அறிவுள்ளவராலே, ஸமக்ருஹ்யத - சேர்த்து எழுதப்பட்டது.

குறிப்பு– (1) 'வேங்கடேச' என்கிற சொல்லுக்குத் திருவேங்கடமுடையான் என்றும் பொருளாகையால், அவன் ஸ்ரீதேசிகனைக் கொண்டு இந்தக் கிரந்தத்தை எழுதினன்; அவர் அப்படி எழுதுவதற்கு எழுத்தாணிபோல் இருந்தார் என்று காட்டப் படுகிறது.

(2) "பாராஶர்யப்ரப்ருதிவிதிதா:" என்பதாலே, விஷ்ணுபுராணம் எழுதின பராசரரும், வேதத்தைத் தமிழில் எழுதின நம்மாழ்வாரும் காட்டப்படுகிறார்கள்.

கவிதார்கிகஸிம்ஹாய கல்யாணகுணஶாலிநே ।
ஶ்ரீமதே வேங்கடேஶாய வேதாந்தகுரவே நம: ॥

---

ஶ்ரீமதே வேதாந்தராமாநுஜமஹாதேஶிகாய நம: ॥
ஶ்ரீமதே கோபாலார்யமஹாதேஶிகாய நம: ॥
ஜ்ஞாநவைராக்யாநுஷ்டாநஶேவதயே
ஶ்ரீமதே வேதாந்தராமாநுஜமஹாதேஶிகாய நம: ॥
ஶ்ரீமதே நிகமாந்தமஹாதேஶிகாய நம: ॥



ஸ்ரீ:

# சுலோகங்களின் அகராதி.

